## கோலேந்தியோன் குறிப்புகள்

**பெயர்: சையத் அமீருல்லாஹ் சை.மு.**

**கல்வி: இளங்கலைத் தமிழ்**

**தொடர்பு எண்:8124843993**

**மின்னஞ்சல் முகவரி: syedameer032003@gmail.com**

**வலைப்பூ: pudhukkavidhai.blogspot.com**

**நான் வெறும் ‘ந’வாகத்தான் இருந்தேன்**

**நாமறியாத பேராற்றலின் அருளாலும்**

**நின் அன்பாலும்**

**என்முன் இரட்டைக்கொம்பு சேர்த்தாய்**

**’பிழைப்’பிலிருந்து தப்பித்துக்**

**கொஞ்சகாலம் ‘வாழ்க்கை’யை உணர்ந்தோம்**

**நீ பிரிந்தாய்**

**புறக்கண்களால் எட்டமுடியாத தொலைவு**

**உன் நினைவால்**

**என்முன் சேர்ந்த இரட்டைக்கொம்பும் நீங்கிலது**

**பின்பு துணைக்கால் தேய்ந்து விட்டது**

**காலம்**

**இரட்டைக்கொம்பு சேர்த்த உன் நினைவை**

**நீக்கவில்லையென்றால்**

**என் வாழ்வில் அஃது**

**இணைக்கொம்பாகிவிடுமென்றது**

**நின் நினைவோடு**

**இணைக்கொம்பை ஏற்றேன் விரும்பி**

**எல்லாவற்றையும் களைந்து**

**நான் சிந்தித்தபோது**

**நீ என்னை**

**மேல்விலங்குச் சுழியேற்ற**

**’ந’ ஆக்கியிருந்தாய்**

**என்னுரு இனி என்றும் மாறாது…**

**நன்றியென் கிளவி கடந்தோர்**

**சொல்லிலடங்காதான்**

**உள்ளத்தொளி**

**தமிழென் பன்முகள்**

**அகமெழுதிய ஆங்கிலம்**

**உள்ளுணர்த்தும் கவிதை**

**இலக்கிய முன்னோடிகள்**

**ஈன்று புறந்தந்தார்**

**சான்றோனாக்கியார்**

**உதிரத்தொன்றியான்**

**எழுத்தறிவித்தோர் யாவரும்**

**திருவள்ளுவர் பெயர்சொல்லிடும்**

**பெருமைநிறை அறிவாலயம்**

**தண்டமிழ்த்துறையின் வண்டமிழ்ப்பெரியோர்**

**என் எழுத்து மாடத்திற்குச்**

**சித்திரம் தீட்டிய**

**முனைவர் இரா.கலைச்செல்வி அம்மா**

**முனைவர் மு.நடராஜன் அய்யா**

**என்னுயர்வினில் தன்னுளம் மகிழ் தோழர்கள்**

**நாட்டுப்புறக் கதையினை**

**நகரத்தானுக்கு நவின்ற**

**என் தோழன்**

**தே.கௌரிசந்திரன்**

**காரிகை மன ஆழியின் ஆழத்துள**

**உணர்ச்சி முத்தின் ஒளியை**

**இச்சிதடனுக்குப் புரியவைத்த**

**என் தோழி**

**இ.ஜெயந்தி**

**விசைப்பலகையில் விரல்வைக்க**

**இசைவளித்த சரித்திரர்**

**முனைவர் சு.சுவாமிநாதன் அய்யா**

**மெத்த அன்புடைய**

**புத்தகசாலை உதவியாளர்**

**பெ.அசோகன் அண்ணா**

**எழுத்துதனை இனிதேந்தும் ஏடுகள்**

**ஏடுதனில் எனையேந்தும் எழுத்துக்கள்**

**எழுத்துக்களைச் செதுக்கு உளிக்கோல்(கள்)**

**தனிமை**

## கருத்துரை

அன்னைத்தமிழில் அழகுறப்பாடிய அருமை மாணவரின் அற்புதக் காப்பியம் பெருநேயக்காலம். இது காலமெல்லாம் காத்திருக்கும் காதல் சொல்லும் சொல்லோவியம்.உள்ளத்துள் உறைந்திருக்கும் உன்னதக் காதலை உணர்வுள்ளோர் உணரும்படி உன்னதமாய் உரைத்திருக்கும் உரைகல். பட்டை தீட்டாத வைரம் ஒளிருமோ? தீட்டாத வைரத்தின் ஒளிச்சுடராய் ஒளிர்கிறது பெருநேயக்காலம்.

உள்ளத்துள் மலர்ந்திருக்கும், நறுமணத்தால் நிறைந்திருக்கும் காதல் மலரைக் கண்டநாள் முதல் கடைசிநாள் வரை மாணவர் வடித்திருக்கும் கவி அமுது. இராமலிங்கர் பாடிய நற்கருப்பஞ் சாற்றினிலே தேன்கலந்து, பால்கலந்து, செழுங்கனித்தீஞ் சுவைகலந்து, ஊன்கலந்து, உயிர்கலந்து உவட்டாமல் இனிக்கும் மாணிக்கவாசகரின் தீஞ்சுவைப்பாடலாய் இனிக்கிறது.

இறப்பாகவும் நிகழ்வாகவும் எதிர்வாகவும் உருமாறிய காலக்கணங்கள் நம் கவிஞனின் எழுதுகோலால் காதல் கணங்களாய் மிளிர்கின்ற விந்தையைக் காணலாம் இக்காப்பியத்துள்.

பாட்டுக்கொரு புலவனைப் படித்துத் தோய்ந்த மாணவனின் கைவண்ணமும் அவனைப்போல் சுவைபுதிதாய், சொல் புதிதாய், வளம்புதிதாய், சோதியாய் மிளிர்கிறது. தீந்தமிழ்ச் சொற்கள் அங்கங்கே திகட்டாத தித்திப்பாய்க் கையாளப்பட்டுள்ளது.

**அன்புடை நெஞ்சம் கலந்த அகப்பாடலாதலால் புதுமையோடு மரபும் காப்பியத்துள் ஊடாடியுள்ளது. பெரும் கவிஞர்கள் பாடி மகிழும் மரபுக்கவிதை எம் மாணாக்கனின் தணியாத தமிழார்வத்தால் காதலோடு கைவசப்பட்டுள்ளது. திரையிசைப் பாடலும் கவிதையாய் ஆங்காங்கே ஒலிக்கிறது. உரைநடையும் ஒய்யாரமாய் நடையிட்டிருக்கிறது. கவிஞனின் குரலாய்க் காதல் குறள் பிறந்திருக்கிறது.**

**இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், பாங்கியர்கூட்டம், அறத்தொடு நிற்றல் என அகத்திணைகளின் அக உணர்ச்சியைக் குன்றாமல் குன்றெனத் தந்துள்ளார். பேரரசனும் மண்டியிடுவான் பெருங்கவிஞன் முன். 'பெருநேயக்காலம்' படைத்த எம் கவிஞன் காலத்தை வென்ற கவிஞனாக நிலைத்திருப்பான்.**

**வாசித்துப் பாருங்கள் எம் மாணவனின் கவித்திறனை. உங்கள் சிந்தையிலும், செயலிலும் நிறைந்திருக்கும் தமிழும், தணியாக் காதலும்.**

**அன்புடன்,**

**முனைவர் இரா.கலைச்செல்வி,**

**தமிழ்த்துறைத் தலைவர்,**

**திருவள்ளுவர் அரசு கலைக்கல்லூரி**

**இராசிபுரம் - 637401.**

## அணிந்துரை

நவீனத் தமிழ் இலக்கியப் படைப்பாளர்களில் சிலர் தங்களது பள்ளிப்பருவக் காலங்களிலேயே எழுதத் தொடங்கியதாகக் கூறுவதுண்டு. மகாகவி பாரதி மிகச்சிறு வயதிலேயே கவிபாடும் ஆற்றல் பெற்றவர். அவரைத் தொடர்ந்து இன்றும் உருவாகிவரும் இளம் படைப்பாளர்கள் பலரும் பள்ளிப்பருவத்திலேயோ கல்லூரிக்காலத்திலேயோ எழுதத் தொடங்கியவர்கள்தான். அவ்வகையில் இளங்கலை பயிலும் காலத்திலேயே குறுங்காவியம் எழுதியுள்ளார் மாணவர் சையத்.

காதலைப் பாடாத கவிஞன் இல்லை. பள்ளிப்பருவத்தில் அரும்பும் காதல், காவியத்தின் பாடுபொருளாக இருக்கிறது. இக்காப்பியத்தினை வெண்பா, குறள் வெண்பா, ஆசிரியம், விருத்தம், புதுக்கவிதை, உரைநடை எனப் பல வடிவங்களையும் பயன்படுத்தி எழுதியிருக்கிறார். இளங்கலை பயிலும் காலத்திலேயே யாப்பைச் சிறப்பாகக் கற்றுத்தேர்ந்து காவியமொன்று இயற்றியமைக்காக இவரது முயற்சியைப் பாராட்டலாம்.

இந்நூலுக்குள் உவமைகள், உருவகங்களைச் சிறப்பாகக் கையாண்டுள்ளார். ‘தொல்காப்பியத்தைக் கற்ற உரையாசிரியர்கள் போல்’ என்னும் உவமையும், ‘காத்திருப்புப் புயலில் கரைந்துகொண்டிருந்தது அவன் மனமேடு’ என்னும் உருவகமும் இதற்குச் சான்று.

இலக்கியத்தின்மீது இவருக்குள்ள ஈடுபாட்டுக்கு இவர் இந்நூலுள் பயன்படுத்தியுள்ள அருஞ்சொற்களே சான்று. இலக்கியத் தொடர்களை இடையிடையே பயன்படுத்தியுள்ள

**பாங்கு, அறிவியல் செய்திகளை ஆங்காங்கே தொடுத்துள்ள தன்மை, தமிழறிஞர்களைக் குறித்துப் பதிந்துள்ள தகவல்கள் ஆகியன இவரது கல்விப் புலமையை காட்டும். ஈறிலி முதலான கலைச்சொற்களைப் பயன்படுத்தியுள்ளதோடு புதிய சொல்லாக்க முயற்சிகளிலும் ஈடுபட்டுள்ளார்.**

**’நான் உடைந்து இதை எழுதினேன்’ எனத் தொடக்கமே வாசிக்கத் தூண்டுகிறது. ‘நீ கதையாகு/ நான் கவிதையாகிறேன்/ நாம் இயற்றுவோம்/ முற்றுப்புள்ளியில்லாக் காப்பியத்தை’ என முடிக்கிறார்.**

**சோதனைகள் செய்துகொண்டே இருக்கவேண்டும் என நினைக்கும் இவர் எதிர்காலத்தில் சாதனைகள் பல செய்வார். எழுதாமல் ஒருநாளும் இருக்கமுடியாது எனக் கூறும் இவர் நிறைய சாதிப்பார் என்பதில் ஐயமில்லை.**

**அன்புடன்,**

**முனைவர் மு.நடராஜன்,**

**உதவிப்பேராசிரியர்,**

**தமிழ்த்துறை,**

**திருவள்ளுவர் அரசு கலைக்கல்லூரி,**

**இராசிபுரம் - 637401.**

## கோலேந்தியோன் கூற்று

இந்தக் காப்பியம் எழுத

எனக்கு மைத்துளிகள் மட்டுமல்ல

கண்ணீர்த்துளிகளும் அதிகம் செலவாயின

அவற்றுள் ஆனந்தக்கண்ணீரும் அடக்கம்

எனக்காக

என் எழுதுகோல் நடந்த

பாதச்சுவடுகள் இவை

ஓராண்டாகக்

கொஞ்சம் கொஞ்சமாய்ப் பிறந்த

தமிழ்க்குழந்தை

நெஞ்சத்தின் நிகழ்வுகளெல்லாம்

செஞ்சொல்லால் கோக்கக் கோக்க

என்னையே விலையாகக் கொடுத்து

இக்காப்பியத்தை வடித்தேன்

காப்பியத்தே கற்பனைகளிருக்கலாம்

காப்பியம் முழுவதும் கற்பனையன்று

**இக்காப்பியத்துட் பல்வரிகள்**

**இறந்துபோன**

**என் மனத்தினின்று எழுந்தவை**

**அவற்றில் உயிரோட்டமிருந்தால்**

**உண்மையே காரணம்**

**நான் உடைந்து**

**இதை எழுதினேன்**

**இதைச் சேர்த்து**

**என்னை அறிந்துகொள்ளுங்கள்**

**சுற்றியிருக்கும்**

**சுள்ளெறும்புகளால் வதைக்கப்படும்**

**வண்ணத்துப்பூச்சிகளின்**

**சொல்லாத வலிகளைச் சொல்லும்**

**காப்பியமிது**

**காதற்கதிரவனின்**

**கோடிக்கிரணங்களுள்**

**ஒற்றைக் கதிரின்**

**பயணக்கதை இது**

**மெய்காணா உயிர்களைச் சேர்த்துவைத்த**

**உடம்படுமெய்யை**

**உயர்த்திப் பாடியதால்**

**உதித்தது**

**இதைக்**

**கண்களால் படித்தால்**

**உள்ளம் பேசுவதும்**

**உள்ளத்தால் படித்தால்**

**கண்கள் பேசுவதும்**

**இதன் வெற்றியாகட்டும்**

**உள்ளத்தன்புடன்,**

**சையத் அமீருல்லாஹ் சை.மு.**

**15.02.2023**

## நேயம் முகிழ்த்த நினைவுகள்

**அவளும் அவனும் யாராகியரோ?**

**ஆராய வேண்டாம்**

**அவளும் அவனும் அன்பாகினரே**

**அஃதே இங்கு நிகழ்ந்தேறப்போகும்**

**பிரபஞ்ச நிகழ்வு**

**நீலத்தை உடுத்திக்கொள்பவர்கள்**

**கடலும் வானும் மட்டுமல்லர்**

**எம் தமிழ்கூறு நல்லுலகின்**

**பள்ளி மாணவர்களும்தான்**

**அந்த நீலப்பறவைகளுக்குள்தான்**

**மெய்க்காதலை மேதினிக்குணர்த்தப் பிறந்த**

**அவளும் இவனும் அடங்கியிருந்தனர்**

**தன் பள்ளிக்காலத்தில்**

**கடைசி சில திங்கள்**

**இன்னும் மிச்சமிருந்தது பலருக்கும்**

**ஆமாம், இவர்களுக்கும்**

**ஆறு ‘கண்டங்களிலிருந்து’**

**அவர்களைத் தப்புவிக்க**

**ஆசான்கள் அரும்பாடுபட்டு உழைத்த உழைப்பின் கூலி**

**அவர்களிடம் வர**

**ஈரீராறு வாரங்கள்**

**பொறுமைபூணவேண்டியிருந்தது**

**இக்குறுங்காலத்தில்தான்**

**ஓர் அருங்காப்பியம்**

**காலத்தின் கைகளில்**

**கோலும்**

**மையும்**

**ஏடுமாகத்**

**தன்னை எழுதிக்கொள்ளத்தொடங்கிற்று**

**அவர்களிருவரும்**

**அறியாமலேயே**

**ஒரு தவத்துக்கு**

**ஆயத்தமாகிக்கொண்டிருந்தனர்**

**கரும்பலகைக் கவசத்துடன் பிறந்த சுவரொன்று**

**தனக்குத்துணையாக**

**இருபுறமும் நின்ற சுவர்களோடு**

**தன்னெதிரிலும் நின்ற ஒரு சுவரையும்**

**முறைத்தபடியிருந்தது**

**ஆசான்கள் வகுப்பெடுக்கும் அழகில்**

**வான்மேகத்துளிகளும்**

**வெயிலும்**

**மரத்திலைகளும் மயங்கி**

**உள்ளேவரக்கூடாதென**

**மேலேயும் ஒரு சுவர் படுத்திருந்தது**

**கரும்பலகைச்சுவருக்கும் எதிர்ச்சுவருக்கும்**

**ஏற்பட்ட கோபத் தனலில்**

**மேசைகள் உருகிவிடக்கூடாதெனக்**

**காற்றுவந்து தணிவிக்கச்**

**சாளரங்கள்திறந்த மனத்துடன்**

**பக்கச்சுவர்கள் உதவிசெய்தன**

**அதிலொருசுவர்**

**இன்னும் கொஞ்சம் சிந்தித்து**

**கல்வி கற்பிப்போரும் கற்போரும்**

**உள்ளேவந்து செல்ல**

**கதவிரண்டைத் திறந்து**

**கல்விக்கு வாயிலானது.**

**தாம் கவிதையாகப்போவதறியாமல்**

**இரண்டு உள்ளங்கள்**

**அந்த வகுப்பறையைத்தான்**

அழகுபடுத்தியிருந்தன

இருவரும் ஆங்குதானிருந்தனரெனினும்

இருவரின் கண்ணும் பேச்சும்

ஒன்றையொன்று நேரே

அதிகம் சந்திக்காமலேயே இருந்தன

இருவரும் ஒருவரையொருவர் அறிவர்

தன்பெயரிருந்த வருகைப்பதிவேட்டின்

இன்னொரு பெயராக

அமைதி,

தன் பிம்பத்தைக் காண

அவளைக் கண்டால் போதும்

ஆனால்

புயற்கடல் அவள் மனத்தின்முன்

சிறுதுளி நீர் சொட்டிய

குவளைகொள்நீரே

காதல் எழுதத் தெரிந்தும்

எழுதாத கவிஞன்

காதல் மெல்லிசைப் பாடல்களை

இதழ், நா, பல், அணம் தொழிற்படுத்த

**மிடறு அதைக் கொஞ்சம் எழிற்படுத்த**

**மூச்சில் சுமந்துவந்து**

**காற்றில் கலக்கவிட்டு**

**அதைக்கேட்கும் செவிகளின் கிழமையாளர்கள்**

**கருத்தைக் கேட்கத்**

**தன்காதுகளைத் தீட்டிவைத்திருப்பான்**

**குரல் நன்றாயிருக்கிறதெனச் சிலர் சொல்வதால்**

**அவன் கொஞ்சம் நெஞ்சழியாது, பாடுவான்**

**அவள் கண்கள் அவனைக் காணும்**

**அவள் செவி அவன்குரல் கேட்கும்**

**அவன் கண்கள் அவளைக் காண்பதரிது**

**அவன் செவி அவள்குரல் கேட்பதரிது**

**வகுப்பில் சக மாணவியாக இருந்தவள்**

**தன் வாழ்க்கைக்குக் கேண்மையான**

**ஒரு தோழியாக மாறும் மாற்றம்**

**அவர்களின் உள்ளம் அறிந்தும்**

**மனம் அறியா நுண்மையுடன்**

**நிகழ்ந்துகொண்டிருந்தது**

**அவன்,**

**சில கொள்கைகள் கொண்டவன்**

**அவற்றுள் ஒன்று**

**தேர்வுப்போர் நடைபெற்றுக்கொண்டிருக்கும்போது**

**தன் அறிவுப்படையை**

**யாருக்கும் தந்துதவுவதில்லை**

**பிறருடைய அறிவுப்படையைத்**

**தானும் வேண்டுவதில்லை**

**ஏனென்றால்**

**தன்படை வென்றால்**

**அது படைகொண்டவனின் வீரத்திற்கு இழுக்காகும்**

**தன்படை தோற்றால்**

**அது தன் மரியாதையை அழுக்காக்கும்**

**தேர்வுநேரத்தில் அவன்**

**மூடிய புத்தகம்**

**மற்றநேரங்களில்**

**திறந்த புத்தகம்**

**அதுமட்டுமன்று**

**தான் தேர்வுக்காவல்பணிபுரிந்தால்**

**எந்தக் கள்வனையும் விடமாட்டான்**

**இவனுடைய இக்கொள்கைகளால்**

**சிலர்முகம் செம்மைபூத்தாலும்**

**இவன் அவற்றை விடுவதாக இல்லை**

**ஒர் அரிதான நேர்ச்சி**

**அவர்களுள் நிகழ்ந்தகாலை**

**அவனுடைய ‘தன்னலக்’கொள்கை குறித்து அவள் வினவ**

**முற்கூறிய ‘வழுவமைதி’யைக் கூறினான்**

**பின்னொருநாள்**

**அவள் தேர்வுக்காவல்பணிபுரிந்தபோது**

**கள்வர்களைக்கண்டு கைவிலங்கிட்டாள்**

**அவன்சொல்**

**அவள்செயலில் வெளிப்பட்டதுகண்டு**

**உள்ளூர மகிழ்ந்தான் அவன்**

**பின்னொருநாள்**

**முன்னர்க்கூறிய வகுப்பறையின்பின்**

**என்றேனும் நிகழ்ச்சிகள் நடைபெறுமென்ற நம்பிக்கையில்**

**பல பருவங்களைத் தாங்கித் தூசோடு மண்படிந்து**

**விழாமலேயே பலபுண்களை ஏற்றுப்**

**பல்லோரின் கல்வெட்டாகத் திகழ்ந்த மேடை(?) ஒன்றில்**

**அவன் படியிலமர்ந்திருக்க**

**அவள் மேடையைக் கடந்துகொண்டிருக்க**

**கடந்திருந்தவளை நிற்கச்செய்தது**

**கவிஞனின் குரல்,**

**‘காலை உணவு உண்டனையோ?’**

**அவளது குரலும் கையும் முகமும்**

**‘இல்லை’ என்ற மறுமொழியை**

**அவன் செவிக்கும் கண்ணுக்கும் சொல்ல**

**இவன் மொழிகிறான்,**

**‘காலை உணவு தவிரேல்!’**

**தவிர்ந்தால்**

**இரவெல்லாம் இரைக்காய் ஏக்குற்ற குடல் ஏமாறும்**

**இரவெல்லாம் உறக்கத்தில் போக்கிட்ட உடல் சோர்வாகும்**

**ஆதலால்,**

**இனிக் காலை உணவு தவிராதே!’**

**பின்னர் அவன் சிந்திக்கிறான்**

**‘அவள் காலை உணவு தவிர்ந்ததன்**

**காரணம் அறியாமல்**

**அறிவுரை கூறுகிறோமே!’**

**காலம்,**

**இறப்பாகவும்**

**நிகழ்வாகவும்**

**எதிர்வாகவும்**

**உருமாறியபடியுள்ளது.**

*******

**ஒரு காரிக்கிழமை**

**கதிரவன் உச்சந்தலையில் துளையிட்டு**

**ஊட்டம் உறிஞ்சும் ஓர் மதியப்பொழுது**

**சீர்பெற்ற சிறப்புவகுப்பு அன்று**

**ஏன் சிறப்புவகுப்புகள் சிறப்பாகின்றன?**

**சொல்கிறேன் கேண்மின்!**

**ஒரே ஆசிரியர்-ஒரே பாடம்**

**முதுகை வருத்தும் கல்லுப்பொதி**

**அன்று பஞ்சுமூட்டையாக நொய்ந்திருக்கும்**

**முகமும் அகமும் நக**

**நண்பர்களுடன் நெடுநேரம் சொல்லாட**

**நல்லதொரு வாய்ப்புக்கிட்டும்**

**காலையில் விரைவாக வந்தால்**

**குறைந்தது ஒருமணிநேரம்**

**வியர்வை சொட்ட விளையாடலாம்**

**அப்போது படிப்பு?**

**அதற்கும் கொஞ்சம் இடமுண்டு**

**அற்றை வகுப்பு முடிந்தது**

**வயிறு நிறைந்தது**

**வலக்கரம் குழாய்நீரில் குளித்துமுடித்தபிறகு**

**கைக்குட்டையால் விரல்துவட்டிக்கொண்டது**

**“பாடப்புத்தகங்களோடு உரையாட விரும்புவோர்**

**பள்ளியிலிருக்கலாம்**

**விருப்பமில்லாதவர்களும்**

**விரைந்து வீடுபோய்ச் சேரவேண்டியவர்களும்**

**பள்ளியின் வாயில்தாண்டித்**

**தன் பாதங்களைப் படர்விக்கலாம்”**

**இசைவளிக்கப்பட்டது**

**இல்லஞ்செல்லப் பல்லோர்**

**புள்ளாய்ப் பறந்துவிட**

**அவளும் இவனும்**

**தனிமையும் வேனிற்காற்றும்**

**இவர்களை இடையூறுசெய்யாமல்**

**இன்னுமொரு சிறப்புவகுப்பும்**

**பள்ளியால் பாதுகாக்கப்பட்டுக்கொண்டிருந்தன**

**வகுப்பறைக்கு முன்னுள்ள வைப்பறை**

**வேரடித்தளம் நிலந்துளைக்க**

**விளையாட்டுப் பொருட்களைத்**

**தன்னிழலின்கீழ்த் தங்க இடங்கொடுத்திருந்தது**

**அதன் கதவுகளின் வெளியே**

**காற்றுப்பெண் மண்மகரந்தம் தெளித்துவைத்த**

**சிறுகல்பூமுற்றம்**

**முற்றத்தின் மூலையில்**

**செதுக்கப்படக் காத்திருக்கும் கற்பாறையைப்போல்**

**நெடுநாள் தவஞ்செய்து நிற்கிறது**

**மஞ்சள் பூசி நிற்கும்**

**ஒரு சீமைக்காரைத்தூண்**

**அவன்**

**அதன்மீது சாய்ந்தான்**

**அதற்கெதிரிலமைந்த**

**கதவுபதித்த சுவரில்**

**அவள் சாய்ந்தமர்ந்தாள்**

**பனுவற்பொதியை**

**இருவரும் புறத்தொதுக்கி**

**பொதியினின்று ஒரு பாடநூல் பிடுங்கி**

**அதன்புறம்பார்த்துச்**

**சரியான நூல்தான் எனச்**

**சமிக்ஞை கிடைத்தவுடன்**

**சரசரக்க அதன் பக்கங்களினூடே**

**வரிச்சாலையில் கண்புரவியால்**

**உள்ளம் சுமக்கப்பட**

**விரைந்தோடினர்**

**புத்தகங்களோடு மௌனமாகப் பேசியவர்கள்**

**தமக்கிடை சொல்லாடத் தொடங்கினர்**

**காற்றும் தன் கடமை உணர்ந்து**

**இவர்களுடைய சொற்களை ஏந்தத் தொடங்கியது**

**தலைவன் வினவுகிறான்,**

**“நின் முகத்தில் ஏனோ**

**சோகம் படர்ந்திருக்கிறது?**

**நின்னைக் காணும்போதெல்லாம்**

**நின் அமைதிக்கு**

**உன் உளத்துள வருத்தமே காரணமோ என்று**

**எனக்கு எண்ணத்தோன்றுகிறது**

**நின் நெஞ்சுள துயர்களை**

**என்னிடம் பகிர விரும்பினால்,**

**பகிரலாம்.**

**இன்பங்கள் பகிரப்படுகையில் இரட்டிப்பாகின்றன**

**துன்பங்கள் பகிரப்படுகையில் பாதியாகின்றன”**

**தலைவியும்**

**தன்னுள்ளத்தின்**

**துன்பச்சுமையைப் பகிர்கிறாள்**

**அவற்றை ஈண்டு நும்மிடம் பகிரல்**

**ஏற்புடைத்தோ என**

**என் அறச்சிந்தனையின் அறைகூவல்**

**என் எழுத்தறிவினை யோசிக்கவைக்கிறது**

**நம்பிக்கை உறையிலிடப்பட்டு**

**மறைசெய்தி என்னும் முத்திரையுடன்**

**பரிமாற்றப்பட்ட தலைவியின் உள்ளக்கிடக்கை**

**எந்நாளும் காக்கப்படும்**

**தலைவன் வினவிய அதே கேள்வி**

**தலைவியின் குரலால்**

**தலைவனின் காதுகளில்பட்டு**

**அவன் நெஞ்சப்பகுதியில்**

**மின்காந்தக் கதிர்வீச்சுப் புயலேற்படுத்தியது**

**அஃதவனின் நினைவுப்புவியைத் தாக்கினாலும்**

**உள்ள உறுதியென்னும் காந்தப்புலம்**

**அக்கதிர்வீச்சினின்று உயிரைக் காத்தது**

**தன் துயர்க்கருப்பூரத்தில்**

**சொற்றீ கொளுத்தி**

**ஆவியாக்கினான்**

**ஏனோ தெரியவில்லை**

**இத்தனைநாள் துயர்க்கல்லாக இருந்தது**

**அவளிடம் பகிர்ந்தபோது**

**கருப்பூரமாக மாறிய விந்தையென்ன?**

**அவளும் அவனும் உரையாடியதை**

**இருவருடைய உள்ளமும்**

**இடையில் புகுந்த காற்றும் தவிர்த்து**

**வேறியாரும் அறிந்திலர்**

**இப்பூவுலகில்**

**தலைவன் சொல்கிறான்**

**“நான் உங்களிடம் ஒன்று சொல்லவேண்டும்”**

**தலைவியின் மனத்துள ஆர்வம்**

**அவள் முகத்தில் முழுமையாகப் பரவியிருக்க**

**“என்ன?” என்கிறாள்**

**தலைவனின் நெஞ்சமுரசு**

**வேகமாக அறையப்படுகிறது**

**அவனுடைய தயங்குகிளவிகள்**

**சொற்றொடர்களாகின்றன**

**“நான் உங்களைக் காதலிக்கலாமென நினைத்திருந்தேன்**

**ஆனால்,**

**உங்களுடைய நிலைஎன்னவென்று அறியாமல்**

**இதனை வெளிப்படுத்துதல் முறையாகாது**

**ஆதலால் இத்தனைநாள்**

**சொல்லாதிருந்தேன்”**

**இதனைச் சொன்னதும்**

**எழுத்தேந்தவியலாத அளவுக்கு**

**மகிழ்ச்சியுண்டாயிற்று அவனுக்கு**

**“நான் தரையில் அமர்ந்திருக்கிறேன்**

**அதேநேரத்தில்**

**காற்றில் மிதந்திருக்கிறேன்”**

**என்றான் அவளிடம்**

**அவனுடைய வாழ்க்கை ஏட்டில்**

**இதுவரை எழுதப்படாத அனுபவக்கவிதை**

**வைர வரிகளால் எழுதப்பட்டது**

**அவளிடம் இவ்வாறு உரைத்தபொழுது**

**அவளுடைய முகத்தில்**

**வியப்பொடு விரவிய புன்னகை**

**ஒளிகூட்டுகிறது**

**சிறிதுநேரம்**

**சொல்லாடல் தொடர்கிறது**

**அவள்,**

**“என்னைப் பற்றிக் கவிதையோவியமாகத் தீட்டித்தரவியலுமா?”**

**என்றனள்**

**அவன் உள்ளம் அதனை மகிழ்வாய்க் கொண்டாடிற்று**

**சூரியப்பெண் நாணி**

**மலைக்கரங்களால் முகம்மூடுகிறாள்**

**பொருமுக எழினியான முகிற்கூட்டம்**

**அப்பெண்ணின் நாண ஒளியாலே சிவக்கிறது**

**அல்லன அகத்தினின்று நீக்கி**

**நல்லன அகத்தில் நிறைத்து**

**நங்கை வீட்டுக்கேகுகிறாள்**

**இவளிடம் இவன் துயர்பகிர்ந்ததற்கும்**

**பிறரிடம் இவன் துயர்பகிர்ந்ததற்கும்**

**வேறுபாடுண்டு**

**பிறரிடம் கூறும்போது**

**இவன் துயர்கள் கேட்கப்பட்டன**

**இவளிடம் கூறியபின்**

**இவன் துயர்கள் நீங்கிவிட்டன**

**அவனுடைய மனம்**

**நுண்ணொளித்துகளாகச் (photon)**

**சுமையிழந்தது**

**அவளிடம் பேசியபின்**

**பெண்களின் பொறுமையின்மீதும்**

**மௌனங்களின் பின்னுள்ள மனவலிமையின்மீதும்**

**அவனுக்குள்ள மதிப்புப் பன்மடங்காயிற்று**

**அற்றைநாள்**

**புறந்தூய்மை நீரான் அமைய**

**அகந்தூய்மை வாய்மையால் உண்டாயிற்று**

*******

**கரிக்கோன்முனை தாளொடு உரச**

**ஒரு கவினுறு கவிதை காகிதமேறிற்று**

**அந்த வரிகளின் நிரலில்**

**ஒரு வரி,**

**"*என்றும் என் நல்தோழி நீயே!*"**

**எழின்மணிக் கவிதையில்**

**அவன்மனம் ஏந்திக்கொண்டு எடுத்தலைந்த**

**எண்ணத்தினின்று அழியாப் பிளாட்டின வரி**

**அக்கவிதை வரிகளின்மேல்**

**அவள் பார்வையால் நடைபோட்டாள்**

**“நன்றாயிருக்கிறது”**

**கவிஞனுக்கோ**

**ஆயிரம் பக்கப் பாராட்டுச்சான்றிதழ்**

**தன்மீது வாசிக்கப்படக் கேட்டதுபோல்**

**அத்துணைப் பேருவகை**

**அஃதே**

**அவன் அவளைப் பாடிய முதற்கவி**

**பின்னும் பல பிறந்தன**

**ஒருநாளில்**

**இருவரின் பேச்சுக்களும்**

**காசினியின் காலக்காற்றில் கரைந்துகொண்டிருக்க**

**அவன் அவளிடம்**

**அவனுக்குப் பிடித்த,**

*“உயிரே! உயிரே!*

*வந்து என்னோடு கலந்துவிடு”*

**என்னும் திரைப்பாடலை**

**உயிரும் உளமும் உணர்வும் குரல்கலந்து**

**அவள் கோட்டமில் மனத்தில்**

**இசைநிறைத்தான்**

**“நன்றாக உணர்ந்து பாடுகிறாய்”**

**அவன் கண்களை நனைத்த**

**அவன் மனத்துள் முதலிடம் வகித்த**

**சொல்-இசை-தீங்குரல் சேர்க்கையன்றோ**

**அக்கவின் பாடல்!**

**நன்றாகத்தான் பாடியிருப்பான்**

**அவள்முன் அரங்கேற்றப்பட்டதால்**

**அழகுறத்தான் பாடியிருப்பான்**

**பொதுத்தேர்வுகள்**

**மெதுவாய் நடந்த காலப்புரவியின் முதுகமர்ந்து**

**“விரைந்து செல்க” என**

**விரட்டிக்கொண்டிருந்தன**

**காலப்புரவியும் கடிதேகிற்று**

***

**அவன் மனத்தின் நிலையைத்**

**தானே தாளில் நிறைத்தான்**

**தடுமாறு உள்ளம் திறந்தான்**

*"இருவிழியை இமைமூட*

*பெருந்துயரான் மனம்நோக*

*மணற்கிடந்த மீன்போல*

*மனம் தவித்திருந்தனன் யான்*

*முழுத்துணிவுந் திரட்டி*

*உளத்துளதை மொழிமொழியச்*

*சில்கிளவி பகிர்ந்தபின்*

*சிறகு முளைத்தது சிந்தைக்கு*

*மாலைவேளை*

*ஒரு முல்லையாய்*

*மலர்ந்து மணந்தது நெஞ்சம்*

*தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்கிறேனா?*

*அல்லது*

*மனமுவந்து ஏற்றுக்கொள்கிறேனா?*

*இப்புதிருக்குத் தீர்வென்னை?*

*சில்நாளில் சிறகடித்துப் பறக்கும் கிளிக்குப்*

*பழத்தோட்டம் என்ன சொந்தமா?*

*என்னறிவு அறிந்திலது*

*பின்னாளில் அறியக்கூடும்*

*அந்நாள் வரை அமைதியற்றிருப்பான்*

*இவன்"*

***

**பள்ளிவாழ்வு என்னும் பெருநூலின்**

**கடைசி சில பக்கங்கள்**

**எழுதப்பட்டுக்கொண்டிருந்த ஓர்பொழுதில்**

**தன்னுடன் பயிலும்**

**ஒவ்வொரு மனத்துள்ளும்**

**தாம் எத்தகைய தாக்கத்தை**

**உண்டாக்கியிருக்கிறோம் என்று**

**அந்தந்த மனத்தின் உரிமையாளர்களால்**

**காகிதங்களில் எழுத்துருக்களாய்ப்**

**பதிக்கப்பெற்று பரிமாறப்பெறும்**

**அந்நாளில்**

**அவன், தன் தோழர்களெல்லாம்**

**தன் சிந்தையில் சிறப்புற்ற விதத்தைத்**

**தாள்களில் எழுதித்**

**தக்கோர்க்களித்தான்**

**தோழருள் ஒருவரும்**

**தோழியருள் இருவரும்**

**தன் மனத்திடத்து**

**அவனின் நிலையினை**

**அரும்பொன்னினும் அரிய நண்பொடு**

**வெண்டாள்கள் வியக்க**

**எழுத்தாக்கியிருந்தனர்**

**அத்தோழியருள் ஒருத்தி**

**அவள்,**

**அவன் அவளிடத்து**

**“எனக்குப் பின்னூட்டம்(feedback) எழுதித்தரவியலுமா?”**

**எனக்கேட்க,**

**அவளோ விரைந்து**

**வெண்தாள் தேடி**

**கோன்மையால்-**

**கொண்ட கேண்மையால்**

**உள்ளத்துள யாவற்றுக்கும்**

**எழுத்துவடிவமீந்தாள்**

**அவனோ,**

**அவள் என்ன எழுதுகிறாள் என்றறிய**

**தன் விடைத்தாள் திருத்தும்**

**ஆசிரியர் அருகுநின்ற**

**ஒர் மாணவன்போல்**

**ஆர்வத்தொடும்,**

**அவள் சிந்தையின் சிந்தனைகளை**

**அவள் முகவழி அறிந்துகொள்ள முயல்பவனாக**

**தன்னித்திடத்திலேயே தன்னை**

**மிக்க சிரத்தையொடு**

**நங்கூரமிட்டுக் காத்திருந்தான்**

**அதற்கு இன்னுமோர் ஏதுண்டு**

**அவள் சிந்தனையில் ஆழ்ந்திருக்குங்காலை**

**அவளைக்காணும் அவன் கண்கள்**

**வேறுபுறம் திரும்புவதற்கான**

**மூளையின் கட்டளைகளைப்**

**புறக்கணித்துப் புறந்தள்ளிவிடும்**

**தன் 'மதிப்பெண்'ணத்தைக் காண**

**அத்தாளை அவள் தர**

**இவன் பெற்றனன்**

**அந்தக் காகிதம்**

**அவன் உள்ளக்கல்லில் பொறிக்கப்பட்டது**

**மறதியென்னும் பேரரிப்பால்**

**பலபகுதிகள் அழிந்துபடினும்**

எவ்வூழியிலும் அழியாத

ஒருசில வரிகள்

இடர்களில் தவிக்கையில் எழுப்பும்

“அம்மா…” என்னும்

அனிச்சைச் சொல்லேய்ப்ப

அவன் நெஞ்சில் ஆழப்பதிந்தன

அவ்வரிகளாவன

“நீ என்னிடம் அன்று சொல்லியதை

ஒருவருடம் முன்னதாகவே சொல்லியிருக்கலாம்

என்று தோன்றுகிறது”

எத்துணைப் பொருள்பொதிந்த வரி!

அவன் தன் கவிஞக் கருவம் அழிந்தனன்

தன்னைத் தோழனாக ஏற்றுக்கொண்ட

சில தோழிகளின் நண்பு

அவனுக்குக் கிடைக்கப்பெற்றிருக்கிறது

தன்னைத் தன் வாழ்வின்

ஓர் இன்றியமையாத இடத்தில்

யாரும் வைத்துப்பார்க்கத்

தயங்குவார்களென

**அவனும் அறிந்தவனே**

**ஆனாலும்**

**“தன்னையும்” நேசிக்க ஒருவர் இருக்கிறார் என்ற**

**‘வானினும் உயர்ந்த’ உவகை**

**அவன் நெஞ்சைச்**

**சிறிதுநேரம்**

**இயங்கவிடாமற் செய்தது**

**தானும்**

**ஒரு “மரத்துண்டின் மறுபிறவியை” எடுத்துப்**

**பதில்கடிதமாய் ஏதோ கிறுக்கினான்**

**தன்னைமறந்த நிலையில் எழுதிய அவை**

**அவனது ஞாபகவலையில் சிக்கவில்லை**

**அந்தக்கடிதம்**

**சேரவேண்டிய கரங்களைச் சேர்ந்தது**

**அக்கடிதத்தின் மொழிக்குறியீடுகள்**

**அவளின்**

**அறிவாலும்**

**உணர்வாலும்**

**உள்ளத்தாலும்**

**உள்ளெடுக்கப்பட்டன**

**ஆனால்**

**அவள் முகத்தில்**

**சிறு குழப்பத்தொடியையந்த புரிதலின்மை**

**“நீ எழுதியிருப்பன**

**எனக்குச் சரியாகப் புரியவில்லை”**

**என ஒலிக்குறியீடுகளும்**

**“நீ என்ன சொல்லவருகிறாய்?”**

**என்ற மனக்குறிப்பும்**

**ஒருங்கே அவனை வந்தடைந்தன**

**அவளுடைய அக்கடிதம்**

**அவனால் தவறாகப் புரிந்துகொள்ளப்பட்டதன்**

**ஒரு விளைவுதானோ**

**இந்த எதிர்வினை என்று**

**அவன் உள்ளமும் அறிவும்**

**அஞ்சி நடுங்கி**

**விஞ்சிய அன்பொடு**

**திகைத்துப் பதைபதைத்தன**

**ஆமையாகவும் முயலாகவும்**

**அடுத்தசில நாள்கள்**

**காலவோட்டப்பந்தயத்தில் போட்டிபோட்டன**

**அற்றைநாள்**

**வழக்கம்போலொரு வேலைநாளில்**

**பழக்கப்பட்ட வகுப்பு நண்பர்களிடை**

**பேசிக் களித்திருந்தனர்**

**இருவரும்**

**உள்ளத்திலேயே**

**தோன்றிமறையும் கவிதைவரி**

**பயனில்லாதது**

**அதுபோலத்தான்**

**வெளிப்படுத்தப்படாத பெருநேயமும்**

**ஒரு வெண்டாளேடு**

**ஒரு வெண்பக்கம்**

**கண்கள் அதனைப் பார்க்கின்றன**

**நெஞ்சத்துடிப்பு ஈறிலியை(∞) நெருங்குகிறது**

**கோடானகோடி எண்ணங்கள்**

**குறுக்கும் நெடுக்குமாக**

**மூளைநரம்புச்சாலையில் ஓடிக்கிடக்க**

**அவைகளுக்கெல்லாம் சேர்த்து**

**இவன் மூச்சுவாங்குகிறான்**

**இவன் செயல்**

**அருகிலிருந்தோரைக் குழப்புகிறது**

**“நீ நலம்தானே?”**

**“ஏதும் பிரச்சனையில்லையே”**

**தலை மட்டும் அசைகிறது**

**ஒரு கவிதைவரியை ஈனும் கவிஞன்**

**ஒரே நேரத்தில் பல்லாயிரம் வரிகளை ஈன்றால்**

**என்ன ஆவானோ**

**அப்படித்தான் ஆனான்**

**அந்தச் சில மணித்துளிகள்**

**“நான்”**

**ஒரு வரி -இல்லை இல்லை**

**ஒரு கிளவி,**

**மீண்டும் பற்பல சிந்தனைகள்**

**மூச்சு!**

**அதிர்வெண் அதிகமான சைன் அலைவரைபடமாக**

**மேலும் கீழுமாமாகப் பயணிக்கிறது**

**“உ …ன்… னை… க்…”**

**இதனை எழுதுவதற்குள்**

**சிலமுறை உயிர்**

**மெய்க்கும் வானுக்கும் ஊசலாடியது**

**“கா…”**

**இறுதி முடிவெடுக்க**

**இன்னும்**

**ஆறெழுத்துக் கால இடைவேளையே உள்ளது…**

**முடிவெடுத்துவிட்டான்**

**இதற்குமேலும்**

**காலதாமதம் செய்வது**

**உடல்புகுந்த உயிர்க்கும்**

**உயிர்புகுந்த அன்பிற்கும்**

**இழைக்கப்படும் பேரறமின்மை**

**எழுத்து சீரானது**

**சிந்தை x=1 ன் வரைபடம்போல்**

**நேராகச் சிந்திக்க**

**எழுதியேவிட்டான்**

**“காதலிக்கிறேன்”**

**அன்பும் அச்சமும் தயக்கமும் கலக்கும்**

**முக்கூடலில் மூழ்கியபடி**

**தன்கைகளைமட்டும் வெளியேநீட்டி**

**அவனுக்குப்பின்மேசையில் அமர்ந்திருக்கும்**

**அவளிடம் அவ்ஏட்டை நீட்டினான்**

**அவள்,**

**மூடிவைக்கப்பட்ட அவ்ஏட்டைத் திறக்கிறாள்**

**நொடிநேரத்துக்குள்**

**அவள் சிந்தை**

**செய்தியை உள்வாங்கிக்கொள்கிறது**

**அவளுடைய கோல்வழி நீலமை**

**காகிதத்தில் சில எழுத்துவடிவங்களைப்**

**பதித்துச்செல்கிறது...**

**மீண்டும் அவ்ஏடு பரிமாறப்படுகிறது**

**அவன் அதனைக் காண்கிறான்**

**“இஃது உண்மையா?”**

**அசைவுப்படமாக இருந்தவன்**

**நிழற்படமாக உறைந்துவிட்டான்**

**அடுத்து என்ன செய்வதென**

**அறிவின் ஆலோசனைக்கே**

**சில மணித்துளிகள் தேவைப்பட்டன**

**அவன் மனமோ**

**இரண்டு நபர்களாகி**

**இருவேறுவிதமாகச் சிந்திக்கத்தொடங்கியது**

**ஒருவன் சொல்கிறான்,**

**“முடிந்ததடா உன் சோலி!**

**என்ன காரியம் செய்துவிட்டாய்?**

**இனி எப்படி அவள்முகத்தை**

**நேரே காணப்போகிறாய்?**

**மூடா!**

**கண்ணாடிப்பாத்திரத்தைக்**

**கல்லெறிந்து உடைத்தனையே!**

**இனி**

**ஒட்டவைப்பதி யாங்ஙனம்?”**

**மற்றொருவன் சொல்கிறான்,**

**“நீ குழம்புதல் வேண்டாம்!**

**ஒருவேளை நீ இதனை**

**விளையாட்டுக்காகச் சொன்னாயென்று**

**அவள் எண்ணியிருக்கலாமன்றோ?**

**இது விளையாட்டுக்கன்றென்று**

**விளம்பித் தெளிவி**

**அதுவே நின் கடன்!"**

**"இதன் உட்பொருள் என்ன?"**

**இவ்வினா அவனைச்**

**செய்வதறியாது திகைக்கவைத்தது**

**அவனது அச்சத்தினும்**

**மிக்க அன்பு**

**அவன் படும் பாட்டை அதிகரித்தது**

**பள்ளியின்**

**வருகைப்பதிவேட்டுத் தாள்கள்**

**அவர்களுக்காக வடுப்பெறப்போகும்**

**கடைசி நாள்**

**நாளை**

**நெருநல் அவன் வெளிப்படுத்திய**

**நெஞ்சத்து அன்பினுக்கு**

**நேரும் நிலையெண்ணி**

**உறக்கமும் அவன் கண்களைவிட்டு விலகி**

**ஓரமாக ஒதுங்கி**

**விடியலுக்காகக் காத்திருந்தது**

**அவ்விரவில்**

**ஒற்றைத்தாள்**

**உள்ளிருந்து பொங்கிவரும்**

**கவிதையூற்றில் நனைகிறது**

*"ஒரு மலரை நான் கண்டேன்*

*நான் செல்லும் பாதையில்*

*எப்போதும் பூத்திருக்கும் ஓர்மலர்*

*அந்த மலர்*

*சில நேரங்களில்*

*வருத்தப்பனிமூடி*

*அமைதியாக நின்றிருக்கும்*

*அப்போதே*

*அதனிடம் பேசவேண்டுமென்ற*

*எண்ணம் தோன்றுவதுண்டு*

*ஒருநாள் அதனிடம் பேசினேன்*

*அதுவும் தன்னைச் சொன்னது*

*அந்த மலர் பறித்து*

*என் சட்டைப்பையில்*

*என் எழுதுகோலருகே*

*வைக்க நினைத்தேன்*

*நானும் என் எழுதுகோலும்*

*வேறல்ல என்பதாலும்*

*என் நெஞ்சத்துடிப்பைக்கூட*

*அஃது அறியவேண்டுமென நினைத்தேன்*

*அதனைப் பறிக்க இசைவு வேண்டினேன்*

*அந்த மலர்*

*செடியிலேயே இருக்குமா?*

*என் சட்டைப்பைக்கு வருமா?*

*மலரின் முடிவென்னை?*

*-----------------."*

***

**விடிந்தது அவ்இரவு**

**கோடிட்ட இடத்தில்**

**நிரப்பப்படப்போகும் சொல்**

**என்னவாக இருக்கும்?**

**அந்த வினாக்கவிதைக்கடிதம்**

**அவளால் விடையளிக்கப்படவேண்டி**

**அவளது கரங்களில் சரண்புகுந்தது**

**அந்தக் கவிதையில்**

**கண்ணொளி பாய்ச்சியபின்**

**அவனிடம் வந்தாள்**

**“எனக்குப் புரியவில்லை”**

**“மீண்டும் படித்துப்பாருங்கள்”**

**கவிதையின் பிம்பம்**

**மீண்டுமொருமுறை**

**அவள் கண்ணில் பதிந்தது**

**இம்முறை**

**சிந்தையிலும் பதிந்திருக்கவேண்டும்**

**அந்த வினாத்தாளில்**

**விடையோடு வந்தாள்**

**அவன் கட்டைவிரலும் சுட்டுவிரலும்**

**அதனை மெதுவாகப் பற்றிக்கொண்டன**

**“புரிந்துவிட்டதா?”**

**“ம்...”**

**“விடை எழுதிவிட்டீரா?”**

**முந்தைய பதில்தான்**

**அக்கவிதைக்கடிதம்**

**அவனால் திறக்கப்படவில்லை**

**மனதைக் கொஞ்சம் சீண்டலாமென்று**

**அந்தக் காத்திருப்பை நீட்டிக்கலாமென்று**

**அவன் நினைத்தான்**

**ஆனால்**

**அது நீடிக்கவில்லை**

**முதலில்**

**மனமுந்தியதோ**

**விழிமுந்தியதோ**

**அதற்குமுன்**

**கரம் முந்தியது**

**மும்முறை மடிக்கப்பட்ட காகிதம்**

**மெல்லிய ஓசையுடன்**

**மலர்ந்தது**

**அந்தக் கிடைமட்டக்கோடு**

**சுமந்து நின்றிருந்த சொல்**

**கவிதை வரிகளுக்குள்**

**சிறைபிடிக்கமுடியாத மகிழ்ச்சியை**

**அவனுயிரிலும் மனத்திலும் நிறைத்தது**

**அந்தக் காதல்**

**ஆழ்மனத்தினும் ஆழமான இடத்தில்**

**நின்று நிலைத்துவிட்டது**

**அந்த நாளை**

**வேறெதற்கும்**

**உவமையாகவும் ஆளமுடியாது**

**அந்நாளுக்கு**

**என் சிற்றறிவால்**

**உவமையும் கூறவியலாது**

**நிகழ்வுகளின்வழியே**

**அந்நாள்**

**வழுவில்லாச் சங்கப்பாடலினும்**

**சிறப்பாக இயற்றப்பட்டது**

**எல்லாக் கவிதையுத்திகளும்**

**உணர்வின் வெள்ளத்தில்**

**ஒடிக்கலக்க**

**அருங்கவிதையானது**

**அந்நாள்… அந்நாள்…**

*******

**வேலைநாளாலும்**

**அன்று**

**விடுமுறை - விடுதலை**

**அவர்கள் மதிப்பெண் பெறுவதற்காய்த்**

**தகவல் சுமக்கும் தாட்கட்டுகள்**

**அன்று அவர்களின் கைவிரல்களால்**

**காயப்படுத்தப்படவில்லை**

**மகிழ்ச்சியான நிகழ்வுகள் உள்ளிருக்க**

**மனப்பாடப் பொழுதுகள்**

**வகுப்பறைக்கு வெளியே நிறுத்தப்பட்டன**

**அந்நாளின் ஒவ்வொரு பொன்வினாடியும்**

**இராஜதிராவகக்காலத்தில்**

**கரைந்துகொண்டிருந்தது**

**இருவரின் வாழ்க்கை நூலிலும்**

**அந்த ஒருநாள்**

**வன்பொலத் தகடுகளில்**

**வைரக்கற்களால் பதிக்கப்பட்டது**

**தோழர் தோழியர்**

**குழுமினர் ஓரிடம்**

**விளையாட்டு தொடங்கிற்று**

**ஒருவரின் கை**

**தரையில் பதிந்தது**

**பதிந்த அக் கைமேல்**

**மறுகை பதிந்தது**

**மறுகை மேலே**

**ஒருகை பதிந்தது**

**ஒருகை மேலே**

**பல கைகள்**

**உயரே எழும்பிற்று**

**ஒற்றைக்கைக்கட்டிடம்**

**அடித்தளக்கை**

**சுமைதாங்காமல்**

**வெளியேறி வான்பறந்து**

**மொட்டைமாடியில்**

**பட்டென்றமர்ந்தது**

**இவ்வாறாக**

**ஆட்டம் தொடர்ந்தது**

**அவள் அவன்**

**ஆட்டத்திருந்தனர்**

**அகக்கை மட்டுமன்று**

**புறக்கையும் சிவந்தது**

**அவட்காய் அவனும்**

**அவற்காய் அவளும்**

**ஆட்டம் தொடர்ந்தனர்**

**அஃது அவள் தொடராத விளையாட்டானபோது**

**அவனாலும் முடிக்கப்பட்டது**

**விளையாட்டு தொடர்ந்தது**

**அவர்களில்லாமலும்...**

**அவளும் அவனும்**

**எதிரெதிர் அமர்ந்தனர்**

**அவளருகு தோழிதுணை**

**அவனருகு யாருமில்லை**

**தோழியின் மடிசாய்ந்தாள்**

**தோழியின் தோழி**

**"என்னவட்குத்**

**தோழியரும் உண்டுபோன்ம்!"**

**அவன் உள்ளம் வியந்தது**

**ஏனென்றால்**

**அவளொடு தனிமையே துணையாகவிருந்த**

**பொழுதுகளைத்தான்**

**அவன் கண்கள்**

**மூளைக்கு ஆற்றுப்படுத்தியிருந்தன**

**அஞ்ஞான்று**

**பக்கத்து வகுப்புத்தோழி**

**இவர்கள் வகுப்புப் புக்கு**

**இவனொடு பேச அமர்ந்தாள்**

**தன்னவள் எதிரிருக்க**

**தன்குரலால்**

**பொற்குரல் பாடிய**

***"நட்ட நடுக் கடல்மீது***

***நான் பாடும் பாட்டு"***

**என்று**

**தன் ஏட்டிலிருந்த பாடலைக்**

**காற்றணுக்கள் அதிர்வுறப் பாடிக்காட்டினான்**

**அருகிருந்த அயல்வகுப்புத்தோழிக்கு**

**காற்று கிழிபட மடிவிட்டெழுந்தாள் தலைவி**

**கண்ணொடு கனன்றன சொற்களும்**

**“என்னோடெல்லாம் பேசமாட்டாயா?”**

**தன்னவன்,**

**பிறிதொரு பெண்ணிடம்**

**குரலாடக்கண்ட அவள் எதிர்வினை**

**கவிஞனைக்**

**கடற்குடைபுயல் சிக்கிய சிறுபடகெனச்**

**சிறிதுநேரம்**

**செய்வதறியாமல் சிந்தையதிரச்செய்துவிட்டது**

**பாடிய பாடலால்**

**ஊடலாய் நீடியிருக்கவேண்டிய அந்நிகழ்வு**

**அந்நிலையை எய்தாமலிருந்தது**

**அவன்**

**எக்காலத்தில் செய்த தவப்பயனோ?**

**கருவறைக்கு வெளியே**

**இந்த வகுப்பறைதான்**

**தன்னை,**

**யாரிடம் விட்டுக்கொடுக்காத**

**ஒரு பெண்ணை**

**அவனுக்குக் காட்டியது**

**அந்நாட்கருமுகில்**

**நொடித்துளிகளைப்**

**பொழிந்தாங்கிருந்தது**

**அவள் உள்ளம்**

**காலமுகில் கரைவது கண்டு**

**இனி இம்மழை**

**என்று பெய்யுமோ?**

**இனி இத்தண்மை**

**என்று நண்ணுமோ?**

**என்று எண்ணியெண்ணிக்**

**காலத்தினை கட்டுப்படுத்தத்**

**தான்**

**நான்காம் பரிமாணத்தில்**

**இல்லையே என**

**ஏக்குற்று**

**இயலாமை உப்புகலக்க**

**எவ்வத்திரவத்தால்**

**தன் கீழிமைமூடிகளாம்**

**வேலிகளை மூழ்கடித்துவிட**

**அவள் குரல்**

**துயரப்பசையால்**

**தொண்டையிலேயே ஒட்டிக்கொள்ள**

**அவள் மூச்சுமட்டும்**

**அவள் மனத்தொடு**

**காலஒட்டத்திடம்**

**ஒரிடத்திலேயே நிற்கச்சொல்லிக்**

**கருணைக்கோரிக்கை வைத்துக்கொண்டிருந்தது**

**காலத்தைப் போன்ற நடுவுநிலைமையை**

**யாரிடம் காணவியலும்?**

**அது**

**துன்பக்கடலில் நீந்தியவனையும்**

**கரைக்கு அழைத்துச் செல்கிறது**

**இன்பத்தீவில் வாழ்வை**

**இனிது கழித்திருப்பவனுக்கும்**

**இடர்ப்புயலைக் காட்டிவிடுகிறது**

**அவள் உகுத்த சிறுதுளிக்கண்ணீர்**

**அவள் மனக்கடலின் துன்பப்பேரலைகள்**

**அவள் கண்வரை முட்டியதில்**

**வெளிவந்த சிறுபகுதியென்பதை**

**அவன் அறிவான்**

**இற்றை நாளெனும் தண்ணீர்**

**பிரிவுத்துயர்க்கதிர் வீசும் துன்பக்கதிரவனால்**

**ஆவியாகி**

**நினைவுகளென்னும் கருமேகமாய்த்திரண்டு**

**அவர்கள் மனம் பாலையாகும்போது**

**அதனைக் குளிர்விக்க மீண்டும் வரும்**

**அவள் உள்ளமோ**

**“இதோ**

**இந்த நாள்**

**எம் காதலின் தொடக்கமும்**

**எம் பள்ளிப்பருவ முடிவும்**

**இத்தனைநாள்**

**ஏன் அலைக்கழித்தேன்?**

**ஏன் அலைக்கழிந்தேன்?**

**அறியாமல் அமைதிகாத்தேன்**

**அறிந்தும் பொறுமைகாத்தேன்**

**இனியும் யாம் சந்திக்கப்போகும் நாள்கள்**

**குறைவே**

**யான் என்னசெய்வேன்?**

**பிரிவில் தொடங்கிய எம்நேயம்**

**இணைவில் முடிவுறவேண்டும்**

**அவன் அறிவானா?**

**என் மனத்தை?**

**அறிவான்!**

**ஏனெனில்**

**அவன் ‘என்னவன்’**

**நானோ இங்கே**

**விழிநீர் வடிக்கிறேன்**

**ஓ! அழக்கூடாது**

**அவன் நெஞ்சம் என்ன பாடுபடும்?**

**இல்லை இல்லை**

**நான் அழுதால்**

**அவன் எனக்கு ஆறுதலுரைப்பான்**

**என் கண்களே!**

**இவளைப் பொறுத்துக்கொள்ளுங்கள்**

**அன்பிற்கு இல்லை அடைக்கும்தாழ்**

**நானும் அவனும் கொண்டது**

**ஒரே வலிதான்**

**என்போல்தானே அவனும்**

**என் அன்பிற்குரியவனே!**

**நீ எனக்குச் சொற்களால் ஆறுதலுரை**

**நான் உனக்கு மௌனங்களால் ஆறுதலுரைக்கிறேன்**

**உன்னைத்தவிர**

**வேறு எவருடைய மொழிகளும்**

**என்னைத்தேற்றாது…"**

**அவளருகிருந்த தோழியர்**

**"கலுழேல்" என்றனர்**

**அவனும் அதையே மொழிந்தனன்**

**நம்மைப் பிரிவதால்**

**துயர்கொண்டு கண்ணீர் சிந்தினளெனத்**

**தோழியர் உள்ளினர்**

**அவளும் அவனும் அறிகுவர்**

**அத்துளிகள்**

**எதற்காகச் சிந்தப்பட்டவையென**

**இருவரும்**

**பெருந்துயர்க்குழியினில்**

**காலஞ்செய் மயக்கத்தால் வீழ்ந்திருப்பினும்**

**தாமே தமக்குதவியாய்**

**ஒருவரையொருவர் கைத்தூக்கிவிடுவது**

**கடனன்றோ?**

**ஆதலால்தான்**

**கண்ணுகுத்தாளைக் “கலுழேல்” என்றான்**

**தன் நெஞ்சை**

**உதிரக்கடலுள் மூழ்கடித்தபடி**

**மாலைக் கதிரவன்**

**அந்நாளை நீட்டிக்கவியலாத**

**தன்றன்மையை எண்ணி**

**காலத்திடம் போரிடவியலாமல்**

**புறங்காட்டி**

**மலைகளின்பின்னே ஒடியொளிகிறான்**

**அவளும் அவனும்**

**சுருங்க நிகழ்ந்து விளங்க உணர்ந்த**

**பேரன்பு பிறந்த அதிகாரப்பூர்வப் பிறந்தநாளைத்**

**தம் அடியாழ்மனக் குறிப்பேட்டில் குறித்துக்**

**காதலெனும் கோப்புறையில்**

**கசங்காமல் வைத்துக்கொண்டனர்**

**அன்பின் ஆவணக்காப்பகத்தில்**

**ஆண்டாண்டுகாலமாய்**

**அழியாமல்**

**அஃதிருக்கும்**

**தம்முள் அறிந்த தாமறி காதலர்**

**தம்தம் இல்லம் ஏக வேண்டும்**

**சாலைக்கறுப்பாற்றின்**

**ஒருபுறம் அவள்**

**மறுபுறம் இவன்**

**காற்றோலையில் குரலெழுதி**

**அவளிடம் சேர்ப்பிக்க**

**ஆசையிருந்தும்**

**அகத்துநிறை அன்பிருந்தும்**

**அவனால் அஞ்ஞான்று**

**எதுவும் செய்யவியலவில்லை**

**அவள் கால்கள் நடக்கும் பாதையில்**

**தன் கண்கள் நடக்கும் பாதைவரை நடத்துவித்தான்**

**வீட்டுக்கூடு புகுந்தான்**

**சீருடையும் மாற்றாமல்**

**சிந்தையெல்லாம் துயர்நிறைந்து**

**அறைச்சிறை அடைந்தான்**

**அறைக்கதவடைத்தான்**

**அந்தோ! எரிதழல்!**

**எரிதழல்! எரிதழல்!**

**அவன் நெஞ்சு கக்கிய புகையால்**

**அவன் கண்கள் எரிந்து உருகின**

**கதறியழுதால் காரணம் கேட்பர்**

**விசும்பல் வெளித்தெரியக்கூடாதென்று**

**ஓசையின்றி விசும்பி விசும்பி**

**விசும்படை துயரொடு**

**பொசுங்கித் தவித்திருந்தான்**

**தந்தையின் தொலைபேசி**

**தான் செவிமடுத்த**

**வான் அலைகளை**

**ஒலியலைகளாக மாற்றி**

**இல்லத்தில் எல்லார் செவிகளுக்கும்**

**அனுப்பிவைத்தது**

**அதன் திரையில் பதிந்திருந்த**

**ஈரைந்து எண்கள்**

**யாருடைத்தென்று**

**இல்லத்துள்ளோர் மூளைகள்**

**எண்ணிக்கிடந்தன**

**அந்தத் தெரியாத எண்**

**தன்னைப் புரிந்தாளின் எண்ணாக**

**இருக்குமோ என்று**

**எதிர்பார்ப்புகள் அவனை எழுப்பிவிடத்**

**தன் நாட்குறிப்பேட்டை விரித்தான்**

**கரிக்கோலும் வெண்டாளும்**

**பேசிக்கொள்ள உதவிய அவள்**

**அவற்றின் உரையாடலைக்**

**கவின்மிகு கையெழுத்தால்**

**தன் பெயராகவும்**

**தொலைபேசி எண்ணாகவும்**

**உள்ளத்துப் பெருகிய மெய்யன்பு மிக**

**அதிற் பதித்துவைத்தாள்**

**தாளும் திரையும்**

**கண்களுக்கு ஒரே எண்ணைக் காட்டின**

**மனத்துறு பேருவகை**

**அண்மையிற் கண்ட விண்மீனாய்**

**அவன் கண்களை**

**மிளிர்ந்திடச் செய்தது**

**தாதையின் இசைவைத்**

**தலைவன் இறைஞ்சலானான்**

**“தந்தையே!**

**என்னொடு பயிலும்**

**தோழியின் அழைப்பிது**

**எடுத்துப் பேச**

**அனுமதி உண்டோ?”**

**தந்தை மாற்றம் தந்தார்**

**“இல்லை**

**அத்தோழியொடு**

**என்**

**தொலைபேசிவழி உரையாடற்கு**

**உனக்கு அனுமதி இல்லை”**

**தந்தை ஏமாற்றம் தந்தார்**

**ஒருமுறை நீண்டொலித்த மணி**

**மறுமுறை**

**செவிகளில் தேனைப் பாய்ச்சவில்லை**

**சேய்மையில் கண்ட விண்மீனாய்**

**அவன் முகம் சுருங்க**

**ஒட்டைத் தொப்பி(யாய்) அணிந்த**

**நாற்புற மட்சுவர்க்குள்**

**கதவுவழி நுழைந்தான்**

**வெண்டாளேட்டின்**

**ஒரு செம்பாதித்தாளில்**

**கரிக்கோலால்**

**வரைந்துபார்த்தான்**

**தம் காதலால்**

**நிகழவிருப்பனவற்றையெல்லாம்**

**ஓர் வரைபடமாய்**

**மூளைச்செல்களுக்கு**

**மூச்சுமுட்ட வேலைவைத்தான்**

**வினாடிகள்தோறும்**

**விழித்திருக்காத விழிகளின்**

**இமைத்திரையில்**

**எதிர்கால வாழ்வினைப்**

**பதிவு செய்யமுடியாத படமாக**

**ஒட்டிப்பார்த்தான்**

**அழைத்த அவளோ**

**அகத்து நொந்தாள்**

**“ஏற்கப்படவில்லை**

**இந்த அழைப்பு**

**மௌனங்களாலேயே பேசியவளை**

**வார்த்தைகளுக்கு அறிமுகப்படுத்தியவனே!**

**என்மனம் தவிக்கும் தவிப்பு**

**உனக்குத் தெரியுமா?**

**உன்குரல் கேட்கத்தானே அழைத்தேன்?**

**உன்னை அழைப்பதற்கு**

**உடைந்த கண்ணாடியை**

**ஒட்டவைப்பதற்குப் படும் பாடுபட்டேன்**

**ஆனால்**

**இப்போது நான் உடைந்துகிடக்கிறேன்**

**செவிப்புலனால்**

**உன் சொல்லுணர்தற்கு**

**வாய்ப்புக்கிட்டவில்லை**

**கட்புலனால்**

**நாம் பேசக்**

**காலம் வரும்வரை**

**காத்திருக்கத்தான் வேண்டும்”**

**அவன் எழுத்து விதைகளைக்**

**காகிதவயலில் விதைக்கத் தொடங்கினான்**

***“கனவினை நிறைக்காவிடினும்***

***நனவினை நிறைக்கின்றாய்!***

*நீண்டுகொண்டிருக்கும்*

*ஆழ்ந்த சிந்தனைகள்*

*சிந்தைக்குள்ளே*

*புதிதாய்ச் சிறகுவிரிக்கின்றன…*

*பறந்து திரிகிறேன் நான்…*

*புதிய பாதைகளில்*

*அழைப்பை மதியாதவனாக எண்ணிவிடாதே!*

*அலைபேசியில் அலைகள்*

*அறுக்கப்பட்டுவிட்டன…*

*நம்பிக்கை தளர்ந்துவிடாதே!*

*நீயும் நானும்*

*எதிர்பாராத பொழுதுகளில்*

*வரும் நல்வேளை!*

*மலைமுகட்டில் என்னை வைத்தாய்*

*அம்மலை*

*பனிமலையானால்*

*சரிவு வராதிருக்கட்டும்*

*எரிமலையானால்*

*சீற்றம் வராதிருக்கட்டும்*

*குறியீடுகளுக்குள் குறுகித்*

*தவிக்கும் கவிஞனின்*

*மனதினை*

*அது பேசும் மொழியின் குரலினைக் கேட்டு*

*அந்தக் குறியீடுகளை மொழிபெயர்த்து*

*மனப்பனுவலிற் பதித்துக்கொண்டாய்*

*அவ்வெழுத்துக்களில்*

*எவ்வெழுத்தும்*

*அழியாமற் காப்பது*

*என் கடமையல்லாவா?”*

**தூக்கக்கரங்கள்**

**கண்விழிகளை உள்ளேவைத்து**

**இமைக்கதவுகளை மூடின**

**நாள்கள்**

**நேரத்தில் கரைந்து**

**சிறப்புவகுப்புகளை நோக்கி**

**ஓடிக்கொண்டிருந்தன**

*******

**தமிழ்ப்பாடநூல்**

**அன்று அதிகமுறை புரட்டப்பட்டது**

**ஏனென்றால்**

**இன்னும் சில நாட்களில்**

**அஃது அடுக்கங்களில் உறங்கப்போகின்றது**

**தமிழில்**

**பதிற்றுப்பத்து மதிப்பெண்கள்**

**தேர்வுத்தாளில்**

**கூட்டுத்தொகையாக வரவேண்டும்**

**ஆனால்**

**தேர்வுக்களத்தில்**

**ஒன்றொழி பதிற்றுப்பத்துத்தான்**

**முகட்டு மதிப்பெண்**

**இஃது உலக வழக்கு**

**மதிப்பெண்களாலும்**

**'தன்னையும்' மதிப்பவர்களாலும்**

**அவன் மதிப்புற்றிருந்தான்**

**தமிழ் அவனுக்குத்**

**தாய்ப்பால் மட்டுமன்று**

**தெளிதண்ணீரும் அதுவே**

**புனலின் றமையா துலகெனி னீங்கே**

**தமிழின் றமையா னிவன்**

**இவன் புரட்டுவதை உணர்ந்த புத்தகம்**

**தன்னைப் புரட்டுவது**

**காற்றோ எனக் குழம்பிற்று**

**வகுப்பறைக்கு வெளியே**

**இருமருங்கும் திறந்த கதவுகளில் சாய்ந்து**

**தமிழ்ப்பாடப்பனுவலிடம்**

**பேசிக்கொண்டிருந்தனர் இருவரும்**

**திடீரென்று அவள்**

**வினாமலர் ஒன்றை**

**நூன்மரத்திலிருந்து பறித்து**

**அவனிடம் கொடுத்தாள்**

**அதனைப் பெற்றுக்கொள்ள**

**விடைக்கரம் இன்றி**

**அவன் தவித்தான்**

**அவன் தவிப்பதைக் கண்டு**

**அவள் சிறுநகை சிந்தி**

**ஈற்றில்**

**அவளே விடைக்கரம் நீட்டினாள்**

**அவன் அறிவு அவளுக்கு நன்றியுரைத்தது**

**அந்த அறிவினா**

**அற்றைநாளை அழகாக்கியது**

**அவனுக்கென்று ஒரு**

**நாட்குறிப்பேடு உண்டு**

**அவனுடைய கவிதைகள்**

**அவனால் மறக்கவியலாதோரின் பெயர்கள்**

**இன்னும் சில தொலைபேசி எண்கள்**

**சில குறிப்புகள்**

**என இத்தனையும்**

**தன்னில் சுமந்திருந்தது அவ்வேடு**

**ஆங்கதில்**

**தன் உள்ளம் நிறைந்துள்ளவளின்**

**அழகுப்பெயரினைத்**

**தன்னால் மறக்கவியலாதோரின் பெயர்களுள் ஒன்றாய்ப்**

**பதித்துவைத்திருந்தான்**

**அதனைத் தன் கண்களால்**

**உள்வாங்கிய அவள்**

**“ஏன் என் பெயரைக்**

**கடைசியில் எழுதிவிட்டாய்?” எனக் கேட்கத்**

**தலைவனோ**

**“நான் நின்னைச் சிந்தித்துச் சிந்தைபதித்தது**

**இப்பொழுதுகளில்தான்**

**ஆகையால்**

**நீ இதை எண்ணி**

**நின் மனன் மெலியேல்”**

**என்று ஆற்றினன்.**

**அவளிடம் அவ்ஏடு கொடுத்து**

**ஏதோ ஒர் பணியாய்**

**அவன் சென்றனன்**

**திரும்பி வந்தவனிடம்**

**அவ்ஏட்டினை அளித்தனள் நங்கை**

**பக்கங்களுக்குள் பயணித்த கண்கள்**

**கண்ட சில வரிகள்**

**அன்னைத் தமிழ்போல்**

**அவன் மனத்தில்**

**நீங்காது நிறைந்தன**

**“உன்னை எனக்கு இந்த உலகத்தில்**

**ரொம்ப பிடிக்கும்”**

**அவள் மேலும் எழுத ஆசைப்பட்டாள்**

**ஆயினும் காலம் கைகூடவில்லை**

***

**ஈரிரு இருநாள் விடுமுறையில்**

**ஒரேயொருநாள் சிறப்புவகுப்பில்**

**பாடநூலுடன் போராடி**

**மாணவர் சோர்வுற**

**மாணாக்கர்களோடு போராடி**

**ஆசான் சோர்வுற**

**அதனிடையும்**

**அன்புடை இருவர்**

**ஆணம்மிக**

**நேர்ந்திட வாய்த்தது பொன்னாள் எனப்**

**பெருமகிழ்வெய்தித்**

**தம்முடை உள்ளம்**

**தாள்வழிப் பகர்ந்தனர்**

**அந்நாள் காலையில்**

**அருந்தமிழ்க் கவிஞன்**

**தன் உள்ளத்தின் நகலான**

**தன் கவிதைகள்**

**தன் கைப்பட எழுதப்பட்ட ஏட்டினை**

**அவள் கைகளில் கொடுத்தனன்**

**அவளும்**

**தன் உளம் யாவையும்**

**தாளிலே நிறைத்ததைத்**

**தண்டமிழ்க் கவிஞனின்**

**கரத்தினிற் சேர்த்தனள்**

**அவள் நிறைத்த அவ்வரிகள்**

**தானெழுதும் கவிகளினும்**

**மேன்மையுடைத்து**

**நுண்மையுடைத்து**

**என அவன்**

**மீண்டும் மீண்டும் வியக்கிறான்**

**உரைநடையும் உயர்கவியாம்**

**உணர்விருக்கும் போழ்தினிலே**

**உணர்வொடு நேயம் இழைந்த**

**உயிர்நிறை எழுத்தின் சேர்க்கை**

**உயிரொடு கலந்துகொண்டிருக்கும்போது**

**ஒரு வரி**

**அவள் மனத்துள்**

**தான் பெறும்**

**ஆன்ற இடத்தினை**

**அவனுள் பதியவைத்து**

**அவனைப் பொறுப்புடையவனாக்கியது**

**"நீயோ**

**எந்தை அனையன்"**

**இவ்விடத்து அவன் உளத்தை**

**எழுத்தடக்கிக் காட்டல்**

**யான்பெற்ற திறனின் மிக்கது**

**தந்தைபோல் தன்னை எண்ணுவோள்**

**எந்தநாளும் தன்னால்**

**உள்ளத்தாலும் ஊறுபட்டுவிடக்கூடாதென**

**அந்நொடியே**

**அவன் சிந்தையில் செதுக்கினான்**

**தொல்காப்பியத்தைக் கற்ற உரையாசிரியர்கள்போல்**

**கற்றல் தொடர்கிறான்**

**ஆங்கொரு வரி,**

**“நாம் முதன்முதலில்**

**மனம் பகிர்ந்த பின்னர்**

**நீ என் கனவில் வந்தனை!”**

**இது கண்ட அவன்**

**தான்தான் இப்போது**

**கனவினில் இருக்கிறோமோ என்று**

**உள்ளம் சிலிர்த்தான்**

**இன்னும் சில**

**ஏற்றமுடை வரிகளுடன்**

**மிளிர்ந்தன அவ்வெண்தாள்கள்**

**வாய்ப்பேச்சு**

**வெட்கத்தின்பின்னே**

**ஒளிந்துகொள்கிறது**

**எழுத்துப்பேச்சு**

**மீண்டும் தொடங்கிற்று**

**சில மணிகள் கழித்து**

**சிறிது நேரத்தில் தீர்ந்துவிடக்கூடிய**

**ஒரு செவ்வண்ண மையுடைய**

**பந்துமுனைப்பேனா**

**தன் கடைசி மூச்சை**

**இவர்களுக்காக**

**‘எழுதிக்’ கொடுத்தது**

**அவன் எழுதலானான்,**

**“நான் என்றும் திறந்துவைக்கவிரும்பும்**

**என் மனப்புத்தகத்தின்**

**பற்பல பக்கங்கள் நிறைக்கும்**

**பேனா முனையாய்**

**உன் எழுத்துக்கள்**

**ஒவ்வொருமுறையும்**

**என் செந்தமிழ் நடையை**

**உன் பேச்சுத்தமிழ் நடை விஞ்சுகிறது**

**எனக்குள் உள்ள கவிஞனின்**

**கவிதைத்திறத்தினை**

**வேறொரு பரிமாணத்தில்**

**வெளிக்கொணர உதவியவள் நீ**

**உண்மை என்ற சொல்லுக்குள்**

**ஒளிவு மறைவு கிடையாது**

**என் எழுத்துக்கள்**

**என்றும் உன்னிடம் பொய்சொல்லாது**

**இஃது உனக்குநான் கொடுக்கும் உறுதி!**

**பாழடைந்த மனமாளிகையில்**

**ஏற்றப்பட்ட ஒளியை**

**என்றும் விரும்புகிறது**

**என் மனமாளிகை**

**பேசவேண்டியவை அதிகம்**

**எனினும்**

**பேச்சைவிட**

**எழுத்தே அதிகம் பேசிவிடுகிறது**

**ஒரு கவிதையைப்**

**புரிந்துகொள்ளும் வாசகியைவிட**

**வேறென்ன வேண்டும் ஒரு கவிஞனுக்கு?**

**நான் உன்னிடம் கொடுத்த**

**அக்கவிதை ஏட்டில்**

***“சில்நாளில் சிறகடித்துப் பறக்கும் கிளிக்குப்***

***பழத்தோட்டம் என்ன சொந்தமா?”***

**என எழுதியிருப்பேன்**

**என் மனதிற்கும்**

**என் கவிதைகளுக்கும்**

**சொல் உபயோகங்கள் மட்டுமே வித்தியாசம்**

**மற்றபடி அனைத்தும் ஒன்றுதான்**

**இதற்குமேல்**

**என்ன எழுதுவதெனத் தெரியவில்லை**

**இந்தப் பேனாவில் தீரும் மையைப்போல்**

**நாட்களும்**

**தீர்ந்துகொண்டிருக்கின்றன**

**நான் கொடுத்த**

**கவிதை ஏட்டைப் படித்துப்பார்**

**நான் எண்ணியவை எல்லாம்**

**அதில் அடக்கம்"**

**அவள் எழுதலானாள்,**

**"நான் எழுதிக்கொடுத்த**

**அவ்ஏட்டிலிருந்து**

**உன் திருப்பம் இதுவா?"**

**அவன் எழுதலானான்,**

**"திருப்பம் என்பது**

**எதைக்குறிக்கிறதென்று**

**எனக்குத் தெரியவில்லை**

**அதற்குப் பதில்கூறும்படி**

**கேட்டுக்கொள்கிறேன்"**

**அவள் எழுதலானாள்,**

**"திருப்பம் என்றால்**

**நான் எழுதியதிலிருந்து**

உன் மாற்றுக்கருத்து என்ன?

என்று பொருள்”

அவன் எழுதலானான்,

“எனக்கு எந்த மாற்றுக்கருத்தும் இல்லை

‘எல்லாரும்

அழகாகவும் அறிவாகவும் இருப்பாங்க

ஆனால் உன்னைமாதிரி இருக்கமாட்டாங்க’

என்று எழுதியிருந்தாய்

நான் எப்படி இருக்கிறேன்?

இதற்குப் பதிலளிக்கமுடியுமா? தயைகூர்ந்து?

அவள் எழுதலானாள்,

“நீ மிகவும் வித்தியாசமாக இருக்கிறாய்

எப்படியென்றால்

யாரிடமும் அதிகமாய்ப் பேசியதில்லை

எப்போதும் உன்பணியை மட்டுமே செய்கிறாய்

யாருடனும் வெட்டியாய்ப் பேசமாட்டாய்

என்னைத்தவிர!

நான் மறுபடியும் சொல்கிறேன்

அழகு என்பது கண்ணுக்குத்தான்

மனதுக்குக் கிடையாது”

அவன் எழுதலானான்,

“இந்தப் பைத்தியக்காரனை

உனக்கு எப்படிப் பிடித்தது?”

அவள் எழுதலானாள்,

“ஏன் அப்படிக் கேட்கிறாய்?”

அவன் எழுதலானான்,

“நானும் எல்லாரிடமும்

சரிசமமாய்ப் பழகுவேன்

ஆனால்

எனக்குத்தெரிந்து

நான் அவர்கள் சொல்லைக் கேட்பதைவிட

அவர்களிடம் பேசுவதுதான்

அதிகமாக இருக்கும்

வாழ்வில் ஒருவன் பேசிக்கொண்டேயிருந்தால்

அவனை ‘அறுவை’, ‘பிளேடு’

எனச் சொல்லிவிடுவார்கள்

எனக்கு என்ன தோன்றுகிறதோ

அதனை அப்போது சொல்லிவிடுவேன்

சிலசமயம் நான் சொல்வது

சிலருக்கு எரிச்சலூட்டுவதாய் அமையும்

அப்போது அஃது எனக்குத் தெரியாது

பிறகு வருத்தப்படுவேன்

வேறு ஏதாவது சிந்தனையிலிருக்கையில்

யார் எதுசொன்னாலும்

எனக்குப் புரியாது

நீயே சொல்,

எப்போது பார்த்தாலும்

பாட்டுப்பாடிக்கொண்டும்

இல்லையெனில் படித்துக்கொண்டும்

அதுவும் இல்லையெனில்

வேடிக்கை பார்த்துக்கொண்டும்

நீதி நியாயமென்று

பேசிக்கொண்டிருப்பவனை

யாருக்குப் பிடிக்கும்?

எனக்கு ஒரு எண்ணம்

அவ்வப்போது வரும்

இந்தப் படிப்பு மட்டும் வராவிட்டால்

இவ்வுலகில் என்னை

மதிக்கக்கூடியவர் யார்?

இந்தக் கவிதை பாட்டு எல்லாம்

படித்துப் படித்துத் தெரிந்துகொண்டதுதான்

இதுவும் இல்லையென்றால்

நான்

பைத்தியக்காரனைவிட வீணானவனாக

ஏதுமற்றவனாக இருப்பேன்

அதனால்தான்

உன்னிடம் அப்படிக் கேட்டேன்

மேலும்

நீ எனக்கு உன் மனதிற்கொடுத்த இடம்

மிக...

அதனை எப்படிச் சொல்வதென்றே தெரியவில்லை!

அதற்கு நான்

ஏற்றவனா? இல்லையா? என்பதே

என் கேள்விகளில் தலையாயது”

இவனுடைய சொற்கள் யாவும்

பொறுமையாக உள்வாங்கிய அவள்

இம்முறை

வாய்மொழியாலேயே

கேட்டாள் ஒரு நற்கேள்வி

“நீ ஏன் அப்படி நினைக்கிறாய்?”

**அந்தக் கேள்வி**

**ஆயிரமாயிரம் பதில்களை**

**அவனுக்கு வழங்கியது**

**தன்னைத்**

**தானே பார்க்காத கோணம்**

**அவனுக்குப் புலப்பட்டது**

**எதிர்மறை எண்ணங்கள்**

**அன்புடன் கலந்த**

**புரிதலுடன் கூடிய**

**நம்பிக்கையால்**

**விரட்டியடிக்கப்பட்டன**

**அவள் அறிந்திருப்பாளோ என்னவோ**

**அவ்வினா அவன்மனத்தில்**

**அரும்பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியது**

**மேலும்**

**ஓர் ஒலிமொழிமாலையைக்**

**காற்றில் மிதக்கவிட்டாள்**

**“சிலநேரங்களில்**

**நமது எண்ணங்கள்**

**தவறாக இருக்கலாம்”**

**அந்நொடி**

**தவறான மதிப்பீடுகள்**

**தனலெறியப்பட்டன**

*******

**ஒரு செவ்வெங்கோளம்**

**அரைக்கோளமாய்க் காட்சியளித்தது**

**இல்லம் ஏக வேண்டும்**

**அவளும் அவனும்**

**ஆடைகளும் உரசிக்கொள்ளாத**

**இடைவெளியில்**

**மௌனங்களோடும்**

**பேச்சுக்களோடும்**

**காதலரைக் காணக்**

**காத்திருக்கும் நேரம்போல**

**மெதுவாக அடியெடுத்து**

**முன்வைக்கிறார்கள்**

**அவன் நெஞ்சம்**

**சிற்பி செதுக்க எடுக்கும் கல்லைப்போல்**

**சொல்லை எடுத்துச்**

**செதுக்குகிறது**

**ஒரு கவிதை**

*“எழுத்துக்களுக்குள்ளேயே*

*சுழன்றுகொண்டிருக்கிறது*

*கடிதங்களால்,*

*பார்த்தவுடன்*

*பேனாவையும் காகிதத்தையயும்தான் தேடுகிறது*

*என்கை;*

*வாய்தான் வெட்கப்படுகிறதோ?*

*விழிபேசுவது போதாதென்று*

*எழுத்து-*

*மொழிவேறு*

*இயல்பில்*

*இயல்வழக்கில்*

*இங்ஙனம்நான் கண்டதில்லை*

*இது*

*புதுமை என நினைக்கிறேன்*

*இடைவெளிகள்*

*இருமனதிடை*

*இல...*

*இன்பம்பூத்து*

*மெதுவாய் நடக்கின்றோம்*

*காலமோ*

*விரைவைக் கூட்டுகிறது*

*அடியெடுத்துவைக்க*

*மனமில்லை”*

**வருவழியில்**

**நின்றிருந்தார் சிலர்**

**அவர்களைக் கண்டாள் மருண்டனள் அவள்**

**“இவர்கள் எம்மூரார்**

**நமைநோகின் நன்றன்று**

**நீ நின் இல் செல்**

**யான் போய்வருகிறேன்”**

**காதலர்க்காய்க் காத்திருக்கும் பொழுதில்**

**துடிக்கும் நெஞ்சம்போல**

**விரைந்தாள் அவள்**

**எத்தனைதுளி உகுநீர்**

**அவள் கைக்குட்டையை நனைத்ததோ?**

**அவள் உள்ளம் அவனிடம்**

**“மன்னித்துக்கொள்...**

**சட்டெனத் தள்ளிவந்துவிட்டேன்**

**சொற்களின் ஆழம் தெரிந்த உனக்கு**

**என்**

**செய்கையின் காரணமும் தெரிந்திருக்கும்...”**

**மீண்டும் அவன்நெஞ்சில்**

**உளிச்சத்தம்**

**“*என்செய்ய?***

***அம்முகம் மறைந்தபின்***

***வழிநெடுக என்னுடன்***

***மனதிலே நடைபழகும்***

***நண்ணிய கனவு***

***நனவாகவே***

***எழுகிறது அனுதினமும் பலநினைவு***

*நெஞ்சத்துடிப்பின் இடைவெளியில்*

*எண்ணவெள்ளம்*

*இனிமையான இசையாக;*

*கவிமனதின்*

*உரைக்கப்பொழுதிலாத உணர்வாக;*

*உயிர்க்குள் உறைந்திருக்கும்*

*உண்மையாக;*

*புரிந்த மொழியிலிருந்தும்*

*புரியாத புதுக்கவிதையாக;*

*சொல்லச் சொல்ல நீளும்*

*பெருங்கதையாக;*

*ஒரு சொல்லுக்குள் அடைபடும் அஃது*

*ஆயிரம் சொற்களாலும் விளக்கமுடியாததாக;*

*படித்துப் புரிபவர்களுகக்காக ஏங்கும்*

*கவிதையாக;*

*சொல்லாமலேயே வந்திடைப்புகும்*

*சிலேடையாக;*

*தனிக்கவியின் எழுத்தாக;*

*கோடி ‘ஆக’ க்களுக்கு மூலமாக*

*ஒன்றென்று ஈருள்ளத்தில் உயிர்த்துளது”*

****

**சிறப்புவகுப்பு**

**சிந்தைக்கினியதாகிறது**

**எழுதப்போகும் தேர்வுக்கு**

**எல்லாரையும் ஆயத்தப்படுத்தும்**

**அவளுக்கும் அவனுக்கும்**

**அருநேர்வை ஏற்படுத்தும்**

**காதலின் நேர்வுகளில்**

**காத்திருப்புதான் இருக்கவேண்டும்**

**காலதாமதங்கள் அல்ல...**

**வகுப்பறைகளின்**

**திறக்கப்படாத கதவுகளின்முன்**

**அவன் வந்து காத்திருந்தான்**

**பார்த்திருந்தான் பாதையை**

**எதிரே பார்ப்பதற்கு**

**எதிர்பார்த்திருந்தான் நேரத்தை**

**அவனுடைய மணற்கடிகாரத்தில்**

**கீழே சரியும் மணலால்**

**கீழ்ப்பகுதி கனத்துக்கொண்டிருந்தது**

**காத்திருப்புப் புயலில்**

**கரைந்துகொண்டிருந்தது**

**அவன் மனமேடு**

**அங்கு யாரோ வருகிறார்போலிருந்தது**

**அவன்றன் நெஞ்சத்துடிப்பு மிகவில்லை**

**அப்போதே அறிந்துகொண்டான்**

**வருபவர் அவளில்லையென**

**அவளுடைய தோழி**

**முன்னுறவோ குறையுறவோ**

**இவர்களின் களவினை அறிந்தவள்**

**தனிமைக்குத் துணையாக**

**இவனிருப்பதைக் கண்டாங்கு**

**இவனை நோக்கி வந்தாள்**

**“எங்கே அவள்?”**

**“அவளின்னும் வரவில்லை...**

**இன்று வந்துவிடுவாள்தானே?”**

**உள்ளத்தவிப்பு சொல்லில் தெரிந்தது**

**விதிர்த்த மெய்**

**வெளிச்சம்போட்டுக்காட்டியது**

**அவனுடைய துயரை**

**“எனக்கும் தெரியாது...**

**காத்திருப்போம்”**

**மணித்துளிகள் மரித்துக்கொண்டிருந்தன**

**இரண்டாயிரத்து எழுநூறு நொடிகள்**

**நத்தையாய் நகர்ந்தபின்னும்**

**அவன் கண்பதித்த பாதையில்**

**அவள் கால்பதியவில்லை**

**வருவாள் என்ற நம்பிக்கையோடும்**

**வரவேண்டும் என்னும் வேண்டுதலோடும்**

**இருவரும் காத்திருந்தனர்**

**காத்திருந்த தோழி**

**கவன்றிருந்த அவனுக்கு**

**ஆலோசனையொன்று அருளினாள்**

**“அவள் இல்லம்**

**நெடுந்தொலைவிலில்லை**

**நேரே சென்று**

**அவளை அழைத்துவரலாமா?”**

**“ஆசிரியரிடம் சொல்லாமல்**

**இவ்விடத்தினின்று**

**அங்கேக இயலாது**

**ஆயினும்**

**இதனை எப்படி**

**அவரிடம் கேட்பது?”**

**தயங்கித் தவித்தான்**

**தேன்தமிழ்க்கவிஞன்**

**“வழி பிறிது இல்லை**

**வா செல்வோம்”**

**தோழியின் சொல்கேட்டு**

**எழுந்தவன் நடந்தான்**

**ஆசிரியரிடம் இசைவுவேண்டி**

**எழுத்தில்லா விண்ணப்பத்தை**

**இருவரும் அளித்தனர்**

**“இசைவளிக்க இயலாது!**

**இருவரும்**

**தம்தம் வீடேகுக!”**

**வந்த குரலில்**

**நொந்தான்**

**செந்தமிழ்ப் பாப்புனைவோன்**

**வாயிலின் வெளியே**

**வந்தவன் சிந்தை**

**காணாமையின் கருத்தழிவால்**

**காயம்பட்டுக்கிடந்த ஞான்று**

**தோழி சொன்னாள்**

**“என்னொடு வருவாயெனில்**

**நின்னவள்தன் இல்லிற்குச்**

**சென்று....**

**வரலாம்”**

**உள்ளத்துவகையை**

**உரைக்கவும் வேண்டுமோ?**

**இருபது அடிகள்**

**எடுத்து வைக்குமுன்**

**“எங்கு செல்கிறீர்?’**

**என்றதொரு குரல்**

**கண்முன்னே நின்றிருந்தார்**

**ஒர் அக்கா**

**செல்லிடம் சொன்னதும்**

**கேட்டவரின் மலர்ந்த முகம்**

**அனிச்சையான எச்சரிக்கை உணர்வால்**

**தானே கூம்பிற்று**

**தடைக்கற்களாய்த்**

**தடைச்சொற்கள்**

**அவரின் உதட்டிலிருந்து**

**அனலருவியாய் இறங்கின**

**“நீ அங்குச் செல்லல்**

**நன்றன்று பையா!**

**சொல்லோ பொருளோ**

**தோழியிடம் கொடுத்தனுப்பு**

**ஆண்பிள்ளை**

**நீ அங்கு சென்றால்**

**அஃது ஏற்கப்படாது இவ்வூரால்”**

**வறட்சியையும்**

**பெருவெள்ளத்தையும்**

**மாறிமாறி எதிர்கொண்ட**

**வேளாண்குடியினரின்**

**நிலமானான்**

**அவன்**

**கவிதை வராமையால்**

**தன் மன ஏட்டை மூடிவைத்துவிட்டு**

**எழுதித் தீர்க்கப்படாத வரிகளைச் சுமந்து**

**அவன்**

**திரும்பிச்சென்றான்**

**ஆங்கு அவள் இல்லில்**

**அவளோ,**

**“அன்னையின் ஆணைக்குள்ளும்**

**அருஞ்சிறை வீட்டுக்குள்ளும்**

**அகப்பட்டுக் கிடக்கிறேன் யான்**

**வருவேன் என்றவன்**

**வந்திருப்பான்**

**வருகிறேன் என்றநான்**

**செல்ல இயலவில்லை**

**காக்கவைக்க விரும்பவில்லை**

**காத்திருக்க விரும்பவில்லை**

**காட்சியை விரும்புகிறேன்**

**என் நெஞ்சமே!**

**நீ மட்டும் செல்கிறாயே!**

**என்னையும் கூட்டிபோ**

**அவனிடம்…”**

*****

**தம் வாழ்நாளின்**

**கடைசி பொதுத்தேர்வுகளுக்குள்**

**அனைவரும் நுழைந்திருந்தனர்**

**முதல்தேர்வு**

**மொழித்தாளான**

**தமிழ்**

**மூளைக்குள்**

**ஒருமதிப்பெண்ணும்**

**இரு மதிப்பெண்ணும்**

**ஐந்து மதிப்பெண்ணும்**

**பத்து மதிப்பெண்ணுமாய்த்**

**தமிழ்ப்பாடநூல்**

**பதிந்துகிடந்தது**

**அதையும் தாண்டி**

**இவனுணர்வோடு**

**அத்தமிழே இயைந்துகிடந்தது**

**உயிரும் உள்ளமும் உருள்விழிகளும்**

**தன்னுள் அவனை நிறைத்த**

**அரும்பேறாம் தலைவியைத்**

**தேடியாங்கே திரிந்தன**

**ஒருதலையுள்ளுதற்கு**

**நச்சினார்க்கினியரின் உரைவிளக்கம்**

**தன்னெஞ்சில் செயல்பட**

**அவள் எங்கிருக்கிறாளென**

**ஒரு தோழியிடம்**

**கேட்கச்சென்றான்**

**தோழியை விளிக்கும்போது**

**அறிவின் கட்டுப்பாடிலன்றி**

**அன்பின் கட்டுப்பாட்டால்**

**இயக்கப்பட்ட நா**

**தன்னவளின் பெயர்சொல்லித்**

**தோழியை அழைத்தது**

**அவனைக் கண்டு**

**ஐயம் கலந்து நகைத்த**

**தோழியின் கண்கள்**

**அந்தக் கள்வனைக்**

**கொட்டிய தேளாகின**

**“மாற்றி அழைத்துவிட்டேன்**

**மன்னித்துக்கொள்”**

**மாற்றமில் அன்பால் என்பதை**

**மறைத்துவிட்டான்**

**நெஞ்சம் கரந்தவன்**

**சித்தம் மொத்தமும்**

**செந்தமிழனையவளிடம்**

**சிறைப்பட்டுக்கிடப்பதையும்**

**அறிவின்மிசை**

**ஆழ்மனதின் ஆதிக்கத்தையும்**

**அந்நொடியில்**

**அறிந்துணர்ந்து**

**ஆணம் மிகுந்தானவன்**

**அற்றைத் தேர்வு**

**அருந்தமிழாகையால்**

**காகிதம் நிறைகிறது**

**கற்ற தமிழால்**

**மைதொட்டுத்**

**தாள்களைத்தின்னக்**

**காத்துக்கொண்டிருந்தன**

**மற்ற ஐந்து தேர்வுகள்**

*******

**காலைப்பேருந்தின்**

**கண்ணாடிமூடாச் சாளரத்தின்வழி**

**காற்று**

**காதுகளுக்குள் புகும்**

**அப்போழ்துதான்**

**அவள்**

**எதிர்த்திசையில் வரும் காட்சி**

**கண்களுக்குள் தவழும்**

**பள்ளிக்குள் நுழைந்தவுடன்**

**அவன் கண்கள்**

**நூலகம் தேடும் வாசகன்போல**

**அவளைத்தேடும்**

**பாராத நூல்களிடை**

**நவில்தொறும் நயம்தரும்**

**பாட்டாய்த் தொகையாய்**

**குறளாய் நாலடியாய்**

**பாரதியார் பாடலாய்**

**கண்ணதாசன் பாடலாய்**

**கவிக்கோ – கவிப்பேரரசின்**

**காதல் கவிதையாய் மட்டுமன்றி**

**அவ் இலக்கிய இலக்கியர்களின்**

**உள்ளத்தெழு கவிதை உணர்வைத்**

**தமிழார்வலனொருவனுக்கு**

**எண்ணும்போதெல்லாம்**

**அளித்தருளும் அமுதசுரபியாய்**

**அவள்…**

**அவள்…**

**தோழியர் குழாத்திடைக் கலந்திருப்பாள்**

**அவளொடு பேசும் நொடிகள்**

**குறுந்தொகை வரிகள்**

**ஆனால் அந்நினைவுகளின் தாக்கங்கள்**

**குறுந்தொகையில் செய்யப்பட்ட ஆய்வுகள்**

**“நன்றாக எழுது”களோடும்**

**“போய்வருகிறேன்”களோடும்**

**நான்கு தேர்வுகள்**

**நகர்ந்து போயின**

*******

**ஆறாம் தேர்வு...**

**பள்ளியிலிருந்துத் துள்ளிக் கல்லூரியில் கால்பதிக்கக்**

**கடக்க வேண்டிய**

**கடைசி நீர்ச்சுழல்**

**வேதியியல் தாள்**

**பென்சீன் வளையங்களால்**

**நிரப்பப்பட்டுக்கொண்டிருந்தது**

**விடைத்தாள்**

**‘வினைத்தா’ளாக மாற்றப்பட்டது**

**அப்பள்ளியின்**

**கரும்பலகைகள்**

**இனி அவர்களுக்காகத்**

**தங்களைச்**

**சுண்ணக்கட்டியால்**

**ஒப்பனை செய்துகொள்ளப்போவதில்லை**

**சத்துணவுக்கூடங்கள்**

**இனி அவர்களுக்காக**

**உணவுதரப்போவதில்லை**

**அவர்கள் அமர்ந்த**

**வகுப்பறை மேசைகள்**

**இனி**

**வேறு பலருடையவை**

**வெவ்வேறு இயற்கணிதச் சமன்பாடுகளாய்**

**ஒரே வரைகட்டத்தாளில்**

**பயணிக்கப்போகும் இவர்கள்**

**சந்தித்துக்கொள்வன**

**எந்தெந்தப் புள்ளிகளிலோ?**

**இத்தனைக்குப் பிறகும்**

**வருகைப்பதிவேடு**

**எல்லாரையும்**

**மறவாமல் பதித்துவைத்திருக்கிறது**

*****

**அறிவுக்காசை மட்டும்**

**மூளையில் முடிந்துகொண்டு**

**புத்தக உண்டியல்களை**

**ஒரிடத்தில் சேர்த்துவைத்திருந்தனர்**

**அந்த உண்டியல்களுள்**

**தன்னுடையதை எடுக்க**

**அவளும் வந்தாள்**

**அவனும் வந்தான்**

**தன்மனதினையும்**

**தாளையும்**

**இணைக்கும் பாலமாய்**

**அவன் நெஞ்சருகில்**

**எப்போதும்**

**ஒற்றைஆளாய் நின்றுகொண்டிருக்கும்**

**அவனுடைய எழுதுகோல்**

**கருநிறத்தது**

**'கரு'மை நிறைந்தது**

**அவளை எழுதிய எழுதுகோல்**

**அவளிடம் கொடுக்கப்படுவதற்காக**

**ஆர்வத்தொடு நின்றிருந்தான் அவன்**

**சொற்களெல்லாம் சேர்ந்து**

**மௌனமாய்க் கனத்தன**

**"ஒரு நிமிடம்"**

**தண்மொழியாள்**

**திரும்பினாள்**

**“உன்னிடம் ஒரு பொருள் தரவேண்டும்...”**

**“இஃது என் எழுதுகோல்**

**நான் உனக்களிக்கும் நினைவுப்பரிசு**

**நானும் உன்னை மறவேன்**

**நீயும்**

**என்னை மறவாதிருக்கவேண்டும்”**

**அவனுடைய சொற்களுள்**

**சொல்லப்படாப் பொருண்மையும்**

**அடர்ந்திருந்தது**

**‘ஒரு கவிஞனின்**

**மிகச்சிறந்த உடைமைகள்**

**பேனாவும் தாளும்**

**என் மிகச்சிறந்தவளான நினக்கு**

**அளித்தது**

**பேனாவை மட்டுமன்று**

**என் பேரன்பையும்தான்’**

**விடைபெறும் நேரம் வந்தது**

**அல்லது**

**அந்நேரத்தை நோக்கி**

**அவர்களை உந்தித்தள்ளியது**

**காலம்**

**“மீண்டும் இனி**

**என்று காண்போம்?”**

**என்று அவன் வினவ,**

**அவள் முகத்தே**

**அளவில்லாச் சோகம்**

**ஆயினும்**

**அத்துணைச் சோகமும் மறைத்து**

**நம்பிக்கையோடு மொழிந்தாள்**

**“இனிமேல் பார்க்கமுடியாது என**

**நினைத்தாயா?**

**மீண்டும் நாம்**

**கண்டிப்பாகச் சந்திப்போம்”**

**சொல்லிவிட்டுச் செல்கிறாள்**

**அன்பினால் துன்பொழித்த**

**நல்லாள்**

**அவள் உள்ளுக்குள்,**

**‘நீ சிந்தும் கண்ணீராய்**

**உன் கவிதை பேசும்…**

**நான் சிந்தாத கண்ணீராய்**

**என் மௌனம் கனக்கும்…**

**காத்திருப்பின் இரவு**

**காணும்போது விடியும்**

**ஆனால்**

**அஃது எக்காலம்?’**

*******

**“நோமென் நெஞ்சே!” என்றன்று**

**“சாமென் நெஞ்சே!” என்று,**

**வன்புறை வழங்கிய தலைவிசெல்**

**வழிநோக்காநின்றான்**

**ஆங்கோரிடத்து**

**அவள் காத்திருந்தனள்**

**அவள் தோழிக்கான காத்திருப்புப் போலும் அது**

**வந்த பேருந்தில்**

**நொந்து ஏறியவன்**

**அவளை மீண்டும்**

**கண்களால் காணமுடியுமா? எனத் தெரியாமையால்**

**உள்ளத்தால் காணத் தொடங்கினான்**

**மறுமைக்கும்**

**முடிவுண்டானது**

**அந்தப் பிரிவில்**

**தீரப்போகும் ஒரு சிற்றேட்டில்**

**அது தீரும்வரை**

**கவிநிறைத்தான்**

***"இனி***

***அவளிடம் தரமுடியுமா எனத் தெரியாத கவியை***

***மனமே!***

***உனக்காக எழுதுகிறேன்***

***அவளை நினைத்து***

***நீ மகிழ்ந்தாய்***

***நினக்கு***

***ஒரு புதுத்தெம்பு கிடைத்ததென***

*பேசப்பேசத் திகட்டாத*

*சொற்களாக*

*உன்னில் வந்து குவிகின்றன*

*கவிதைகள்*

*மனமே!*

*சிலநேரம்*

*விழியும் உன்னுடன்*

*சேர்ந்துகொள்கிறது*

*உறங்க மறுக்கிறது*

*அவள் நினைவை விட்டுவிடாதே!*

*நிலைத்து இவ்வுடலில்*

*பரவியுள்ள உயிர்க்குச்*

*(சாகும் வரையில்)*

*நினைவுகளே நிசங்கள்*

*என்றோ ஒருநாள்*

*வால்மீனைக்காணும்*

*சிறுவனைப்போல*

*மனமே!*

*அவளைக்கண்டவுடன்*

*பேருவகை கொண்டாயே!*

*நான் உணர்கிறேன்*

*பற்பல மாற்றங்கள் உன்னில்*

*பல நேரங்களில்*

*உன் புன்னகையை*

*உதடுகளுக்குக் கடத்துகிறாய்*

*தீராக் கனவு*

*நனவாக*

*நிதமும் இறைவனை இறைஞ்சுகிறாய்*

*என் மனமே!*

*எதிர்வரும் காலமெல்லாம்*

*எதிர்பார்த்திரு அவளை*

*கண்டிப்பாய்க்*

*காண்பாய் அவளை*

*மனமே!*

*உன் வாட்டம் தீர்த்த அவள்*

*வாடாமல்*

*உன் மொழிகளைப்பேசு*

*உன் சிறு கடுஞ்சொல்*

*உயிரை உலுக்கிவிடும்*

*எச்சரிக்கையாய் இரு*

*காலம் கனியும்போது*

*கண்ட கனவுகள்*

*நனவாகும்*

*பிரார்த்தனையை விட்டுவிடாதே!*

*அது மிக முக்கியம்*

*இன்னும்*

*எத்தனையோ உண்டு*

*சொல்வதற்கு,*

*"நம்பிக்கையைத் தளரவிடாதே!"*

*

*அவளைப்பற்றி எழுதுகையில்*

*எழுத்தெல்லாம் இன்புறுகிறது*

*வார்த்தையெல்லாம் வசந்தமாகிறது*

*அவள் புன்னகையே*

*கவிக்கு*

*விளக்கச் சொற்களில்லாத*

*ஒரு நிகழ்வு*

*தீயாய் எரிந்தாயே மனமே!*

*உன்னில்*

*பனிபடரவைத்தாள்*

*அவளொரு*

*தையல் மட்டுமல்லள்*

*அவள் ஒரு புதையல்*

*அவள் கவிதை மட்டுமல்லள்*

*அவள் கதை*

*அவள் கவியின் மனத்தூன்றிய விதை*

*அவளது*

*ஆழ்ந்த சிந்தனையைக் காணுாஉ*

*அசுரவேகத்தில் துடிக்கும் நெஞ்சம்*

*பேசிக்கொண்டிருக்கும்போது*

*இடையூறு வரின்*

*அவள் கண்ணில் தெரியும்*

*கோபம்*

*ஓ! எழுதுகோலே!*

*என்னும்*

*எத்தனை பக்கங்களை நிறைக்கப்போகிறாய்?*

*அவள் நினைவில் எழும்*

*கவிதை வரிகளின்முன்*

*பூமிதொடும் அருவியே தோற்றுப்போகும்*

*ஓ! காடுகளே!*

*சிலகோடி பக்கங்கள் செய்ய*

*மரங்கள் தம்மின்!*

*தேவையென்றால்*

*மேலும்*

*கேட்டுவாங்கிக்கொள்கிறேன்*

*சொல்லேருழவன் நான்*

*அவள் நினைவு மழையால்*

*காகித வயல்களில்*

*விளைந்துகிடக்கின்றன*

*கவிதைகள்*

*என் மனமே!*

*நானொரு மலரின்*

*கனவிற்றோன்றுதல்*

*கனவா? நனவா?*

*எண்ணி எண்ணி வியக்க*

*ஏராளமான வியப்புகள்*

*ஓ! காகிதமே!*

*கலங்காதே!*

*பகிரவேண்டியவை மிகையுள*

*என் மனமே!*

*அறிவாயா?*

*நின்னைக்கொண்டு அவள்*

*என்னைக்கண்டாள்*

*அவள் நேசித்தது*

*முகமன்று - அகம்*

*நேசம் என்ற சொல்லைப்*

*புரியவைப்பதற்குள்*

*அவளுக்கு*

*என்னென்னவாகியிருக்குமோ?*

*ஒற்றைச்சொல் கிளப்பதற்குள்*

*கற்றை கற்றையாய் நொடிகள்*

*காலக்காற்றில் கரைந்துபோயின*

*ஆயினும்*

*புரிந்துகொண்டேன்*

*புரிந்துகொளப்பட்டேன்*

*புரிதலே வாழ்வு*

*ஓ! பிரிவே!*

*எம்மை விட்டும்*

*பிரிந்துபோ!*

*ஓ! இறைவா!*

*எனக்குப்*

*பிரியா வரம் கொடு*

*இக்கணம்கூட*

*என்னால் நம்பமுடியவில்லை*

*இவையெல்லாம் நனவென*

*மனமே!*

*நீ அறிவாயா?*

*புலம்புகளில் புதைந்த*

*புதுக்கவிதை புனைவோனை*

*மகிழ்ச்சியால் மிகவைத்தாள்*

*என் மனமே!*

*பிரார்த்தனையை நிறுத்திவிடாதே!*

*கூறியது கூறலென்னும் வழுவிருந்தாலும்*

*தளராத நம்பிக்கையைத்*

*தரவல்லது*

*இப்பிரார்த்தனை*

*இக்கதை*

*இன்பியல் முடிவெய்த*

*இடைவிடாத பிரார்த்தனை*

*இன்றியமையாதது*

*உன் சிறு அருவக்கடலில்*

*எப்படி இத்தனை அலைகளை*

*நிதம் தோற்றுவிக்கிறாய்?*

*சில நேரங்களில்*

*உன் கவித்துவம்*

*அவள் நாவியைந்த*

*மனம் மொழியும்*

*எளிய சொற்களில்*

*கரைந்துபோகின்றதோ?*

*இன்னுஞ்சில் வரிகளில்*

*இவ் ஏடு தீரும்*

*எண்ணங்கள் தீருமா?*

*நெஞ்சத்துள்ளாளுடன்*

*இணைந்துவாழும்*

*இன்வைகல் வேண்டுகிறேன்*

***என்றன் இறைவா!”***

**அவன் நவின்றன மெய்யே**

**ஏடு தீர்ந்தது**

**எண்ணங்கள் தீர்ந்தில**

**அவை தீரா**

**எஞ்ஞான்றும்...**

## நொந்திடுங் கவிஞனும் அந்தமிழ்க் கவிகளும்

**ஈங்கியான் இயம்பவிருப்பன**

**புறத்து நிகழ்வனவே**

**அகத்து நிகழ்வனவற்றை**

**அவனாயிருக்கும்**

**அவன் கவிகள் உரைக்கும்**

**விட்ட முறையால்**

**துயரத்தினைக்**

**கொட்டியழ யாருமின்றி**

**ஆழியாகவும் அவனாகவும்**

**தனிநபராய்த்**

**தன்னைத்தானே தேற்றுகிறான்**

***”என் கூற்று:***

***’கத்துகடலே! கத்துகடலே!***

***கார்வண்ண முகில் கரைந்தது கண்டு***

***கத்துங்கடலே! கத்துங்கடலே!***

***கார்வண்ண முகிலே நீர்வார்த்து உன்னில்***

***நேயமுற் றியைந்த தறியாயோ கடலே!’***

*கடற்கூற்று:*

*’கவிபுனைவோனே! கவிபுனைவோனே!*

*கத்துகடலெனில் கலந்த அம்மேகம்*

*கதிரவன் வெம்மை என்மேல் பட்டுழி*

*கருமுகி லாகி வான்செலல் காணாயோ?’*

*என்கூற்று:*

*’கலங்குகடலே! கலங்குகடலே!*

*நேயம் நெஞ்சில் பெற்ற கடலே!*

*விளங்குவாயே! விளங்குவாயே!*

*உன்னி லிருக்கு மொருதுளி போதாதோ?*

*நேயமுண்டெனில் நினைவுண்டாம்*

*நினைவுண்டெனில் நேயமுண்டாம்*

*நின்னுட் பெருமளவு நேயமிருக்க*

*நெஞ்சம் ஒய்ந்து புலம்புவாயோ?’*

****

**நாளொன்றில்**

**தாளோடு பேசத் தொடங்கித்**

**தன்னவளோடு பேசும் கவிதையைத்**

**தந்திரக் கவிஞன்**

**தன்னேடு நிறைத்தான்**

*”இம்மனத்தில் எழுவன எதுவாயினும்*

*ஏற்றுக்கொள்ளும் இக்காகிதமே!*

*நீ*

*என் நெஞ்செழுந்த சிலவற்றைக் கேட்பாயா?*

*எனக்குப்பிடித்த*

*மலருக்காக*

*நானெழுதுகிறேன் இதனை*

*மலரே!*

*இம்மண்ணில் வித்தூன்றிய செடியில் பூத்த*

*நறுமலரே!*

*இக்கவியின் நெஞ்சத்தைச்*

*செந்தேனால் நிறைத்த*

*நன்மலரே!*

*நிறைத்தாய், என்னை உன் அகத்தில்*

*நிறைந்தாய், நீ என் அகத்தில்*

*கண்டாய், என் அகத்தை*

*என்னைப்பற்றி நானே*

*தவறாக நினைத்துரைத்தபோதும்*

*நீயுரைத்த பொன்மொழிகள்*

*அன்றெனக்கு உறைக்கவில்லை*

*இன்றெனக்குப் புரிகின்றன*

*எனக்குள்ளிருந்த 'என்னை'*

*வெளிக்காட்டினாய்*

*பற்பல மாற்றங்கள்*

*என்னுள் தோன்ற*

*ஒரு விதையானாய்*

*மலரே!*

*உன்னுடன் நான் பழகியது*

*சிலகாலந்தான்*

*ஆயினும்*

*என்னைப் புரிந்துகொண்டவள் நீ*

*முழுதாக; ஆழமாக*

*நவில்வன நலமாக வேண்டும்*

*எழுத்துக்கள் நலமாக வேண்டும்*

*வாக்குகள் நலமாக வேண்டும்*

*பார்வைகள் நலமாக வேண்டும்*

*எண்ணம் நலமாக வேண்டும்*

*மலரே!*

*உனக்காக நானென்னை*

*நலமாக மாற்றிக்கொள்கிறேன்*

*நீ விரும்பிய-*

*கண்ட என்மனது*

*என்றும் இனிமையானதாக*

*உன்னைப் புண்படுத்தாததாக*

*என்றும் உன்னால் வெறுக்கப்படாததாக*

*முக்கியமாக*

*உண்மையாக இருக்கவேண்டும்*

*மலரே!*

*உன்னை மறந்துவிட்டு*

*இவ்வுலகில்*

*வாழ்வதென்பதை*

*நினைக்கினும் என்மனம் சாம்!*

*மலரே!*

*குறியீட்டுக்குள்தான்*

*குறுகிக்கொண்டிருந்தேன்*

*நீ*

*அதனை மொழிபெயர்த்துவிட்டாய்”*

**உற்ற தனிமையின் உறுதுயரால்**

**இற்று மென்மனம் இறக்கும்முன்**

**’கற்பேன் தமிழே’ என்றிவனும்**

**பெற்றான் கல்லூரி வாழ்வினையே**

**குற்றமா? குற்றமா? எனக்**

**குமுறி எழுகின்றான்**

**பொற்றமிழ்க் கவிஞன்**

**பேரழல் கோல்புக**

***”காணத் தவிப்பது குற்றமா?***

***கவிதை எழுவது குற்றமா?***

***நேயம் வளர்த்தது குற்றமா?***

***நேர வைத்தவன் குற்றமா?***

***நெஞ்சம் துடிப்பது குற்றமா?***

***பஞ்செனப் பறப்பது குற்றமா?***

***கெஞ்சிக் கேட்பது குற்றமா?***

***மிஞ்சப் புயல்வரும் வேளையில்***

***தஞ்சம் புகவோர் இடமிலை***

***விஞ்சு தமிழ்க்கவி உரைக்கினும்***

***நெஞ்சம் நேர்ப்பட உரைக்கிலேன்***

***என்னை செய்குவன்?யானிங்கே?***

***எம்மைத் துயருறப் படைத்தையோ?***

***விடுபடு அம்பெனக் கேள்விகள்***

*விடைதர உள்ளம் இல்லையோ?*

*மயங்கிய மனதின் மாலையில்*

*நானும் தனிமொழி கிளத்தனன்*

*பின்னதைப் போதிடம் இயம்பினன்*

*என்கவி புரிந்த ஒருயிர்*

*எண்ணத்திற் பூவாய் மலர்ந்தது*

*பின்னந்தப் பூவும் கழையின்பூ*

*என்றென்றன் சிந்தை ஒர்ந்தபின்*

*மிகவளர் மூங்கில் புல்லானேன்*

*முடிவினில் வளர்ந்திட்ட பூவோடு…"*

***

**பாதையே இல்லாவிடினும்**

**நேரம் மட்டும்**

**ஓடிக்கொண்டேயிருந்தது**

**அவள் குரல்**

**அவன் காதுகளில் பட்டு**

**ஆண்டுகளிரண்டு**

**கடந்திருந்தன**

**யாரிடம் சொல்வது?**

**இனிச்**

**சொல்ல ஏதுமில்லை**

**கேட்டான்**

**ஆறாத் தனிமையில்**

**அணங்குற்று**

**இசையியை தமிழால்**

**இறைவனிடத் திறைகேட்டான்**

*”உரையாய் - பதிலுரையாயென*

*திறைவா! பதிலுரையாய்*

*நிறைவை என்றுதருவாயென*

*திறைவா பதிலுரையாய்*

*பிழைசெய் திடின் பொறுப்பாய் பெரும்*

*பிழைசெய் மன மெரிப்பாய்*

*நிதமென் மன மெரிப்பா யெனி*

*லிவன்செய் பிழை யாதோ?*

*புகல்வா யென் முதல்வா என*

*நெடுநா ளுனைக் கேட்டேன்*

*இயம்பா ததை மறைத்தே என*

*துறக்கந் தனைக் கெடுத்தாய்*

*தவந்தா னென்று முடியும் என்*

*தலைவா! எனக் கேட்டேன்*

*உரைக்கா திங்கு மறைத்தே எனை*

*இறவா திறப் பித்தாய்*

*விதிசெய் திடுஞ் சதியா இலை*

*இறைநீ செயுஞ் செயலா?*

*எதுவா யினுங் கரவா தெனக்*

*கிறைநீ சொல் இறைவா!*

*நதிமேற் செலும் படகா யிங்கு*

*விதிமேற் செலும் வாழ்க்கை*

*கதிநீ யென நினைத்தே இரு*

*கரமேந்தி நின் னிடத்தே*

*தருவா யென் மலரை எனத்*

*தவிப்போ டியா னிரக்கத்*

*திருவா யது மலர்ந்தே ஒரு*

*பதிலை நீ உரையாய்!*

*நெடுநாள் நீள் நெடுநாள் நீள்*

*நெடுநாள் நீள் நெடுநாள்*

*விடைதா னது தெரியா மலே*

*நடந்தேன் வெறும் பிணமாய்!*

*மனந்தா னஃ துகுக்கும் பல*

*துளிகள் செந் நீரை*

*தினந்தா னது வருந்தும் மலர்*

*காணா தத னாலே*

*மனமே என் மனமே என்*

*மனமே நீ வருந்தேல்!*

*கனவா ன தொருநா ளிங்கு*

*நனவா கிடு முறுதி!”*

**இறுதிவரி**

**இறைவனின் இறைபோலும்.**

**ஈரிமை**

**காரிகை**

**எதிர்ப்பட**

**தவஞ்செய**

**நினைவிலோர் துளிர்ப்பு**

**மனதிலோர் சிலிர்ப்பு**

**தமிழெழுதும் நறுங்கவிஞன் மலருடனே**

**தனித்திருந்து கதைத்திருந்த பொழுதினிலே**

**”இலக்கியங்கள் படைத்திடவும் விருப்பமுண்டோ?”**

**எனஇவனும் வினவுகையில் அவளிவற்கு**

**விடையிறுத்தாள் விளம்பினள்தன் விருப்பத்தினை**

**”கவிதை புனைதல் கடிதெனத் தோன்றலால்**

**கதைக ளெழுதப் பயிலவே நசைஇனள்**

**அதைநீ எனக்குப் பயிற்றுவா யோ?” என**

**விரியும் விழியொடு மலரவள் கேட்டனள்**

**மறுமொழி சொன்னான் மலரொ டமர்ந்தான் ”உனக்கெனில்யான்**

**மறுப்பது முண்டோ? பயிற்றுவன் வேறோர் பணியுமுண்டோ?**

**மறுக்கிலேன் சின்னா ளியன்றது சொல்வேன் உளத்தினிலே**

**நிறுத்திடு” கென்றே மலரும் முகத்தான் புகன்றனனே**

**ஈதெண்ணி இவனெஞ்சு சுமைதாழ**

**போதெண்ணும் பொழுதில்லே அதுநோக**

**மீத்துன்பம் பேரின்ப மிரண்டும்மே**

**மேவிற்றே என்செய்வா னிவனும்மே?**

*******

**இறைவனுக்காய்ப் பாடித்**

**தான் உருகினர் பலர்**

**தனக்காய்ப் பாட**

**இறைவன் உருகமாட்டானா?**

**கையில் ஒட்டியிருக்கும் மை**

**கண்ணீரொடு கலக்க**

**கோல்வழி-**

**கோல்நடக்கும் தாள் வழி**

**விண்ணப்பஞ் செய்கிறான்**

**விரக அனலிடை**

**நோகும் புத்தகப்புழு**

***”இருகண் திறந்தெனைக் காணா யெனினும்***

***ஒற்றைக் கடைவிழிஒளி என்மேல் வீசாயோ?***

***நித்தமும் நேயம் வளர்த்துப்***

***பித்தனைப் போலாகிநிற்கும் - என்னை***

*இத்துணைத் துன்பம் செய்கிறாய்?*

*எட்டுணை இரக்கமிலையோ?*

*என்னிலை நானுஞ் சொன்னேன்*

*நிந்தைகள் உன்மேல் சொல்ல*

*என்றனுக் காசையில்லை*

*இறைவனேநீ அருள்புரிவாய்!*

*வாளிலாப் போரக்களத்தே*

*வெட்டுறும் மறவன் போல*

*ஏதுமிலான் என்னை நீயே*

*இடருற வைத்தாய் ஏனோ?*

*உண்மையாய் நேயங்கொண்டால்*

*உயிர்வாழுங் காலத் தில்லே*

*உயர்ந்தஉன் வரத்தை விரைந்தே*

*என்கண்ணில் காட்டாயோ?*

*எத்தனை பிழைகள் செய்தேன்*

*எத்தனை முறைநீ பொறுத்தாய்?*

*இப்பொழுதி யான்செய் பிழையை*

*எனக்குநீ தெரிவிப் பாயோ?*

*என்னயான் செய்வ னிங்கே?*

*எண்ணத்தெழுங் கவலை எல்லாம்*

*நின்னிடத்தே கவிதை யாக்கி*

*வேண்டினேன் நாளும் நானே!*

****

**அன்றொரு நாள்**

**எந்நாளென்று**

**நினைவில்லா ஒர்நாள்**

**அழலுண் மனத்திடை**

**அடிமறிமண்டில**

**ஆசிரியமொன்று தோன்றிற்று**

**ஒவ்வொரு வரியிலும்**

**ஈற்றோகாரம்**

**விடைகாணாமல்**

**இட்ட ஒலம்**

**அவன் மனதுக்கே கேட்டிருக்க வாய்ப்புண்டு**

*"தீராக் கவலை யதுமறைந் திடுமோ?*

*நேரா மையே நிலையா கிடுமோ?*

*வாரா தென்றன் வரம்போய் விடுமோ?*

*பாரா தென்ற னிறுதிநாள் வருமோ?*

**நொந்து போயிருந்தால்**

**சிந்துப்பா வருமா?**

**அந்தமறியாத் துயரால்**

**எந்தப்பாவாயினும்**

**சிந்தைதோன்றும்**

***"மண்ணுதித்தோன் விண் ஏகுமுன்னே - என்***

***மலரினைக் கண்டிட ஏங்குகிறேன்***

***கண்ணுகுதே உவர் நீர்த்துளிகள் - நான்***

***கற்பனைக் கடலில் நீந்துகிறேன்***

***வண்டமிழால் என் மனக்குமுறல் - இவ்***

***வையகம் கேட்டிடச் சாற்றுகிறேன்***

***மண்டியிட்டேன் அந்த இறைவனிடம் - தீ***

***வினைநீக்கி விடை தருகவென***

***சொந்தமென்றாள் அவள் பிரிவினில்நான் - மீ***

***நொந்தனன் அதைக்கவி யாக்குகிறேன்***

***செந்தமிழாய் மனம் புகுந்துவிட்டாள் - நல்***

***சிந்தையில் வைத்துநான் போற்றுகிறேன்***

*பந்தமொன்றைத் தழல் பந்தமொன்றை - என்*

*சிந்தைவைத் தான்அந்தோ! வெந்திறந்தேன்*

*முந்திடுதே என் விழியிரண்டும் - நீர்*

*சிந்துவதில் இதை என் மொழிவேன்?*

***

**”தாள்” சேர்த்தும்**

**”அடி” சேர்ந்தும்**

**பயனில்லை**

**நிகழ்காலம்**

**நெஞ்சநெருப்புக்கு**

**விறகள்ளிப்போடுவதைத் தவிர**

**வேறெதுவும் செய்தபாடில்லை**

**கண்ணீர்த் திரவமும்**

**மைத்திரவமும்**

**சுரந்து சுரந்து**

**”தாள்” சேர்வதும்**

**”அடி” சேர்வதும்**

**நிற்கவில்லை**

**நம்பிக்கைப்பெயல் வரும்வரை**

**நெஞ்சநெருப்பு**

**எரிந்தபடிதானிருக்கும்**

**அஃது உருவாக்கும்**

**கவிதைச்சாம்பல்**

**அதை நீறாக**

**மறைத்திருக்கும்**

***”காணாமலே***

**நாள்கள் *கடந்திடுதே***

***பேணாமலே***

***உள்ளம் துயருறுதே***

***ஏனோஇடர்***

***தன்னை நீஈந்தாய்?***

***வீணேஇவன்***

***வாழ்தல் எனநினைத்தா?***

***பேசாமலும்***

***நேசம் வளர்த்திருப்பேன்.***

***கூசாமலே***

***உன்கண் இரந்திருப்பேன்***

*பாசாங்கென*

*நீயும் எண்ணுதியேல்*

*நீசன்எனைக்*

*கொல்வாய்; மகிழ்வுறுவாய்*

*உயிர்வளர்ப்பால்.*

*கொண்ட பயனெதுவோ?*

*மயிர்வளர்ப்பின்*

*மழிக்கும் செயலிதுவோ?*

*மயலில்லை*

*மெய்யாய் நேசம்வைத்தேன்*

*புயலின்கண்*

*என்னைப் போக்குவையோ?*

*இயலாமை*

*என்னும் பொறியினிலே*

*நயமாக*

*என்னை மாட்டிவிட்டாய்!*

*இரங்காயோ?*

*என்ற னிறைவாநீ*

*கரவாது*

*போதைக் காட்டிடுவாய்!”*

*****

**நம்பிக்கை என்னும் சுண்டுவிரல்**

**தனிமைத்துயரம் அவன்மீது விழாமல்**

**தாங்கிப்பிடித்துக்கொண்டிருந்தது**

**அந்தச் சுண்டுவிரல் இல்லையெனில்**

**மழை பொழிந்தன்று**

**மலை விழுந்தே**

**அவன் யாக்கைச்சாடி**

**உடைந்து**

**உயிர்த்திரவம் வெளியேறியிருக்கலாம்**

**அவள் நினைவையே**

**கட்டுச்சோறாகக் கட்டிக்கொண்டு**

**கவிதைவெளியில்**

**பயணம்போகிறான்**

**காகித ஊர்தியேறி**

*"கண்களில் தெரியும்*

*பலவகை உணர்வுகளைக் காண்கையில்*

*உயிர்த்தெழும் கவிதைகளின் வேகம்*

*ஒளியின் வேகத்தினும் கடிது*

*பாசமின்றிப் பாலையில் தவித்த என்னை*

*நேசநிழலில் அமர்த்தினாள்*

*நான் நிழலிருக்கிறேன்*

*அமர்த்திய அவளையோ*

*காணும் தொலைவுவரை*

*காணவில்லை*

*என் நெஞ்சக் கனல் குறைத்து*

*நேயச் சுடராக்கியவள்*

*மனஅறை எரிக்கும் தீயாகவிருந்ததைக்*

*கனவறை ஏந்திய தீபமாக்கினாள்*

*இறப்பின் முன்னர்க்*

*கண்ணெதிர்த் தோன்றுவாள்*

*இயலுமக் காலம்வரை*

*காத்திருப்பான் இவன்…"*

**தனிமைச்சிறை**

**மனஅறைக்கதவு திறந்து**

**உள்ளே வருகிறான்**

**ஆற்றாமைக்காவலன்**

**வந்தவன் சொல்கிறான்**

**"மரணம் உன்னை அழைக்கிறது"**

**"என் நினைவுப்புத்தகத்தில் வாழ்ந்துகொண்டிருக்கிறேன்**

**நீ சிறிது காலம் கழித்து வா"**

**கோரக் கைகள்**

**நிரந்தர விடுதலைக்காய்**

**அவனை வலுக்கட்டாயமாக**

**இழுத்துச்செல்கின்றன**

**அன்புவைத்த குற்றத்திற்காக**

**அவன் கழுத்து**

**கயிறுகளால் தாங்கப்படப்போகிறது**

**இறைவ நீதிபதி கேட்கிறார்**

**"உன் கடைசி ஆசை என்ன?"**

**"முதலிலிருந்தே**

**என் ஆசை அதுதான்**

**என்னவளைக்**

**கண்ணால் காணவேனும் வேண்டும்"**

**தண்டனை தள்ளிவைக்கப்பட்டது**

**காலம் கடந்தது**

**கவிதைகள் பலபுனைந்து**

**கன்னித்தமிழ்கொண்டு**

**கண்ணிய வெண்பாவான்**

**காப்பியம் வரைவதென்றே**

**கவிஞன் கோலெடுத்தான்**

## பெருநேயக்காலம்

### இறை வணக்கம்

முத்தொழில் செய்யும் முழுமதி கொண்டோனே!
புத்தியும் நெஞ்சமும் மொத்தமு மொன்றிணைய
நற்றமிழ் தன்னிலே நானுரை காப்பியம்
குற்றமற் றேவரச் செய்!

### தமிழ் வாழ்த்து

மண்முதற் செம்மொழீ! மாந்தனென் நெஞ்சுற்று
வண்மைகொண் டேபல சொற்றரு வள்ளலே!
ஒண்மையுந் தண்மையு முண்மையுங் கொண்டொளிர்
வண்ணக்கன் னீவாழி! நீண்டு.

### என்குறள்(ரல்)

1.நானென்னைச் சொல்லியுள்ளேன் காப்பியத்தே அஃதுணர்ந்து
தான்கற்பீர் நல்லகஞ்சொன் னூல்.

**2.அறத்தொடியான் நின்று  நறுங்காதல் சொன்னேன்**

**சிறப்புடைய செந்தமி ழால்.**

**3.உளத்தே மறைத்திடு நற்காதல் சொன்னேன்**

**வளம்நிறை வண்டமி ழால்.**

**4.உறற்கரி மெய்யன் புணர்ந்திடா நெஞ்சம்**

**பெறற்கரி பேறிழந்த தாம்.**

**5.பிரிவுதனை வெல்லும் பெருங்காதற் சாற்றுஞ்**

**செறிவுடைத் தித்தொடர்ப் பாட்டு.**

**6.உள்ளப் புணர்ச்சியைச் சொன்னே னிதனிலே**

**வள்ளற் றமிழ்கொண்டி யான்.**

**1.தோன்றுநல் நேயத்தின் நிலை**

**தமிழ்தன்னைத் தேனென்று தானறிந்து கற்றார்**

**அமிழ்துண்ட இன்பந் தன்னை, உயர்காதற்**

**கொண்டவ ரெல்லா முறுவர்; புரட்டில்லை.**

**உண்மை தனைச்சொல்லி னே,நல்ல நேயங்கொள்**

**சில்லோ ரவர்காணும் பேரண்ட மிக்காத**

**லல்லோர் மொழியு முலகத்தின் வேறே.**

**களவென் றிதற்குப் பெயர்நிறீஇத் தம்தம்**

**உளமொன் றிடினே அவர்களுடை வாழ்வைத்**

**தெளிவா யமைத்திடத் தேர்ந்த நெறியை**

**அளித்தேஎ போந்தனர் மற்றிதில் மாற்றமோ?**

**நெஞ்சம் நனிவிரும்ப உண்மையும் மேலோங்க**

**மிஞ்சும் புரிதலுஞ் சேர்ந்துநல் லன்பொடு**

**தஞ்சம் புகுந்திடின் துன்பினைப் போக்கிடு**

**மெஞ்சுந் துயர்க்கும் மருந்தா யமைந்திடும்**

**ஆறுதல் கூறிஅந் நேரத்தில் தன்னிணை**

**தேறிடத் தண்ணிய பன்மொழி சொல்லியே**

**இந்நாளு மிப்பொழுது மின்றுபோ லென்றுமே**

**நம்மிணை நம்மினின்று நீங்கா திருந்திடத்**

**தெய்வந் தொழுதிடச் செய்திடும் நேயமதை**

**மெய்க்காத லென்று புகழ்தற் பொருந்தும்.**

**இழிவா மிதுவென் றிகழ்வார் செவியின்**

**மொழிகுவன் சின்மொழி நெஞ்சி னிறுத்துமின்!**

**காடுவாழ் மாவினங் கூடிடுங் கூட்டமே**

**பீடுறு காதலா மென்றுநீ ரெண்ணிடின்**

**கேடுநும் மெண்ணம். கெடுதியான வொன்றினைக்**

**காதலோ டொப்பிடற் பொய்க்குநேர் மெய்யென**

**ஓதுதற் போன்றதா முண்மை தெளிந்துணர்மின்!**

**யாதுமெய் யென்றறிந் தந்நெறி கொண்மின்!**

**இவையெலாஞ் செப்புதற் கேதொன் றுளது,**

**நவையிலாக் காதலஃ தென்னவென்று தேராதிக்**

**காப்பியங் கற்பது நல்லுயிர்ப் பின்றியே**

**யாப்பிலோர் செய்யுளை யாப்பதை யொத்ததே!**

**ஏரணம் நோக்காது நீடரு நீழலாம்**

**சாரற் குளுமையாஞ் செந்தமி ழஃதுரை**

**மெய்ப்பெருங் காதற்சொல் லிக்குறுங் காப்பியஞ்**

**செய்திடு வேனவ் விறைவ னருள்புரிக!**

## 2.காய்வெண்மதி நிலை

**கங்குற் றொடங்கிடுங் கால முதலாகச்**

**செங்கதிர் வானி லெழுங்கால மீறாக**

**விண்ணில் வலம்வந்தே பற்பல பாவலர்**

**பண்க ளியற்றப் பயனுற லாகியு**

**மென்னவள் நெற்றியிஃ தென்று புகன்றிடவும்**

**மென்னவள் கைநகமிஃ தென்று நவின்றிடவுந்**

**தன்னை யுவமையா யாக்கினுந் தன்தலையில்**

**சின்னக் கணமு மிராததா யாகியும்**

**மண்ணி லுயிர்கள் கதிரவன் வெம்மையாற்**

**றண்மை யடைவதற் கேங்க, அதுபுரிந்**

**தொண்மை யதனுடன் தண்மையுந் தான்வழங்கி**

**வெண்மை நிறந்தன்னில் விண்விளக் காகியுங்**

**காசினிமேற் காதலுற்றுத் தானதனைச் சுற்றிவந்து,**

**பேசிடவே வாய்ப்பின்றி நீள்விசும்பில் தேய்ந்தும்**

**வளர்ந்துமே தன்துயரைப் பூமிக்குச் சொல்ல**

**உளத்திலே ஒய்தலின்றித் தான்முயல்வ தாகியும்**

**அண்டத்திற் பல்கோடி விண்மீன்கள் காரிருளிற்**

**கண்மூடி யச்சப்பட் டாங்காங்கு நிற்க,**

**ஒளியா யமைந்தே உளங்கொள் பயத்தை**

**வளியின்றித் தான்மிதந்து நீக்குத லாகியும்**

**பாட்டி வடைசுடப் பாங்கா யமைந்ததொரு**

**வட்டமதி யாகிமண் வாழ்மாந்தர்க் கெல்லாம்**

**உழைத்துப் பிழைப்பார் பொருளேய்த்த லென்றும்**

**பிழையெனக் காட்டக் களமா யமைந்தூஉம்**

**அள்ளக் குறைவிலா ஆன்ற அறிவுதன்னை**

**வெள்ள மெனக்கொணரக் கொண்மூவோ டொன்றான**

**வெள்ளை நிறத்தோஒய்! மேதினியிற் காதலரி**

**னுள்ள மொருங்குறச் செய்திடு வெண்மதியே!**

**உன்னை முகிற்போர்த்து நீமறைதற் காண்குறின்யான்**

**முன்ன முனைக்கண்ட நன்னிலை யெண்ணியே**

**வண்ண மடிப்பேனென் காலப் பெருவெளிக்கு,**

**சுண்ண மடித்தன்ன வெண்மைகொள் பால்மதீ!**

**நன்னய ளேற்றிய உள்ளொளி போலொளிர்வாய்**

**அன்னவளில் காலம்போ னீயொருநா ளேனிருண்டாய்?**

**கண்சிமிட்டும் விண்மீன்க ளெல்லாமுன் காவலராய்**

**விண்நாட்டின் மன்னவளே! பேரெழிலே! தண்மதியே!**

**3.உடன்செலுங் காலத்தின் நிலை**

**பேரண்ட மெல்லாம் பொதுவாகித் தன்னுடைய**

**ஆரம்ப மாய அரியதுவாய்த் தானேஎ**

**பேராற்றற் கொண்டோனின் கைப்பாவை யாகித்தண்**

**ணீராலுந் தீயாலும் மாளாத தாகி**

**வியலகந் தன்னி லறிவுடை யோரு**

**மியன்றிலர் தன்னை யடக்கிட வென்றே**

**செருக்கொடு சேர்ந்து வழுவில தாகி**

**திருக்குநேர் தன்னை நிறுக்குஞ் சிறப்பெய்திக்**

**கால மெனப்படத் தன்பெயர் கொண்டுபல்**

**கோலங் களைப்பலர் வாழ்விலே மாற்றிப்**

**பெருகு மகிழ்ச்சியு மாகிப் பிறகு**

**பெருகுந் துயராயு மாகிஇம் மாந்தர்**

**உயிர்நோகச் செய்தும் உளம்மகிழச் செய்துந்**
**செயிர்தீரத் தன்வினை செய்தே முடிக்குங்**
**குணங்கொண்ட தாயமைந்து குற்றஞ்செய் தோஒர்க்**
**கிணங்காமல் நீதி யுடைத்தா யுளமொத்த**

**காதலர்தம் வாழ்வினின் முள்ளாய்ப் பிரிவாக**
**ஆதலும்; பூவாய் இணைசேரச் செய்வதுமாய்**
**தீதறு தீங்காதற் றிண்ணமா யாகிடவே**
**பூதலம் வாழ்மாந்தர் வாழ்வினைச் சீராக்கிச்**

**சிந்தித்துத் தேறிடச் சிந்தையி னில்லாது**
**சந்தை தனிலுங் கிடைக்காத வோரியல்பா**
**லன்றோ புதிராய்ப் புரியாமற் போகியே**
**என்றும் நினைவினின்று நீங்காத தாகியே**

**இன்றிந்த வாழ்வில்யா னிப்போது சொல்லுமிந்த**
**அன்புக் கதைதனுக் காதார மாகியே**
**என்பாவில் வந்தமர வெட்கமுங் கொண்டதோ**
**பின்செல் லியல்பொழிந்து முன்செலுங் காலம்.**

## 4.காதலர் நிலை

பெருஞ்சிறப்புக் கொண்டஇக் காத லிணையி

னருமை யுடையதாம் வாழ்வில், விருப்போ

டுளமறிந் துண்மையோ ராகி யுளத்தே

அளவிறந்த அன்புதனைக் கொண்டேஎ, தாமிருவர்

வேறல்ல வொன்றேஎ என்றெண்ணச் செய்வார்கள்

கூறத்தான் போகின்றேன் காதலர் தந்நிலை.

நம்பிக்கை என்பதனைத் தன்னுயிரென் றாக்கிவா

னும்பரு மெய்தற் கரியமெய்க் காதலையே!

மேன்மைபெற் றேயொளிர் நங்கையைக் கூறின்,செந்

தேன்மொழி யாளவள்; தன்னுளந் தன்னிலே

என்றுந் தலைவனை வைத்திடு மின்பத்திற்

றன்னிலை தான்மறத்த லாகி, அவனைநேர்

நோக்காமற் போனாலே மீத்துயராற் றன்விழியிற்

றேக்கியுங் கன்னத்தி லோடுப்பு நீரிற்

றுயரங் கரைக்க முயல்பவ ளாகி

அயலி லெவரேனுங் காணுமுன் கண்துடைப்பாள்

தன்னவன் கண்நோக்கின், தன்விழி மூடாது

மென்மை யுடையுளத்தாள் நாணொடு பல்மொழிகள்,

**பேசிக் களிப்பாள்; பிறங்கு மறிவினள்**

**நேசித் திருப்பா ளவனினைவி னீங்காதாள்**

**தோற்றம் மொழிந்திடத் தோன்றிலது; காதலி**

**லேற்றமுடைக் காதல், புறவெழிற் பாரா**

**மனத்தா லிணைவது வாமத னாலே**

**வனப்புங்கள் கற்பனையாம்; மெய்க்காதல் யான்சொல்வேன்.**

**தன்மனம் சேர்ந்தானைக் காண அவளும்மே**

**என்ன விரைவாக ஆயத்த மாவாளோ?**

**பொன்னகை யின்றியும் புன்னகை யோடு,மலர்**

**தன்னைத் தலைச்சூடித் தோன்றலவன் நோக்கமகிழ்**

**போதவள் நெஞ்சுள பைந்தமிழ்க் காதலன்,**

**மாதவத் தானவன் வாழ்வினைச் சொல்லிடின்**

**தண்டமிழிற் பாவியற்றும் பாவலனா மென்றுதன்னைக்**

**கண்டோ ரிடத்திலே சொல்லிடுவான், அத்தலைவன்**

**நற்றமிழைக் கற்பவனா வானே. அவன்கவிகள்**

**வெற்று மொழிக்குவிவோ? நீங்களதைத் தேர்ந்திடுவீர்!**

**ஒங்கிடுங் காதலுட னோருயிர்க் காகஅவ**

**னேங்கியே காத்திருப்பா னீற்றிலவ ளைக்காண்பான்.**

**மாற்றமே யில்லாத நம்பிக்கை கொண்டவன்,தன்**

**னாற்றாமை யாரிடத்துஞ் சொல்லாமற் காகிதத்தி**

**லேற்றி யதைப்பயில்வோர் தன்துயர் நோக்காரென்**

**றாற்றுப் படுத்தித்தன் நெஞ்சொடுரை யாடிடுவான்.**

### 5.நீண்டிடு காத்திருப்பின் இன்பத்துயர்

**காத்திருத்தல் காதலிலே நம்பிக்கைச் சோதனையாங்**

**காத்திருத்தல் காதலரின் உள்வலிமை யஃதுரைக்கும்**

**காத்திருத்தல் காதலர்க்குக் காடுறையும் மேன்முனிவோர்**

**காத்திருந்து பேறுபெறும் நற்றவமா யாவதுவே.**

**காதலரி னன்பாய கட்செவிக் கெட்டாதான்**

**நோதலிலு மின்பிணைத்துக் காத்திருப்பை ஈந்தாஅன்**

**நூலுரைக்குங் காத்திருப்பைத் தானுணரின் தானறிவர்**

**நூலுள் நுவன்றதெல்லாம் பொய்யில்லை யென்றே.**

**தனிமைத் துயருறுவோர் தன்னிலை கேண்மின்!**

**இனிமை யுடையதோ ரின்ன லதுவிளக்கச்**

**சொல்லான் முழுதியலா தென்றாலும் அப்பெருமை**

**சொல்லாமற் காதலைச் சொல்லல் வறிதேஎ.**

**கொலைக்களத் தேதில ரன்னதா மந்திக்**

**கலையெழில் காதலர்க் கென்னும் வரியை**

**சுவைக்காய் எழுதினா ரென்றெண்ணி, இந்நாள்**

**நவையில்லை கூறிய துன்பென் றறிந்தேஎ**

**இத்தலைவன், விண்ணிற் றவழ்ந்திடு வெண்மதி**

**முத்தொன்று வானில் மிதப்பதுபோ லுள்ளதனா**

**“லாழத் திருக்கு மலைகடன் முத்தென்ப**

**ராழமில் வானாழி வெண்பெருமுத் திங்குண்டே”**

**என்றெண்ண லாகித் தனிமையில் நிற்கின்றான்**

**தன்னெஞ் சுடனே புலம்புவன் அக்கவிஞன்.**

**“நெஞ்சே! இரவினிலே இவ்வுலகின் வெண்விளக்காய்**

**விஞ்சும் விரைவில் நிலவெங்கே செல்கிறது?**

**என்றன் மனத்துயரை என்னவற்குச் சாற்றிடவே**

**நன்னிலா அஃதவளில் நோக்கியே செல்கிறதோ?**

**தன்னிலையை என்னவ ளெவ்வா றெனக்குரைப்பாள்?**

**தானுந் தனித்தலை வெண்ணிலவு தூதெமக்கோ?**

**யாதுமவள் சொல்வாளென் றாலதனை யுங்கேட்டே**

**காதறியச் சொல்லாயோ வான்மதியே! மாசில்லாப்**

**பொன்போல் மனங்கொண்ட என்னவ ளிந்நிலவைத்**

**தன்னுடைய தூதா யனுப்பின ளென்றென்னின்**

**தாங்க வியலாப் பெருந்துன் பெனின்மிக்குத்**

**தூங்க வியலாம லுற்றிருப் பாளோ?**

**இறைவ! தலைவியின் துன்பகற் றீநீ**

**நிறையுந் துயர மெனக்களித் தின்புறுவாய்!”**

**என்றுபல எண்ணி யிவனு மிறையொடு**

**துன்பினாற் சொல்லி வருந்தி, விழியி**

**லுறக்கமின்றி நோவா னிவர்கள் விதியு**

**முறக்கஞ் சிறிது மிலாது வருந்திடவே**

**அங்கே யவளு மிவன்நினைவில் நெஞ்சினிலே**

**பொங்கு துயரொடு தோழியரு மின்றி**

**மனத்திற் புலம்பத் தொடங்குவ ளாவாள்**

**வனத்திடைக் கண்கட்டித் தான்விடப் பட்ட**

**தனிமைத் துயரை உணர்குவள் நல்லாள்,**

**இனிமை யிலாஇவ் இரவினை நோக்கி**

**நிலவினை நோக்கி மரங்களை நோக்கிப்**

**புலம்புவள் நெஞ்சில்; அவனொடு தோன்று**

**பெறற்கரிய நேய மிகப்பெற்றாள், தன்னா**

**லுறற்கரிய துன்ப முறப்பெற்றால், நொந்திடு**

**நெஞ்சம் அதுவும் பொறுக்குமா? காலஞ்செய்**

**வஞ்சத் தனலில் விழுந்ததைத் தாங்குமா?**

**தீண்டு முறக்கம் வரவில்லை பேரன்பு**

**பூண்ட தலைவ னினைவாலே, இத்தலைவி**

**தூக்கம் நினைக்க மறந்தனள், நெஞ்சிலெழு**

**ஏக்கம் மிகுந்தே இரவிற் புலம்புவாள்,**

**“தெய்வ!நீ என்றனுக் குற்றதுயர் என்னவனம்**

**மெய்யன்பற் குற்றிடச் செய்திடேல்! மெய்யறி**

**அப்பனே! வேல்கைப் பிடித்தவனே! என்தலைவ**

**னெப்போதும் நெஞ்சில் மகிழ்வுடன் தானிருக்கச்**

**செய்குவைநீ! நீளு நொடிக ளவையெல்லாம்**

**பெய்யு விசும்பினைப்போ னீண்டனவே! என்செய்வேன்?**

**பெய்த பெருமழையிற் செம்மண் கலந்ததை**

**மெய்யா யுறப்பெருங் காதற் குவமைசொன்ம்**

**நற்கவிதை கற்றலைச் செய்பவன் காதலனே!**

**பொற்பமை தீந்தமிழ் கேட்க உயிர்க்குவ**

**னத்தகு வாழ்க்கையன் நன்மனந் துன்புறின்**

**முத்தமிழ் கற்பவன் தாங்கிடு வானோ?”**

**“மரணத்தின் துன்பமுந் தாங்கிடுவள்; நின்றன்**

**பிரிவதனைத் தாங்கிடா மெல்லுளத்தாள்; இவ்விர**

**வொற்றை நொடியாகப் போகாதோ? என்கண்கள்**

**நற்றமிழ் கற்போனைக் காணாதா?” காட்சியின்றிக்**

**கண்துஞ்ச லின்றியிவ ளன்பனை நெஞ்சிலே**

**எண்ணுத லல்லாப் பிறிதெதுவு மெண்ணலின்றிச்**

**சோர்வை யகப்புறத்தில் தான்சுமந்து, மற்றதனை**

**யார்மாட்டுஞ் சொல்ல வழியின்றித் தன்நெஞ்சைத்**

**தேற்றிடவே யொண்ணாமல் வெம்பாலை தன்னிலே**

**தற்றா ளதுபதிய தண்ணீரைத் தேடியோடும்**

**கற்றா வினைப்போல இத்தலைவி இப்பிரிவா**

**லுற்றாள் பெருந்துன்ப மத்துன்ப மெல்லாம்யான்**

**முற்றா யுரைக்க வகையறியே னென்செய்வேன்?**

**பெற்றற் கரிய பெரும்புகழ்கொள் நூல்கற்றும்**

**காதலுற்ற பெண்ணி னகத்துநிக ழாற்றாமை**

**யோத லறிந்திடா வோர்கவிஞ னாகினனே!**

**வெட்க மிகக்கொண்ட மிக்க அறிவுடையாள்**

**மட்குடந் தன்னிலே நீர்முகந்தாள்; காதலர்காண்**

**வேட்கையைத் தீர்க்க விடியல் வருமுன்பு**

**ஈட்டிடக் கூடாத தண்ணீர்ப் பெருவேட்கை**

**கொள்ள வியலாமல் நீரருந்தி நேரஞ்சொல்**

**முள்கண்டாள்; மூன்று மணிகாட்டி முட்களவை**

**நில்லா தசைந்திடக் கண்டா ளதன்பின்னே**

**நல்லா ளவலாழ்ந்த நித்திரை கொண்டயர்ந்தா**

**ளென்று நினைந்தியான் தூங்கிவிட, யானறியா**

**தின்னு முறங்காமற் றன்தலைவ னைநினைப்பாள்.**

## 6.காண்கையில் மகிழ்வுறல்

**நன்றா யுறங்கிய செங்கதிரோன் வானிலெழ**

**இன்று தலைவன் தனைக்காண இத்தலைவி**

**இல்லை யுறக்க மெனமறந்து மின்னலை**

**வில்லா லொருமறவ னெய்ததுபோல் தான்விரைந்து**

**முன்பே யுரைத்ததுபோற் பூச்சூடி மேலோங்கு**

**மன்பா னவன்காண மிக்க விரைவுகொண்டே**

**செல்வாள். அருந்தமிழாந் தொன்மை மிகுந்தநல்**

**வெல்தமிழைக் கற்குமிவ னன்பு கரைகடக்க**

**சாத்தந்தை சொன்னபெரு நற்கிள்ளி போர்கடிதிற்**

**காத்துக் கிடப்பாளைக் காண விரைந்திடுவான்.**

**நேச மிகக்கொண்டா ரோடுநேர் நின்றுநனி**

**பேச விரும்பாதார் யாருளரோ? யானறியேன்.**

**பேசு பொருளேது மில்லாமற் போயிடினும்**

**பேசு மிருவிழிகள் பேச்சை நிறுத்தாதே!**

**நேயப் பெருங்கடலி லோய்தற் சிறிதுமின்றி**

**மாயம் நிகழ்த்திடும் பேரலைகள் தானென்ன**

**செய்தி கரைக்கு நவின்றிடுமோ? அந்நிலை**

**எய்தி விருப்போடு கண்பேசு வார்த்தைகள்**

**பொய்தீர் பெருங்காதல் நல்லிணை தாமறி**

**மெய்சா லுரைகள்; புறத்தேள கேட்க**

**வியலாத வானோர் மொழிகளை நெஞ்சில்**

**மயலின்றிப் பேருயிர் பீடுறப் பேசிட**

**நாவசைய வேண்டாவாம் நாணந் தடுத்திடவே**

**மேவு குளிர்த்தென்ற லஃதிடையே தன்னுடைய**

**நெஞ்சுசொல்லுஞ் செய்தி சுமந்து செலல்வேண்டி**

**கொஞ்சம் சுவாசத்தா லத்தென்றல் முன்தள்ளி**

**சற்றுமுன் னீன்ற சிறுகுழந்தை போலியாய்க்**

**கற்றிருக் காமல் இயல்பாகச் சிந்தும்**

**முறுவலினைப் போலே பிறரறியா வண்ணஞ்**

**சிறுமுறுவல் செய்வர் பலகருதி நெஞ்சில்லே.**

**கண்க ளுரையாடக் கண்டதனால் யான்சொல்ல**

**வேண்டும் பொருண்மறந் தேனே! பொறுத்தருள்க.**

**நற்றுணையைக் காணுகையில் தானுறூஉம் பேருவகை**

**நற்றமிழில் நானுரைப்பன் கற்றிடுவீர் நீஇர்.**

**நெடுந்துயரீஇ அப்பிரிவு இல்லாமற் போனால்**

**இடுக்கணில்லை யாதலா லின்பமில்லை. காத**

**லுடுக்கும் பிரிவினை நன்குணர்ந்தோர் நெஞ்சில்**

**மிடுக்குடனே நன்மகிழ்ச்சி யுண்டாகும், அஃதுரைக்கின்**

**காணலுங் கண்டுரை யாடலும் யாவையும்**

**நாணத் தருநீழல் தன்னினின்று மீறாமல்**

**எண்ணும் பொழுதெல்லாம் நேரா தரிதான**

**உண்மைகொள் காதலரைக் கண்டிடு மத்தகைய**

**கால மணுவள வாகினும் அவ்உவகை**

**நீலக் கடல்கொண்ட பண்டைத் தமிழ்நூல்கள்**

**மீண்டும் பெறக்கண்ட நற்றமிழர் தன்மனதிற்**

**றூண்டப் பெறுகின்ற பேருவகை யொத்திடுமே!**

**வேண்டு வரமே விரைவாகக் கிட்டிடுமோ?**

**நீண்ட நெடுங்காலங் காத்திருந்து தன்னுடைய**

**பேரன்பைக் காணக் கவிஞனவன் இப்பெரிய**

**பேரண்டம் மீச்சிறி தாகத்தன் நற்காதல்**

**மிக்கப் பெரிதாகத் தானெண்ணு மவ்வுளத்தே**

**திக்குத் தெரியாத தீச்சூழுங் காட்டினிலே**

**தன்னந் தனியாகத் தான்தவிக்க அப்பொழுது**

**மின்ன லொளிகொடுக்க மேகங்கள் மோதி**

**இடியிடிக்கப் பெய்த பெருமழைபோ லாகித்**

**துடிதுடித்துத் தேறாத தன்நெஞ்சைத் தன்சொல்லாற்**

**றேற்றிப் புதுவாழ்வைத் தண்பனிபெய் சோலையாய்**

**மாற்றி யமைத்திட்ட அன்புடையோள் நேயத்தை**

**யெண்ணி நனியெண்ணி தன்னைச் சுமந்துள்ள**

**மண்ணுலகு தன்னை மறந்தவனாய் நின்றிருக்க,**

**வண்ண மலர்ச்சோலை தன்னிற் றனித்திருக்கும்**

**எண்ண மலர்நாடி வந்தவளோர் வண்ணத்துப்**

**பூச்சியாய்த் தன்னுடைய காலடியி னோசைகள்,**

**பேச்சற் றிருப்பவனாம்; தன்மேல் நனிகாத**

**லுற்றோன் தன்னின் நினைவைக் கலைக்காது**

**பெற்றற் கரிய பெருவாய்ப்பைப் பெற்றவளாய்க்**

**நற்றவக் காதலன் தன்முன் னவள்நின்றாள்**

**சுற்றியுள் ளோரை இவள்விழி நோக்காம**

**லிந்த உலகத்தே இன்று வழங்குகின்ற**

**எந்த வொருமொழிக்குந் தாய்மொழியாம் நற்றமிழைக்**

**கற்றுக் கவிபுனைவோன் கண்தன்கண் காண்குறூஉம்**

**ஒற்றை நொடிக்காகக் காத்திருந்தா ளத்தலைவி**

**தூய மனந்தனிலே வாய்மை யுடையதொரு**

**நேய மிகவளர்த்தா ளாகி யிவளவனைத்**

## 7.பேசும் பொழுதுகள்

**தன்குரலால் மெள்ள அழைத்திடவே, இத்தலைவன்**

**தன்னுடைய காதலிதான் கண்ணின்முன் நிற்கின்றா**

**ளென்றுணர்ந் தானாகத் தன்நெஞ்சு விண்ணதிலே**

**மின்னு சிறியதொரு மீன்பிடிக்கச் தன்சிறகு**

**தன்னை விரிக்கும் பறவை சிறகோசை**

**தன்னை நிகர்த்ததக் கௌவை யுடையவனாய்**

**(உரையாடல் தொடக்கம்)**

**அவன்:**

**“வந்துநின் றாய்;உன் நினைவி லகத்தினிலே**

**சிந்து படித்திருந்தே னுன்னையான் நோக்கிலனே**

**செய்த பிழைதனுக்கே, கொய்த மலர்புனைந்தோய்!**

**பெய்து பரிவினை என்னைப் பொறுத்தருள்வாய்”**

**அவள்:**

**“என்னை யுரைத்தனைநீ! நின்னொா டுரையாட**

**சொன்ன வுடன்பாடும் நற்கவியி னெண்ணத்துத்**

**தோன்று கவிதைபோல் நான்வந்து நிற்கவே**

**ஆன்ற பெருந்தமிழை ஆழ்ந்து பயிலுநன்நீ**

**என்ற னினைவினிலே நின்றாய் எனக்கேட்கப்**

**பொன்றா வின்பத்தில் மீமகிழ்ந்தேன். துன்பறுப்பாய்"**

**அவன்:**

**நீசூடி வந்தாய் நறுமலரை; இப்பிரிவில்**

**பாசூடு நெஞ்சி னினையே மிகவெண்ணிக்**

**காத்திருந்தேன்; நின்னொடு பேசுமிந்த இன்பொழுதை**

**ஏக்கமொடு யானுமெதிர் நோக்கிநின்றேன். நீநலமா?"**

**அவள்:**

**"நான்நலமா? இல்லையே! நின்னையான் காணாமல்**

**யான்நலமுற் றென்நெஞ்சந் துன்புறாதி யானிருத்த**

**லாகுமோ? நின்நினைவி லென்நெஞ்சம் மீத்துயரில்**

**நோகுமே! அத்துயர்யான் சொல்லிட நீண்ம்மே!"**

**அவன்:**

**"மகன்றிலே யொப்ப மனங்கள் பொருந்தி**

**அகன்றிடா மன்னுநற் காதற்கொண் டார்க்கு**

**நறுந்துய ரீந்த திறையே! இருவரைநேர்**

**நிறுத்தி மகிழ்வ திறையே! அவனைநான்**

**என்றும் வணங்க லொழியேனே, மண்ணுலகைத்**

**தன்பே ரறிவாற் படைத்தளித்தே நாமதிலே**

**காத லுறுவதைக் காண்கின்ற அவ்விறையைச்**

**சாத லுறுவரையில் நான்மிகப் போற்றுவனே!"**

**அவள்:**

**காதலாற் காந்தருவ மன்றலும் நன்றுநவில்**

**வேத முரைக்கும் பெருங்கற்பு மன்றலுஞ்**

**செய்தான்; அகப்பொருளைப் பூதலத்தோர் நன்குணரச்**

**செய்தான்! முருகப் பெருமானைப் போற்றுவனே!**

**வண்ண முடைய மயில்மீ தமர்ந்திந்த**

**மண்ணுலகு சுற்றி வலம்வந்தான்; நம்முடைய**

**அன்பு தனைக்கண்டே ஆழ்ந்து நமைவருத்துந்**

**துன்பு களைந்தான் வலிமையைப் போற்றுவனே!"**

**அவன்:**

**"பெண்ணே! பெரும்பக்தி யோடுரைத்த நின்றன்சொல்**

**எண்ணும் பொழுதென்ற னெஞ்சில் சிறுநெருடல்"**

**அவள்:**

**"என்னை யுரைத்தாய்நீ! ஏன்நீயு மப்படி**

**என்ன நினைத்தாயோ உன்மனத்தில்? சொல்லிடுக!"**

**அவன்:**

**"ஒடுநதி யெல்லாமே ஆழியிலே போய்க்கலக்கும்**

**நீடுநங் காதலது மன்ற லெனும்நிலையை**

**யுற்றாலப் போழ்தென்ன ஆகிடுமோ? நின்னையான்**

**பெற்றற் கரியதுவாம் பேரிறைவ னீந்ததொரு**

**பேறாய் மனத்தே நினைந்துள்ளேன்; நீயொருசொல்**

**கூறாஅது போயிருப்பி னென்வாழ்க்கை எப்பொருளு**

**மில்லாத வாழ்வதுவாய்ப் போயிருக்கும்; நாமிருவர்**

**சொல்லிப் புகழ்ந்திடு பேராற்றல் மிக்கவொரு**

**நல்லிறைவன் யாரென்று நின்மதமு மென்மதமும்**

**பொல்லாத பேரையங் கொண்டு, தமக்குள்ளே**

**நில்லாமல் வாதிட்டுக் கொள்ளும் நிலைதன்னில்**

**நல்லதாம்நங் காதலது நன்னிலையை யெய்திடுமோ?"**

**அவள்:**

**"யாவும் நினைந்துநீ துன்புறேல்! நம்மிடையே**

**மேவு பெருங்காத லுண்டாக்கி நம்மையே**

**நேரவைத்த அக்கடவுள் யாரா யிருப்பினும்**

**சேரவைக்கா மற்போய் விடுவானா? நீவருந்தின்**

**யானும் வருந்திடுவேன் மற்றதனைச் செய்திடவோ?**

**அவன்:**

**வானப் பெருவெளியில் நீந்து மதியத்தை**

**மேகப் பெரும்படைகள் காண விடுத்தில**

**சோகம் அதனைப்போ லுற்றேன்; சரியான**

**போழ்துநீ அக்கவலை நீக்கினை; நீயின்றே**

**லாழ்ந்த நனிதுயர முற்றே அயர்ந்திருப்பேன்.**

**நின்ற னுரைதன்னால் நானுந் தெளிவுற்றேன்.**

**என்றும்நீ கண்ணீ ருகுக்கப் பொறுத்திலனே!"**

**அவள்:**

**ஒடுகின்ற ஆறெல்லாம் ஆழி கலப்பதுபோல்**

**வீடடைவோர்க் கெல்லாம் அருள்புரியு மோரிறைவன்**

**உள்ளா னவனே பிரபஞ்சம் நிற்குங்கூ**

**உள்ள அனைவர்க்கும் நற்கடவுள்; நன்று**

**கருதுமின்! எல்லா மதத்தவரும், அன்றிப்**

**பொருவது நம்முள்ளே புத்தியில் செய்கை.**

**அவன்:**

**தெளிந்த நெறியுரைத்தாய்; புண்ணிய நாட்டி**

**லொளிபாய்ச்சச் செய்திடுமோ ருண்மை யுரைத்தாயே!**

**அவள்:**

**"நீண்ட நெடுங்காலந் தாம்கடந்து நாமிருவர்**

**மீண்டுங் கதைத்திட நல்வாய்ப்புக் கிட்டியது**

**பாடாயோ பாடல்கள் பாங்கான பைந்தமிழால்**

**கூடற் கரியநல் வெண்பா விலேஎ!”**

**அவன்:**

**“கவிஞனுக் கிப்படியோர் நல்வாய்ப்பைத் தந்தாய்!**

**செவியுறு வாயெனில்நீ நாள்முழுது மெப்பாவும்**

**பாடிடுவே னென்மீது நேயமுற்ற நின்றனுக்கே**

**சூட்டிடு வேனின் னிசைவெண்பாப் பத்து.**

**முதலி லிறைவாழ்த் திரண்டு தமிழ்வாழ்த்து**

**பின்மூன்று நான்கு நறுங்காதல்; ஐந்துமாறுஞ்**

**சொல்லிடும் நல்லறம்; ஏழுமெட்டும் நண்புரைக்கும்;**

**மெல்லிசை பாடி மயக்கிடு மீற்றிரண்டு**

## 8.இன்னிசை வெண்பாப் பத்து

**(இன்னிசை வெண்பாக்கள் பத்தும் தனித்தனியே எண்ணிடப்பட்டுள்ளன.)**

**1.நீதமுள்ளோன்; நல்லுலகில் வாழ்வோர்க்கு வான்மறையாம்**

**வேதமீந்தோன்; தீதிலா மிக்க புகழுடையோன்;**

**ஒதுவனே நல்லிறைஈ நேய முயிர்புகவே**

**காதலிக்குச் சூட்டவெண் பா.**

**2.காத லருகிருக்க நானறத் தோடுநின்று**

**காதற் றமிழுன்மே லுற்ற துரைத்திடுவேன்**

**ஒத மிகஇனிதாய் நீயு மிருப்பதனால்**

**காதல் நனியுண்டுன் மேல்.**

**3.ஆழிசூழ் மண்ணகத்தே வாழுமிம் மாந்தரெல்லாம்**

**ஊழியெலா முற்ற பெருங்காத லைப்பாட**

**ஆழிநிறை மைகூடப் போதாவாம்; ஆங்கவற்றை**

**ஊழியெழு தேட்டி னிறை.**

**4.கால முழுதும் மனனிறைக்கும் மெய்க்காதல்**

**சால உறுவ ரவரிணை சொல்லிடவே**

**சாவா மருந்துண்ட தேவ ரெனப்படூஉம்**

**மூவா தவருள ரே.**

**5.விலங்கு குணமுடைய மாந்தரினம் சீர்பெற்**

**றிலங்கி புவிதன்னில் வாழப் புகழுடை**

**நன்னெறிக லெல்லாமுந் தன்வாழ்வில் கொண்டேநல்**

**லின்புற்று வாழ்வ தறம்.**

**6.வாழும் பொழுதினிலே யாருக்குந் துன்பமின்றி**

**வாழு வதுமோ றறமே; அதனோடு**

**கண்ணின்றிப் பாழ்ங்குழியில் வீழ்வானைக் காப்பாற்றும்**

**கண்ணோட்டங் கொண்ட தறம்.**

**7.துன்பொன் றுறினே யதனை யகற்றவும்**

**இன்பொன் றுறினதைப் பன்மடங் காக்கவும்**

**நண்பதைத் தேடிப் பெறுக; அவனின்றேல்**

**மண்ணாகி மாயும் மனம்.**

**8.தன்மன னன்கறிந்து தானடப் பானையே**

**மின்னற் பொழுதும் பிரியேல்; அதுவே**

**பெறற்கரி நன்மருந்தைச் சாவருங் காலை**

**மறுத்த லனையது வாம்.**

**9.உயிருறை யாக்கை மயிர்கூச் செறிய**

**உயிர்தாங்கு நெஞ்சத்தைத் தாக்கியே மெய்ம்மறக்கச்**

**செய்து நரம்புகளைத் தூண்டி யறிவினா**

**லெய்த வியலாத தாம்.**

**10.அதிர்வாகிக் கேட்போ ரதிரவும் தன்மெய்**

**விதிர்ப்புற்றுக் கண்ணீர் வடித்திடவும் ஏதுவாய்த்**

**தன்னருமை உற்றுணர்ந்தே நன்கறியும் பெற்றியுடன்**

**மின்னல்போல் தாக்கு மிசை.**

**கேட்டனையோ? நீமகிழ வெண்பாக்கள் நான்பாடிக்**

**காட்டினனே காதலீ! யுன்றன் மனந்தன்னில்**

**வேறேது மாசை யுள்ளதுவோ? என்னிடத்தே**

**கூறாஅய்! நின்னாசை நானிறை வேற்றிடுவேன்”**

**அவள்:**

**“பாவியற்றுங் காதலரே நாமிருவர் காலாறப்**

**போவோமா மெள்ள நடைபயின்றே?”**

**அவன்:**

**“காலங்**

**கடத்துவது மேன்?விரைந்து செல்வோம்!”**

**(உரையாடல்முற்றும்)**

**இணைந்தே**

**நடக்கத் தொடங்கினர் கைவிரலும் மெய்தீண்டா**

**துள்ளத்தே நேயமிகக் கொண்டோராய்த் தாம்விளங்கி**

**கள்ளமிலாக் காதல ருள்ளம் நிறைந்தே**

**நதிமேல் மிதக்கு மிலைபோ லெதுவு**

**மதிர்வுறச் செய்யா மனத்தொடு செல்ல**

**மெதுவாகும் வேகம் நடைதனிலே; “என்று**

**மிதுபோன்றே எல்லையிலா இன்பம் நிலைத்திடுமா?”**

**என்றெண்ண; ஒடுங் குருதியின் வேகங்க**

**ளின்னுங் கழிபெருகும்; நெஞ்சத் துடிப்பு**

**மிகுந்து மிகுந்து தவப்பெருகு மின்னு**

**மகத்துநிகழ் எண்ணமெலாஞ் சொல்லிடினே மிக்குப்**

**பெருகும் பெருகும் பெருகிடுமே! ஓ!என்**

**உருகுமனம் மீக்குளிராற் கட்டியான தண்பனி**

**சுத்தியாற் றாக்குத லுற்றதுபோ லாகிடுமே!**

**புத்தியான் மட்டு மறிந்திடக் கூடிடுமோ!**

**9.ஊழிமாறு நிலை**

**ஈத லறம்போ லுளமலி உண்மைகொள்**

**காத லறமேஎ! இவ்விரண்டி னின்பத்தை**

**நேரே நிறுப்பி னணுவளவுந் தப்பாது**

**நீரொடு நீர்சேர்ந்த தாகிடு மேஎ.**

**இயற்கை மிகவு மழகா மிதையே**

**வியந்து பலவாய்க் களிப்படையும் மாந்தரினம்.**

**இன்புடைத் திவ்வியற்கை தன்னோடு வாழாமல்**

**துன்புடைத் திவ்வாழ்வென் றே!குழி வீழ்வான்!**

**அருந்தமிழை ஆராய்ந்து கற்காமல்; நில்லாப்**

**பொருள்தேடப் போர்க்கள மாக்கி யலைந்தே**

**இருளோடு வாழ்கின்ற மேதைக ளெண்ணி,**

**அருளீயு மக்கடவு ளைநானும் வேட்பேன்**

**“மருணீக் கிறைவ!இம் மானுடர்க் கெல்லாம்**

**தெருளீந் திழிநிலை மாற்றுவை! கையிற்**

**பொருளில்லா வாழ்வி லழியாமற் காத்துத்**

**திருவு மறிவுமீவாய் நல்லிறைவ!" என்றே.**

**கிளையமர் புள்ளினம் பாடிக் களித்திருக்க**

**தளையிலாப் புள்ளாய் மனது பறக்க**

**குடைபோலவ் வானம் பரந்து கிடக்க**

**தடையே திவர்களின் காதற் சிறக்க?**

**இருவர் நடக்குமப் பாதை தனிலே**

**தருவொன் றுயர்ந்து பரந்த ததிலே**

**இலைக லசைத லிளையோர் முதியோர்**

**இணைந்து நடமிடற் போல்தோன் றிடுமே!**

**சரசரக்கத் தண்தென்றல் வீச அதிலே**

**பரபரக்கும் நெஞ்ச மமைதி யுறவே,**

**துறக்கத் திருக்குநற் றூமா ளிகையை**

**இறப்பு நிகழுமுன் நண்ணிய தாகியதே!**

**நீழற்கண் தாழ உயிர்மீ மகிழ்வுறத்**

**தோழமை கொண்டுநெஞ் சொன்றாய்க் கலந்தோர்**

**கடக்குநற் கால மறந்து; மிதக்குங்**

**கடன்மீன் கடுப்பப் பலநினை வோடே**

**யமர்ந்து கதைக்கத் தொடங்கிடுங் காலை**

**இமைக்கு நொடியிற் கணிக்க வியலாத**

**பேரொளி யொன்று மரப்பொந்திற் றோன்றிட**

**ஆருயி ரன்ப ரதிர்ச்சி யடைந்தனரே!**

**கண்டறி வெள்ளொளிக்கண் மாயக் குரலொன்று**

**“பண்ணினை யொத்த உளத்தோரே நும்மை**

**விதியாம் பதிநா னழைக்கிறேன் வாரீர்!**

**நதிவாழ் வதின்திசை காலத்தோ டொப்பந்த**

**மிட்டியான் மாற்றுவன்; நுங்காத லன்பைநான்**

**காட்டவே இவ்வுல கெல்லாம்” எனச்சொல்லக்**

## 10.சின்னக் குழந்தையின் சிரிப்பொலி

**காலங் கடந்தே ஒளியினனி வேகத்தில்**

**கோலங்கள் மாற;பரி மாணம்வே றொன்றிலே**

**சின்னக் குழந்தைக ளாகினர் காதலர்**

**தன்னுடைய முன்நிலை தன்னை மறந்தேஎ.**

**வேறுவே றூர்களிலே தன்காத லைக்காண**

**ஆறுதலில் நெஞ்சத்தோ டவ்விதியின் செய்கையால்**

**யாவை மறப்பினும் காதலின் ஏக்குசில**

**சாவை நிகர்த்த நிகழ்வின்பின் னெஞ்சினவே.**

**நானிங் கினியுரைப்பே னிச்சிறாஅர் தந்நிலை**

**ஆன முடிவென்ன என்றீற்றிற் சொல்வேனே!**

**ஆறகவை கொண்டவரா யாக்கிய தாலேஎ**

**கூற மகிழ்வுமிகும்; மீளவாழப் பேருவகை**

**மிக்கு மனம்விரும்பும்; தீதறியாப் பால்மனத்தைப்**

**புக்குடுத்த மெய்யிலுறை நெஞ்சம் மிகவிழையும்.**

**இச்சிறப்புக் கொண்ட சிறுவப் பருவத்தை**

**இச்சிறந்த நேய மிகப்பெற்றா ருற்றனரே!**

**முன்பியாம் சுட்டிய வொண்மை நிறைமரம்**

**அன்புளோ ருள்ளஇரு ஊர்களி னெல்லையாம்**

**அங்கேஒர் பூங்காவும் உள்ளதுவாம்; அம்மரத்தில்**

**தொங்கிடு நீண்டநாப் பேய்க ளிருக்குமென்று**

**அன்னைதஞ் செல்லக் குழந்தைக்குச் சொல்லுவதால்**

**தன்னை மறந்துஞ் சிறுவராங்குச் செல்வதில்லை**

**இங்கு நிலையிவ்வா றாகிடப்; பேரரவம்**

**பொங்கப் பலசிறுவர் ஊரெல்லாஞ் சுற்றுவரே!**

**பொன்விளை மண்வயல்கள்; வேம்பு தருங்காற்று;**

**தொன்மை யுடைகதைசொல் பாட்டிகள்; ஆங்காங்கே**

**நெல்வயலி னீந்துமீன்கள்; பச்சை நிறத்தினிலே**

**ஆடை யுடுத்த புவியன்னை; நீள்வரப்பில்**

**கஞ்சிக் கலயஞ் சுமந்து சிலர்நடக்க**

**கொஞ்சலி லின்புற்ற புள்ளினங்கள்; ஏர்பிடித்து**

**பிள்ளை தலைசீவுந் தாயைப்போல் தானேஒர்**

**தள்ளை நிலைபெற்று மண்மகளின் கூந்த**

**லழகுறத் தானுழூஉம் நல்லே ருழவர்;**

**பழகிடப் பண்புடை வஞ்சமில் மெய்யன்பர்.**

**தாலாட்டைத் தான்பாடத் தூங்காத தன்பிள்ளை**

**தாலேலோ பாடுமந் நீரோசை யால்தூங்கத்**

**தன்நாவில் மாயமொன் றுண்டென்றே அவ்வன்னை**

**என்றென்றும் ஏமாற லாகுமச் சிற்றூரில்**

**விண்ணடக்குங் கண்களொடு பண்ணிசைத்துப் பாடியலை**

**மண்ணுடுத்த மேனியினர் துள்ளித் திரிந்தனரே!**

**நெஞ்சம் வருத்துந் துயரினை யாதென்று**

**கொஞ்சி விளையா டிவளு மறிந்திலள்.**

**ஏதோஒ ரேக்கத்தோ டேஎன்று மம்மரத்தைத்**

**தீதிலாப் பால்மனத்தாள் தான்நெருங்கப் பார்த்திருப்பாள்**

**இந்த நிலையில் சிறுவனாம் நந்தலைவன்**

**நொந்துதான் போதற்கே ஏதேதுங் கிட்டாது**

**எல்லை மரத்தை இவனடையப் பார்த்திருப்பான்**

**இல்லை பயமென்றே இத்தலைவன் தாய்சொல்வாள்**

**நற்றூக்கத் தில்பிரியா நெஞ்சமொன்றி மீத்துயரால்**

**உற்ற பெருநேயங் காணா தலறி**

**எழுவர் திடுக்கிட்டந் நீளிரவு மற்றோர்க்**

**கழுமிவ் விருவர் குரலா னிறைந்திடுமே.**

### 11.சிற்றூர்ச் சிறுவர் விளையாட்டுகள்

**நீள்வன் மரக்கிளையில் பூமென் கயிறுகட்டி**

**நீளப் பலகையின் மூலைத் துளைநான்கிற்**

**கட்டுவர்; பேருருவு முட்கார்ந் துடையாத**

**தொட்டில்போ லூஞ்ச லதிலாடிப் பின்னர்**

**களைப்படையா ரெல்லாம் கபடிபாட; அந்தக்**

**களத்தினிலே நந்தமிழர் வீரஞ் சிறந்திருக்கும்**

**மூச்சுப் பயிற்சியுட னொற்றுமை வெற்றியென்று**

**நீச்சலொ டிவ்விளையாட் டெல்லார்க்குஞ் சொல்லிடுமே.**

**கட்டமிட்டு மண்ணெடுத்த லென்னும் விளையாட்டு**

**திட்டமிட்டுத் தன்னெதிராள் இட்டபல வல்லரணாம்**

**புள்ளினத்தை வென்றடுத்த கட்டம் நகர்வதுவாய்த்**

**தள்ள மிகக்கடிதாம் வல்லரசிப் புள்வென்று**

காவற்குப் பின்நிற்கும் மூன்றுபுள் ளும்வென்று
தேவையாம் மண்ணெடுத்துத் தான்கடந்த அத்தடைகள்
மீண்டுங் கடந்து வெளிவர லாவதே.
வேண்டும் பொருளடைய வேண்டு மெனில்தாஅுன்

தாண்டிச் செலவேண்டும் பல்தடைகள்; போராடி
மூண்ட நெருப்பவியா நன்னெஞ்சம் பெற்றினிதாய்க்
கொண்ட குறிக்கோளைக் கைக்கொண்ம் வரையிலே
மண்டுந் துயரெண்ணி யஞ்சா நெறியுரைக்கும்.

வட்டத்துள் நிற்ற லெனும்விளை யாட்டில்லே
சில்வட்டம் மண்வரைவர்; அவ்வட்டத் துள்ளிருப்பின்
யாவருந் தீண்டார்; வெளிச்சென்றால் ஏமமில்லை.
நன்னெறியைக் கைக்கொள்ளல் பாதுகாப் பென்றுரைக்கும்.

நீளு மலைபோற் குவித்த மணலதி
னீளத்தி லாழத்திற் கல்மறைக்க; கல்லெங்கு
உள்ளதென் றுள்ளத்தில் மற்றவ னோர்ந்து
கிளறாமல் மண்ணை இருகையால் மூடப்

பிறவிடத்தே வெண்மணலைக் கல்மறைத்தோன் நீக்க
பிறவிடத்திற் கல்லிருந்தால் கல்மறைத்தோன்
வென்றிடுவான்

கையகத்துக் கல்கிடைத்தாற் கைவைத்தான் வென்றிடுவான்
உய்த்துணர்வைக் கற்பிக்கு மிவ்விளை யாட்டேஎ.

தென்னையின் கீற்றினின்று நீக்கிய குச்சியினைச்
சின்னப் பலதுண்டாய் நீண்ட தொருதுண்டாய்ச்
சீரா யொடித்தே சிறுதுண்டுக் குச்சிகளைக்
காரிகை மண்ணிற் குவிக்க; பெருங்குச்சி

கொண்டு குவிந்து கிடக்குங் குச்சிகளில்
தீண்டி யொருகுச்சி தேர்ந்தது மட்டும்
அசையப் பிறிதெதுவும் சிஞ்சித்துங் கூடா
அசைய; தவறி யசையி னடையார்

களிப்பு தருவெற்றி; இவ்விளை யாட்டை
உளத்தொ டுடலு மொருங்கிட, எண்ணம்
அலையாம லோரிடத்து நின்றிருக்கக் கண்கள்
நிலையாக நேர்வது நோக்கிடக், கைகள்

நடுங்கா திருப்பினே வென்றி யடைவர்.
தொடுத்தவை இன்றிமிக் கின்னும் பலஉள.
பல்லாங் குழி,நொண்டி, தாயம், பரமபதம்,
உப்புமூட்டை, அச்சாங்கல், கோலி விளையாட்டு,

**பச்சைக் குதிரை, வளைந்தோடல், நற்கண்ணா**

**மூச்சி, கிணற்றிலே மூழ்கியடி மண்ணெடுத்தல்,**

**ஆடுபுலி யாட்டம், கவணெறிதல், பாண்டியொடு**

**கில்லி. எழுத்தடங்கா இன்னும் பலஉண்டே.**

## 12.தங்காதல் நோக்கிய கண்கள்

**தொல்காப் பியமுறை நற்றமிழ் போலவே**

**சொல்ல இனிமையாம் நல்லோரின் காதலே!**

**வெல்ல வியலா விதியது தந்ததொரு**

**அல்லனிறை வாழ்வி லிருவரு மீங்கேள**

**முன்புரைத்த தைப்போல் விழிநீ ரொடுதவிக்க**

**இன்னுமவ் வல்விதி கல்போ லிருந்திடுமோ?**

**தன்முடிபு தன்னினின்று கொஞ்சம் விலகியே**

**இன்னலைப் போக்க இடந்தந் ததுவே**

**இடிவிழு கூவற் சுரந்திடு நீர்கொள்**

**துடித்திடுங் கண்நற் குறிகாட் டிடவே**

**குடும்பத் தவர்க்கு நலமுடைத் தென்றே**

**இடும்பை களைந்திடு பெற்றோர் நினைத்தனர்.**

**எல்லை யருகினிலே தன்பிள்ளை தோளேற்றி**

**எல்லாப் புறத்திலும் பார்க்க வசதியாய்த்**

**தந்தை அயர்வின்றித் தூக்கித் திரிந்தாரே**

**எந்தை இவனென்று தன்மகனைச் சொல்லியே.**

**எல்லை யருகினிலே தன்பிள்ளை பேச்சினிலே**

**எல்லாம் மறந்தவளாய் அன்னை, கிளிமொழியில்**

**சொக்கி யிருந்தாள்; வெயிலின் கொடும்வெப்பம்**

**மிக்குச் சுடுவதுவும் தானுணரா ளாகியே.**

**அந்த இடந்தனிலே மாமரத் துச்சியிலே**

**சொந்த முடையதாம்; கூக்கூ வெனக்கூவுந்**

**தன்னிணை காணக் குயிலெனும் புள்ளொன்று**

**இன்பமுந் துன்பமும் நெஞ்சுருக்கக் காத்திருக்கும்.**

**மண்ணும் மழைகாண வானலை மேகம்பார்த்**

**“தெண்ணம்போ லெங்கு மலைகிற கொண்மூவே!**

**வெண்ணரை கொஞ்சங் கருத்திவ் வுயிர்கட்கு**

**விண்ணமு தானஉன் நீர்தாரா” யென்றிரக்கும்**

**கண்ணின் கருவிழிகள் மின்ன இருவருமே**

**கண்ணொடு கண்நோக்கத் தன்னுளம் முன்பு**

**தொலைத்த மகிழ்வெல்லாம் மீளக் கிடைக்க,**

**மலைத்து; விலக்கலின்றி நீங்காது பார்த்திருப்பர்.**

**ஏதேது மில்லாமல் தான்மகிழ்ந் திவ்விருவர்**

**பேதங்க ணெஞ்சிற் புகட்டப் படாமையான்**

**புன்னகை செய்திடுவர் தன்மனத் துள்ளிருந்து**

**இன்ப மினிப்பெருகு மென்றுணர்ந் தோராய்.**

**மெய்கள் பிரிந்திடினு மாவி பிரியவில்லை**

**கொய்த நறுமலரின் வாசம் மறையவில்லை**

**பெய்த பெருமழையின் ஈரம் வறளவில்லை**

**செய்யுந் தவமெதுவும் வீணாகப் போய்விடாதே!**

**தேர்ந்த தமிழ்ப்படிப்பால் இன்பம் மலிந்திடுதே**

**பார்த்த பொழுதுகளை நெஞ்ச மறக்கவில்லை**

**சேர்ந்த இருமனங்கள் கண்நேர்ந்து சொல்லாடச்**

**சோர்ந்திடா உள்ளம் உயிர்போம் வரைகாக்கும்.**

## 13.'நல்'விழா

**ஈரூரா ரொன்றிணைய; மாரி பெய்தற்காய்த்**

**தேரூர; நெஞ்சத்தே தெய்வத்தை வேண்டிக்**

**களிப்புற்று கண்ணய ராமல்; உயர்ந்த,**

**ஒளிவந்த ஓர்மரப் பூங்காமுன் கூடினரே.**

**அந்தமைக் காரிருளில் வண்ண உடுப்பணிந்தோர்**

**குந்தி யிருந்தனரே கூத்தினைப் பார்த்திடவே;**

**வேடமிட் டாடுவோர்கள் வேகவேக மாகநீண்ட**

**மேடைமே லேரும்போ தாரவார மிக்கதுவே!**

**நல்லதங்காள் நாடகம்*அங் காரம்ப மாகியதே!**

**(கூத்து தொடக்கம்)**

**செல்வச் செழிப்புடனே சீர்பெற்று வாழ்ந்திருந்த**

**காசிராச னின்மனைவி கற்பெனும் பொற்பமை**

**நல்லதங்காள். இவ்விருவர் இன்புற்று வாழ்ந்திருக்க,**

**பெண்பிள்ளை நால்வரொாடு ஆண்பிள்ளை மூவரென்று**

**மாண்புற்றா ளின்வயிற்றில் வந்து பிறந்தனரே!**

**பன்னிரண் டாண்டுகளாய்ப் பஞ்சம் மலிந்திடவே**

**தன்னோடுந் தன்னேழு பிள்ளைக ளோடும்**

**நனியன்பு கொண்டாள்தன் ணண்ணன்வீ டேக**

**கனிவோடு வரவேற்கத் தன்னண்ணன் வீட்டிலில்லை,**

**காட்டுக்குச் சென்றிருந்தான் நல்லதம்பி என்னுமவன்.**

**வீட்டி லிருந்தவள்பேர் மூளியலங் காரியாம்.**

* இந் நல்லதங்காள் கூத்தின் கதை சேலம்-சங்ககிரி வட்டாரத்தில் வடுகப்பட்டி என்னும் ஊரில் நடைபெறுவதாக் கூறப்படக்கேட்டு எழுதப்பட்டது. பிற வட்டாரங்களில் சிறிது மாறுபடக்கூடும்.

**தங்கணவன் தங்கைஇங் கேவந்தால் தம்செல்வம்**

**மங்கி யழியுமென்று பொங்கி வருஞ்சினத்தால்**

**தங்கவந்த நல்லதங்காள் தன்னை வருத்திடவே**

**வெங்கொடுமை செய்திடுவாள்; நெஞ்சிலே ஈரமிலாள்.**

**உண்ணுதற்குச் சோறாக்க ஒட்டை யுடைசட்டி**

**தண்ணீ ரொழுகும் வாழைமட் டைதந்தே**

**“கற்புடையாள் நீயென்றால் இவ்விரண்டுங் கொண்டேஎ**

**புற்கை சமைத்துப்பிள் ளைகட்குத் தா”என்பாள்.**

**நல்லதங்கா ளித்துயரை எண்ணி வருந்திடினும்**

**வெல்லற் கியலாப் பெருங்கற்பின் வன்மையால்**

**பிள்ளைக லெல்லார்க்கும் உண்ண உணவுசமைத்**

**துள்ளத்தே கொஞ்சம் மகிழ்வோடு சோறுண்ணச்**

**செல்லுங்கால் மூளியவள் தன்காலா லெட்டியுதைத்**

**தெல்லாச் சமையலையும் மண்ணுண்ணச் செய்துவிட்டாள்**

**இந்நிலை கண்டதும் மூளிவீட்டு வேலையாள்**

**வெந்துள்ளம் தான்பதைத்து; அன்போடு நல்லோனாய்த்**

**தன்வீட்டி லெல்லார்க்குஞ் சோறிட்டான். தன்நெஞ்சில்**

**தின்மை மிகக்கொண்ட மூளி இதுகண்டு**

**எந்நெஞ்சு மேற்காத வன்மொழியால் வைதிட்டாள்.**

**வெந்த மனத்தாளாய் நொந்திட்டாள் நல்லதங்காள்.**

**உண்டிகேள் பிள்ளைக ளெல்லா ரிடத்திலும்**

**உண்டி கிணற்றினிலே உள்ளதெனச் சொல்லியே**

**நெஞ்சு வெடித்திடும் மீத்துயர் கொண்டேள**

**வஞ்சமில் பிஞ்சுகளை அக்கிணற்றில் தள்ளிவிட்டுத்**

**தானுமக் கூவல் விழுந்திறந்தாள். இச்செய்தி**

**வேடனா மண்ணனவன் காதுகளுக் கெட்டிடவே**

**ஒடோடி வந்தான்; உயிரனைய தன்தங்கை**

**நீடுழி வாழ நினைந்தானே! அக்கனவு**

**பொய்யாகப் போனதால் நெஞ்சுடைந்தான். கூவல்முன்**

**மெய்ந்நோக மெய்த்தவம் செய்தான்; பிரம்மனே**

**தன்னெதிர்த் தோன்றிட, "என்னுடைய தங்கை**

**விதியை இதுபோல் படைத்தாயே! தங்கைக்கு**

**மீண்டு முயிர்தருவாய்!" என்றே இறைஞ்சிடவே**

**"உண்டு புலியாற் கொலைப்படு மானினம்**

**பண்டே எழுதிய வல்விதி மாற்றவே**

**கொண்டிலேன் யாதும் வழியினை ஆதலால்**

**மாண்டவரை மீட்டெழுப்ப என்னா லியலாது**

**வேண்டுமென்றால் பேசிடவோர் வாய்ப்புத் தருகின்றேன்"**

**என்று வரமளிக்க, நல்லதங்காள் அண்ணனிடம்**

**துன்பெல்லாஞ் சொல்லி யழுதிடவே; கோபத்தில்**

**நெஞ்சம் கனன்றவ னாகினான்; மூளியவள்**

**கெஞ்சியும் கேட்காமல் வெஞ்சினத் தோடவளின்**

**மூக்கறுத்தான்; சுண்ணாம்புச் சூளையி லிட்டெரித்தான்.**

**ஏக்கத்தில் தன்னுயிரும் விட்டா னவனேஎ.**

**(கூத்துமுடிவு)**

**ஊர்ப்பெண்க ளெல்லாருங் கண்ணீரோ டிக்கூத்து**

**பார்த்துப் புலம்புவர் தாங்காத் துயரொடு.**

**இன்பத்தில் வாழ்வதும் துன்பத்தைக் காண்பதும்**

**மன்பதை மேலேஇம் மானுடர்க் குண்டேஎ.**

**யாமத்தி லக்கூத் ததுமுடிய எல்லாரும்**

**பூமெத்தை யாய்நினை மண்புரண்டு நன்றாகத்**

**தூக்கத்தி லாழ்ந்தன ரப்பொழு தில்லேஎ**

**ஏக்கத்திற் றூக்கம் வராதவக் காதலர்**

**பேய்மரப் பூங்காவி னுள்ளேஎ அச்சமிகத்**

**தேய்ந்து மறைந்தவராய்த் தான்நுழைய லுற்றனரே**

**அம்மரத்து முன்னே இருவரும் நின்றிருக்க**

**விம்மும் விதியின் குரல்காதில் கேட்கவே**

**அவ்வொலி வந்ததிசை கண்நான்கும் நோக்கினவே**

**“இவ்வுலகி லெவ்வளவோ காதலர் கண்டுள்ளேன்**

**சாதலுந் துச்சமென எண்ணிடுவர், அக்கதைக**

**ளோதஅவை மிக்குப் பெருகிடுமே பற்பலவாய்**

**ஆயினு மிப்படியோர் காதல்நான் கண்டிலனே!**

**நேய முயிர்தன்னில் தங்கு மியல்புடைத்தோ?**

**நும்மைச் சிறுவப் பருவம் நுழைத்திட்டேன்**

**வெம்மை மனதில் மிகவே வதைத்திட்டேன்**

**என்றன் கொடுஞ்செய லெண்ணி மனம்நொந்தேன்**

**இன்று சுடுங்கண்ணீர் வடிக்கின்றேன் நானே!”**

**விதியிஃ துரைத்து விழிநீர் வடிக்கும்**

**சதியை நினைத்து மிகுதி வருந்தும்**

**“இனியும் நுமரை வதைத்தே னெனினே**

**குனிவேனென் நெஞ்சின்முன் கள்வனாய் நானே”**

**எனஅது சொல்லி மரப்பெரு பொந்தில்**

**மனதுள காத லொளிபோ லொளியில்**

**புகுகெனச் செப்பும் பெருநகை தோன்ற**

**மிகுகென வாழ்த்தும் நனிபெருங் காதல்.**

## 14.சேர்ந்த காதலும் சொல்லிலடங்கா மகிழ்ச்சியும்

**ஒளிபுகுந் தோர்கள் வெளிவருங் காலை**

**களித்தனர் தந்நிலை கண்டே இருவரும்**

**முன்போல் மகிழ்வொ டிருவர்க்கும் நேர்ந்ததே**

**இன்போ டிருவிழி நோக்கு**

## உயிர் மறவா நொடிகள்

அந்தப் பிரிவுக்கு

அவன் நன்றிசொல்ல வேண்டும்

ஆனால் அப்பிரிவு

எதையும் எதிர்பார்க்கவில்லை

அவனுடைய பிறந்தநாளை ஏந்தியிருந்த

தேதித்தாள்களுக்குப் பிறகு

சில தேதித்தாள்கள் கிழிக்கப்பட்டிருந்தன

வேற்றுமையணியைப்போல்

மற்றவையெல்லாம் ஒத்திருந்தன

அந்தப் பேருந்துப் பயணத்தில்

ஒரு நிகழ்வு மட்டும்

மற்றவற்றைவிட மேலோங்கிநின்றது

தன் பன்னிரண்டாம் வகுப்புத் தோழன்

பக்கத்திலமர்ந்திருந்தான்

கோபுரங்களைத் தொட்டு வந்துகொண்டிருந்தன

மறுமுனையில் அத்தோழனுடன் பேசிய

மற்றொரு வகுப்புத்தோழனின்

தொலைபேசிக்குரற்சொற்கள்

**”என்னிடம் அந்த**

**கைப்பேசியைக் கொடு...**

**நாவாற அவனிடம் பேசி**

**நாள் பல ஆயின”**

**என்ற கவிஞன்**

**கை வாங்கினான் கைப்பேசியை**

**மறுமுனைக் குரல்தரு மகிழ்வுடை யவனுடன்**

**தண்டமிழ்க் கவிஞனும் தன்நாவாடினன்**

**நேசித்தவளைக் கண்ணில்**

**நீள் நாள் காணா நெஞ்சன்**

**பேசிக் களிக்கும் பொழுதில்**

**நேசித்தவளைப்பற்றி**

**உள்ளந் தோன்றிய பேரன்பில்**

**உயிரும் கலந்து கேட்டிடவே**

**கள்ளம் குரலில் மறைத்தவனாய்**

**கவிஞக் காதலன் வினவினனே!**

**எதிர்முனை இருந்தவன்**

**மருத்துவன் அல்லன்**

**ஆயினும்**

**இவனது காதல் நோய்க்கான**

**ஒரே மருந்தைக்**

**குரலெழுத்தின் வழிக்**

**காற்றுச் சீட்டில்**

**அலைவரிசை மையால்**

**எழுதிச்**

**செவிவழி**

**நெஞ்ச அஞ்சல் பெட்டியில்**

**நேரே சேர்த்தான்**

**"நீ செல்லும் பேருந்தின்**

**சக்கரக் கால்கள் நிற்கும்**

**அவளூரின் பேருந்து நிறுத்தத்தில்**

**அவள் செல்லும் பேருந்தின்**

**சக்கரக்கால்களும்**

**காலைப் பொழுதில்**

**நின்று செல்வதால்**

**அவள்**

**தான் செல்லும் பேருந்தின் வருகைக்காய்க்**

**காத்திருப்பாள் அங்கே!"**

**அவனுக்கு**

**மூட்டைச் சருக்கரையை**

**ஊட்டிவிட வேண்டும் போலிருந்தது**

**உள்ளம் அடைந்த**

**ஒருயர் மகிழ்ச்சியில்**

**”அத்தனை நாட்களாய்**

**அவ்வழிச் செல்லும் நான்**

**எப்படித்தவறினேன்**

**என்னவளைக் காண?”**

**எண்ணிலா முறைகள்**

**தன்னையே வைதான்**

**காப்பியத் தெழுதியது**

**கடிது நிகழுமெனக்**

**கனவிலும் நினைத்திலன்**

**என்மொழிவேன் இவன்மகிழ்வை**

**அவனுடைய பிறந்தநாளுக்குக் கிடைத்த**

**அரும்பெரும் பரிசது**

**ஆனால்**

**அவளைக் காண்பதில்**

**மறைந்திருந்ததொரு சிக்கல்**

**அவள் செலும் பேரூர்தியும்**

**இவன் செலும் பேரூர்தியும்**

**எதிரெதிர்ச் செல்வன**

**ஒரே நேரத்தில்**

**இதற்கிடையில்**

**சில மணித்துளிகளே கிட்டும்**

**நேரம் தவறினால்**

**நேர்வும் அரிது**

**நேர்படப் பேசலும் மிக அரிது**

*******

**முதல் முயற்சி:**

**குளிரால் எரிந்துகொண்டிருந்தது யாக்கை**

**தவிப்பாய் நகர்ந்துகொண்டிருந்தது காலம்**

**பெட்ரோலியத்தால் துடித்துக்கொண்டிருந்தது**

**பேருந்தின் உந்துபொறி (Engine)**

**பேரன்பில் துடித்துக்கொண்டிருந்தது**

**இவனுடைய நெஞ்சப்பொறி**

**வந்தது நிறுத்தம்**

**நின்றது பேருந்து**

**அந்நிறுத்தத்தின் எதிர்நிறுத்தத்தில்**

**தனைநிறுத்தி அவளை ஏற்றிச்செல்லும்**

**அவள் செல்லும் பேருந்து**

**ஈராண்டுகளுக்கு முன்னால்**

**ஈராண்டுகளாய்க்**

**கண்டிருந்த இடம்தான்**

**கால்கடுக்க**

**நின்றிருந்த இடம்தான்**

**காதலினைக்**

**கண்டிட்ட கடைசிஇடம் இதுதான்**

**அங்குச் சென்று நிற்க**

**அப்படியென்ன அச்சம்?**

**அவன்**

**முன், கற்கவந்திருந்தான்**

**இப்போது**

**’கள்வனாக’ வந்திருக்கிறான்**

**சாலைக் கறுப்பாற்றைக்**

**கால்துடுப்பால்**

**கடிது கடந்து**

**’அக்கறை’யோடு**

**அக்கரை சென்றான்**

**சென்றவன்**

**சிறுநிழல்தரு மரத்தடியினில்**

**சிலையென நின்றான்**

**அவனுடைய கைக்கடிகாரத்தில்**

**நொடிமுள்ளே**

**மணிமுள்ளாக நகர்ந்தது**

**அவனுடைய பொறுமை**

**எப்போதோ எல்லைகடந்திருந்தது**

**அங்குப் பலர் நின்றிருந்தனர்**

**ஆண்களும் பெண்களுமாய்**

**அப்போது**

**சாலையின் எதிர்ப்புறத்திலிருந்து**

**ஒரு பெண் வந்தாள்**

**வந்த அவளோ**

**இவனைக் கண்டாள்**

**இவனோ**

**அவளைக் கண்டான்**

**எகிறிவிட்டது நெஞ்சத்துடிப்பு**

**அப்பெண்**

**தன்னவளைப் போல்தானிருந்தாள்**

**ஆனால் அவள்**

**தன்னவள்தானா எனத்**

**தீர்மானிக்க இயலாது**

**தியங்கி நின்றான்**

**தீந்தமிழ்க் கவிஞன்**

**முகம் மறந்து மருண்டான்**

**முத்துத் தமிழ்க்கவிஞன்**

**தன்னவளோ என்றறியாப் பிறளைக்**

**கண்ணிறை காதலொடு நோக்குதல்**

**கண்ணியக் குறைவெனத் தோன்றவே**

**சட்டென விலக்கினன் பார்வையை**

**வந்தது பேருந்து**

**அவளும் ஏறினாள்**

**அவளொடு சிலரும்**

**அதிலே ஏறினர்**

**சென்றது பேருந்து**

**மாடுபூட்டா மாட்டுவண்டியாக**

**அவனோ**

**மறுகரை சென்று**

**மற்றொரு மாட்டுவண்டியேறினான்**

**அவள் உள்ளமோ**

**அக்காட்சியை எண்ணி**

**ஆனந்தக் கூத்தாடிக்கொண்டிருந்தது**

**புன்னகை பொலிய**

**எண்ணினள் மனத்தில்,**

**"என்னவனா அவன்?**

**கண்ணைவிடப் பெரிய மூக்குக்கண்ணாடி**

**கலைந்த முடி**

**பெருத்த புத்தகப்பை**

**அவனே தான்...**

**என்னைக் காணத்தான் வந்திருப்பான்**

**இன்ப அதிர்ச்சி கொடுத்துவிட்டு**

**அங்கேயே நிற்கிறான்!**

**எப்படியாயினும்,**

**கொடிவேலா!**

**வேண்டுதலை நிறைவேற்றிவிட்டாய்"**

***

**தான் நோக்கிய கண்கள்**

**பிரியமானவளுடையதா?**

**அன்றிப் பிரிதொருவருடையதா?**

**இருபான் ஐந்து அகவல் பாடி**

**இருந்த கலக்கம் சிறிது நீங்கினான்**

***1. ஏகிய காலே! ஏகிய காலே!***

***நோகுமென் னெஞ்சத்து வெந்துனி நீக்க***

***ஏகினை நல்லா ளூர்க்கே!***

***ஆனதோ என்ற னுயிரொடு நேர்வே?***

*2. வெஞ்சுரத்து மங்குவிழி கண்ட கானலென*

*நெஞ்சத் தொளிநிறைத்தாள் நேயம் மறக்கிலன்*

*வஞ்சஞ்செய் ஊழின் செயலான்*

*முன்பியான் கண்ட முகம்மறக்க லானேனோ?*

*3. மங்கிடு மாலையில் பொங்குகண் ணீரிடை*

*மங்கா தென்ற னெஞ்சி லுறைந்த*

*நேயக் காலம் மறக்கிலன்*

*காயத் துறுப்பம் முகம்மறக்க லானேனோ?*

*4.கழையுரசிக் கனலெழுந்த காட்டினின் றேக*

*வழியிருந்து மதையுணராச் சிதடன் போல*

*விழிமறந்து வெதும்பலுற் றேனே!*

*மொழிபருங் காதலம் பேறுபெற் றோனே!*

*5. மதிபிறழ்ந் தன்றோ? மனம் பிறழ்ந் தன்றோ?*

*கதிருறங்கத் தானுறங்காக் கண்பிறழ்ந் தன்றோ?*

*எதிரிலேயே என்னவணின் றாளோ?*

*நதிகலங்கிப் போச்சோ? விதிசதிசெய் தாச்சோ?*

*6.மீமீ மகிழ்ந்து மானுடன் நிற்கத்*

*தீதீ கனன்று புகைபரப் பியதோ?*

*நீநா னறியாப் புதுமுகமாய்*

*மீளாத் துயரில் மீளஆழ்ந் தேனோ?*

*7.ஆண்டோ இரண்டு நீண்டு கடக்க*

*மீண்டு முன்றன் முகத்தைக் கண்டே*

*ஆண்டியான் பேச வந்தேன்*

*ஈண்டென் செயலில் என்னை தவறோ?*

*8. தெளிவிழந் தேனோ? மருண்டுநின் றேனோ?*

*ஒளிபாய்ச்சி உள்ளம் தெளிவித்த உன்னைத்*

*துறக்கத் துணிகிலன் யாஅுன்*

*மறத்தலுன் முகமென்னு மிறப்பெய்தி னேனோ?*

*9. நெஞ்சுள்ளே வஞ்சமெது மிஞ்சிடா திரித்து*

*விஞ்சுதுய ரஞ்சியோடக் கெஞ்சுங்கண் ணிருந்து*

*பஞ்சின்வெண் னிறமனத் தாளை,*

*வஞ்சித்த வல்விதி,யான் கெஞ்சமறைத் ததுவோ?*

*10. உள்ளக் களிப்பில்லே ஊமை நிலைநண்ணிக்*

*கள்ளமென் றறிந்தும் காதற் பெருக்காலே*

*உள்ளம் நிறைந்தாளைக் காண*

*உள்ளி நின்றேனை முள்விதி வருத்திற்றே!*

*11. விதிக்கு விதிப்பவன் யானா யிருப்பின்*

*விதிப்ப னதற்கொரு நேயம்; பின்னதைப்*

*பிரிக்க மனமில னாகி*

*எரிப்பனென் எண்ணத்தை வெந்தீ யினிலே!*

*12. பாற்கடல் தன்னி னமிழ்தோ நஞ்சோ*

*நேற்றியான் கண்ட முகமே; அமிழ்தெனில்*

*தேறுக வென்றன் மன(ம்)இதில்*

*மாறுத லுண்டெனின் மரித்திடு நெஞ்சே!*

*13. உருண்ட ஞாலத் தோர்புள்ளி தன்னில்*

*மருண்டியான் மனமிளகி நிற்க; இருண்ட*

*விண்ணும் விடிந்த காலை*

*நண்ணியும் பிரிவுத் துயரழிந் திலையே!*

*14. குறிப்பிழை யோ?கொண்ட நெறிப்பிழை யோ?பண்டு*

*தறிப்பிழையால் தன்னெழில் குன்றிய ஆடையாய்ச்*

*செறிந்தது குறியிடம் பலராலாங்*

*கெறிவிழி கண்டஞ்சி ஊமையா னேனே!*

*15. முரசில் படையும்; அரசிலற மின்மையும்;*

*கரப்பா ரடையும் பணமும்; பிணமும்;*

*பயனில தாமதைப் போல*

*அயலவர் நனிநிறை குறியிட மும்மே!*

*16. பைம்மர நீழலே! மேசையே! மண்ணே!*

*மெய்யதிர விழிபடிய நாணொடியா னங்கே*

*நிற்ற னிகழ்ந்த காலை*

*உற்றுமுகம் பார்த்தநீ ருரைக்காமற் போனீரே!*

*17. சொல்லும் புதிதன்று; சோகம் புதிதன்(று)*

*அல்லும் பகலு மலைச்சல் புதிதன்று;*

*எல்லாம் பொருந்துங் காலை*

*நல்லா ளவள்முகம் மறந்தது புதிதே!*

*18. தெளிவுடை யாள்நல் லறிவுடை யாளவ*

*ளளித்தாள் தன்மனக் காதற் பேரிடம்*

*ஒளித்த காதலைக் குறிப்பின்*

*கிளத்தாள் நல்லாள் முகம்மறத்தல் பேரிடரே!*

*19. காணேன் நானெனினு மெனைக்காண விழைவாளைப்*

*பேணே னெனினெனென் வாழ்வு வறிதே!*

*பயனில் பொருளாய்க் கழியும்*

*நயமில் இரைச்ச லிசையா கும்மோ?*

*20. இன்சொனீர்ப் பாய்ச்சித் தூஅன்பு வளிவீச*

*மன்னு நினைவா முரமிட்டு காதற்செய்*

*வாடிடாது காத்தல் நன்றே!*

*கூடிடாதும் போமோ? இவ்வாய்ப் பெனக்கே!*

*21. தீவென நின்றேனைச் சாவெனப் பணிக்கும்முன்*

*தேவையென் றேயென்றன் தேவனிடத் திறைஞ்சுவது*

*பேறாமப் பூநேர்ந்து பேசல்*

*ஈறாகு கென்வாழ் விதன்பின் னாலே!*

*22. நன்னயக் காத னிகழ்வ தரிதே!*

*இன்னமு மரிதே இருமனப் புரிதல்*

*இன்னமு மரிதி யாதெனில்*

*நன்னயக் காதல் வரைவில்முடி வதுவே!*

*23. அற்றை இற்றை பிற்றை நாளில்*

*குற்றஞ் செய்மனத்தைக் கொலையுஞ் செய்க*

*கற்கை இறுப்பில் மரிப்பன்;*

*நற்பெருங் காதலில் குறை பொறுத்திலனே!*

*24. கண்ணீர்ப் பாசனத்தில் மனநிலத்தே நேயப்பயிர்*

*விண்ணி லொளிவீசு விதிக்கதிரான் வாடக்கண்டி*

*யாஅது செய்குவன் யாஅன்?*

*காஅதற் பயிரைக் காப்பதி யாண்டோ?*

*25. மெய்க்காதல் மண்ணில் வெல்லாமை யுண்டோ?*

*மெய்சோர்ந்து போயினும் மனச்சோர் வின்றேல்*

*கைகூடும் நலமே; வருந்தேல்!*

*ஐக்காத லென்று மவியா விளக்கே!*

**இரண்டாவது முயற்சி:**

**தூக்கப் போர்வையை விலக்கிக்**

**காலைப் பனியை**

**நெஞ்சுக்குள் நிறைத்துக்கொண்டான்**

**தன் வாழ்வை வழிநடத்தும்**

**இரண்டு விடயங்களான**

**தன் புத்தகப்பையையும்**

**அவள் நினைவுகளையும்**

**மகிழ்வோடு சுமந்து**

**தன்னவளைக் காணும்**

**காட்சி நிகழுமிடம் அழைத்துச் செல்வதால்**

**அவ் எந்திர மாட்டுவண்டியில்**

**ஏறி அமர்ந்தான்**

**மாட்டு வண்டியிலும்**

**பாட்டொலித்தது**

**பாலைக்கலியில்**

***"பல்லியும் பாங்கொத் திசைத்தன"***

**என்பாள் தோழி**

**அந்தப் பாட்டும்**

**அவ்வாறு தான் இசைத்தது**

***"கவலப்படாதே சகோதரா...!***

***எங்கம்மா கருமாரி காத்து நிப்பா***

*காதலத்தான் சேத்து வைப்பா*

*கவலைப்படாதே சகோதரா...!”*

**வரிகளில் பறிகொடுத்தான் நெஞ்சத்தை - அவள்**

**வருகையை எதிர்பார்த்திருந்தான் நெஞ்சத்தில்**

**சாலையாற்றின்**

**ஒரு கரையிலிறங்கி**

**மறுகரை சென்றான்**

**அவள் வருவாளெனப்**

**பாதைகளில் பார்வைபொழியக்**

**காத்திருந்தான்**

**தூரத்திலிருந்தொரு பெண்**

**நடந்து வந்துகொண்டிருந்தாள்**

**அவள் அருகில் வர வர**

**ஏற்கனவே குளிரில் நனைந்திருந்த அவன்**

**சிலையாக உறைந்து**

**பார்த்திருந்தான்**

**அவனைக் கண்ட அவள்**

**அவனை நோக்கிக் கையசைத்தவாறே**

**சாலைக் கறுப்பாற்றைக்**

**கடந்துவந்தாள்**

**அவள்...**

**தன்னவள்தான்!**

**எனக்கு அதனைச் சரியாகச்**

**சொல்லத் தெரியவில்லை**

**சாலஉறுதவநனிகூர்கழிபேருவகை**

**நான் சொன்னதும் சிறிதே**

**அவ்வளவு மகிழ்ச்சி**

**மகிழ்ச்சியின் உச்சத்தில்**

**அவனுக்குக் கவிதைகள் வாரா**

**இந்நேரத்திலும்**

**கவிதை வரவில்லை**

**அவள் உள்ளம் எப்படியெல்லாம் மகிழ்ந்திருக்கும்?**

**அவள் அவனிருக்குமிடம் வந்தாள்**

**அவனெதிர் நின்றாள்**

**பன்னாள் பிரார்த்தனைகளில்**

**அவன்**

**கடவுளிடம்**

**கடைசி ஆசையாய்க் கேட்டதை**

**அவன் ஈந்துவிட்டான்**

**அவனுடைய ஈராண்டுத் தவம்**

**அன்று முடிவுக்கு வந்தது**

**இவையேதும் கனவல்ல**

**மூளைவேறு சொல்லிக்கொண்டேயிருக்கவேண்டியதாயிற்று**

**சுற்றியிருந்தவர்களையும்**

**சுற்றும் புவியையும்**

**சிந்தனையிலிருந்து அகற்றிவிட்டான்**

**”எப்படியிருக்கிறாய்?”**

**”நான் நலம் நீ?”**

**”நானும் நலம்”**

**”என்ன இங்கு நின்றுகொண்டிக்கிறாய்?”**

**”என் நண்பரொருவரைக் காண வந்தேன்”**

**ஊருக்குக் கேட்கும்படிச் சொன்னான்**

**”உன்னைப் பார்க்கத்தான்...”**

**அவளுக்குக் கேட்க வேண்டுமெனச் சொன்னான்**

**அவள் முகத்தில் மாற்றமில்லை**

**ஆனாலும் அவள் கேட்டிருக்கக்கூடும்**

**அவனது புத்தகப்பையைப் பார்த்துக் கேட்டாள்**

**”இன்னும் இத்தனை சுமைகளைச்**

**சுமந்துகொண்டுதான் திரிகிறாயா?”**

**”சில சுமைகளைச் சுமக்கும் போது மட்டும்**

**சுமையாகத் தெரிவதில்லை”**

**அவள் முகத்தில்**

**மகிழ்ச்சி நிறைந்திருந்தது**

**அவள் அகம்**

**மகிழ்ச்சியில் திளைத்திருந்தது**

**”உன்னிடத்தே அலைபேசியுண்டோ?”**

**அவள் கேட்டாள்**

**”என்னிடத்து இல்லை...”**

**அவன் சொன்னான்**

**”நீ**

**அலைபேசி வாங்கின்**

**எனக்கு அழைத்துப் பேசு”**

**என்று எண்ணைத் தந்தாள்**

**அதைத்**

**தன் கரங்களால்**

**அவனது ஏடொன்றில்**

**எழுதித்தந்தாள்**

**கைப்பேசி இல் ஊமனாய்க்**

**கவிஞன் நின்றான்**

**நாற்புறமும் கண்வைத்து வந்தது**

**அந்த இரும்பு மாட்டுவண்டி**

**அதன் கண்தான் பட்டிருக்கவேண்டும்**

**அவள் அவனிடம்**

**விடைபெற்றுக்கொண்டு போனாள்**

**அவன் உள்ளத்திலோ**

**இசை ஞானக் கானம் தோன்ற**

**இசைப்புயல் வீச**

**தமிழோ**

**'தகதிமி தக தகதிமி தக தகதிமி'**

**என ஆட**

**ஒளிகளெல்லாம் கூட**

**ஒர் கவிதை உதித்தது**

***"எழுந் துயர்க் கொடுந் தழல் என் நெஞ்சி லின்று ஒய்ந்ததே***

***அழும் விழி சுடுங் கண்ணீரின் வெம்மை இன்று தீர்ந்ததே***

***தவம் செயும் தமிழ்க் கவிஞன் பூவை இன்று நோக்கினன்***

***உயிர் பிரிந்து வாடும் நோதல் தன்னி னின்று நீங்கினன்***

***விழிகள் மொழிபலபல மொழிந்தே கதைபேசவே***

***எழிலாய் எழுங்கதிரவன் இனிதின் நலங்காணவே***

***நதிமேல் விழுந்தசருகு கரை திரும்பியதே!"***

*********

**கை வழியே**

**மைக்குரலில்**

**பேசிக் கொண்டிருந்த கவிஞனுக்குக்**

**கைப்பேசி இல்லாதது**

**பெரும் இழப்பில்லை**

**முன்னர்**

**ஆனால்**

**அகம் நிறைத்தாளின் அருங்குரல் கேட்க**

**அஃதன்றோ ஓர் கருவி?**

**கையில் வெண்ணெய் வைத்துக்கொண்டு**

**காய்ச்சக் கலனின்றி**

**அலைந்தான் அவன்**

**ஆயினும்**

**தன்னவள் முகங்கண்டான்**

**தவிப்பெலாம் செலக்கண்டான்**

**பொன்றிடும் துயர்கொண்டான்**

**புன்னகை வரம்கண்டான்**

**விண்ணிலே பறக்கும்ஓர்**

**புள்ளெனச் சிறைகொண்டான்**

**முள்ளெலாம் கணத்துக்குள்**

**போதென்றாம் வகைகண்டான்**

**சொல்லைத்தான் காணவில்லை**

**சொல்லிடவே பேருவகை**

**அல்லைத்தான் விரட்டிட்டே**

**அருட்பரிதி தனைக் கண்டான்**

**அகத்துள்ளே மகிழ்பூத்தான்**

**பண்ணிறைந்த தமிழ்பாடி வகுப்பறையில்**

**தன்மகிழ்வைப் பகிர்ந்திட்டான் அனைவரொடும்**

**முன்னென்றும் காணாத முகங்கண்டார்**

**முகத்தினூ டிவனுடைய அகங்கண்டார்**

**அன்றிருந்த மகிழ்வெல்லாம் மீட்டற்கு**

**நல்யாழும் வீணைகளும் போதாவாம்**

**குழலூதும் கண்ணர்ஒர் ஆயிரரும்**

**குயில்பாட்டுக் காரர்ஒர் கோடியரும்**

**இசைத்தாலும் இவன்கொண்ட மகிழ்வெல்லாம்**

**இசையாலும்  எவர்தீட்ட இயல்வார்கொல்?**

**அசைகோடி அனந்தங்கள் வேண்டுமன்றோ**

**அகம்பூத்த அம்மகிழ்வைக் காட்டுதற்கே!**

*******

**அவளொடு பேசக் கிடைப்பதோ**

**சில நிமிடங்கள்**

**கடலளவு மனத்தைக்**

**கடுகளவு நேரத்தில்**

**கதைத்துவிட இயலுமா?**

**உள்ளெல்லாம் ஓர்நினைவில்**

**யோசனையில் ஆழ்ந்திருந்தான்**

**கண்முன்னே கிடந்ததோர்**

**புத்தேடு**

**சில்பக்கம் கவிதையால்**

**நிறைந்திருந்த ஏடு**

**ஏடு திறந்தான்**

**எழுதுகோலின்**

**மூடி திறந்தான்**

**அவளுக்கென முன்னெழுதிய**

**அருங்கவிகள் சிலவற்றை**

**அதிலே நிறைத்தான்**

**ஏட்டுச்சுரைக்காய்**

**கறிக்குதவாமலிருக்கலாம்**

**ஏட்டுப்புறா**

**காதலுக்குதவுமல்லவா?**

**முன்னெழுதியன மட்டுமா?**

**முன் அவளைக் கண்டவுடன்**

**மின்னலென எழுந்தகவி**

**மென்மொழியாள்**

**இலக்கணத் தமிழால்**

**இடர்ப்படாதிருக்க**

**எளிய மொழியில்**

**ஓர் கடிதம்**

**இவையெலாம் பதித்தனன்**

**’தாளில்’ இணைத்துவைத்தான்**

**அஃதொரு**

**’பறவாப்புள்’**

**ஏடு மட்டும் போதுமா?**

**எழுதுகோல் வேண்டாமா?**

**முன்பொருநாள்**

**உள்ளம் பகிர உதவிய**

**செவ்வண்ணப் பேனாவைச்**

**சிந்தைசெய்தான்**

**எலுவனொடு சென்றோன்**

**அலைந்திலன் திரிந்திலன்**

**அங்கிருந்த ஓர் கடையில்**

**அரில்தப சோதித்துச்**

**செவ்வண்ணக் கோல்கொண்டான்**

**'செங்'கோலைச்**

**சிந்தையுளார் கரம் சேர்க்கும் முன்**

**சிறுகவி புனைந்தான்**

**சீர்மிகு சிவப்பை**

*"செவ்வண்ணம்மே! செவ்வண்ணம்மே!*

*செம்மை கொள் காதல் கலந்த துரைக்கும்*

*செவ்வண்ணம்மே! செவ்வண்ணம்மே!*

*சீரிய சிந்தையின் சிந்தனை உரைத்த*

*செவ்வண்ணம்மே! செவ்வண்ணம்மே!*

*நேருங் காதலர் நெட்டுரை யாடற்பதி*

*செவ்வண்ணம்மே! செவ்வண்ணம்மே!*

*நாணநிறம் நினின்மிக்கது கண்டு வியக்கும்*

*செவ்வண்ணம்மே! செவ்வண்ணம்மே!*

*இப்பெரு நேயத்தி னியல்புக ளெழுதும்*

*செவ்வண்ணம்மே! செவ்வண்ணம்மே!*

*நின்னை நிறைக்கத் தாள்கள் தேடுவம்*

*செவ்வண்ணம்மே! செவ்வண்ணம்மே!*

*அன்பில் நிறைய நாள்கள் தேடுவம்*

*செவ்வண்ணம்மே! செவ்வண்ணம்மே!*

*அந்தி மாலையின் காதலர் ஆற்றாமையின்*

*செவ்வண்ணம்மே! செவ்வண்ணம்மே!*

*அன்று தீர்ந்தனை இன்று சேர்ந்தனை*

*செவ்வண்ணம்மே! செவ்வண்ணம்மே!*

*துன்பனல் தீரும் காலம் வந்தது.*

*செவ்வண்ணம்மே! செவ்வண்ணம்மே!*

*ஓ!*

*செவ்வண்ணம்மே! செவ்வண்ணம்மே!"*

***

**இம்முறை**

**அவளிடம்**

**ஏடொடு**

**எழுதுகோல் தர எண்ணியோன்**

**சில்காசு சேர்த்தான்**

**சிந்தை நிறைந்தாளொடு**

**சேர்ந்து பயணிக்க**

**அற்றை நாளில்**

**பரிதி**

**பன்னிரண்டு வயதுடைய**

**தன் ஒர் பிறவியில்**

**ஒன்றரை வயது**

**இளம்பரிதியாக இருக்கையில்**

**ஆங்கு நின்ற**

**அவள் மருங்கு**

**அவ் ஏடு கையேந்தி**

**அவன் நின்றான்**

**ஏடு கண்ட அவள்**

**எண்ணம் கண்டாள் போலும்**

***'பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்'***

**என்ற**

**மகாகவியின் வாக்கு**

**மனதில்**

**மின்னலென மின்னிப் போகிறதெனக்கு**

**'என்ன ஏடு அது?'**

**என்று கேட்டாள்**

**கேள்விகள்தான்**

**பதிலுக்காகக் காத்திருக்கும்**

**ஆனால்**

**இவன் பதிலை வைத்துக்கொண்டு**

**கேள்விக்காகக் காத்திருந்தான்**

**"இஃது ...**

**உனக்குத்தான்"**

**ஏடு அவன் தரவும்**

**எழிலகள் பெற்றாள்**

**என்ன அவசரமோ**

**இரண்டு சொல் பேசுவதற்குள்**

**அந்த எருமை**

**கிறீச்சிட்டபடி**

**எதிர்வந்து நின்றது**

**முன்புற வாயில் பெண்களுக்கென்றும்.**

**பின்புற வாயில் ஆண்களுக்கென்றும்**

**இயற்றி வைக்கப்பட்ட**

**எழுதப்படாச் சட்டத்தின்கீழ்**

**முன் வாயில் வழி அவளும்**

**பின் வாயில் வழி அவனும்**

**அவள் செலும் பாதையில்**

**செலும் அதனுள் ஏறினர்**

**அவள் அமர,**

**இவனுக்கு நிற்கவே இடம்கிடைத்தது**

**அப்பேருந்தின் நடத்துநர்,**

**எங்கிருந்தோ வந்தார் எங்குசெல வேண்டுமென்றார்**

**இங்கிவரை யாரழைத்தா ரென்றவனும் மனங்கடுத்தான்**

**செல்லுமிடம் சொன்னவுடன் சீட்டின்விலை கேட்டவுடன்**

**செங்கவிஞ னதிர்ந்திட்டான் செம்பகலில் கொள்ளையென**

**இருநிறுத்தம் ஏகுதற்கே எழுநூறு காசென்றார்**

**இருந்த காசெல்லாம் எடுத்துக்கைக் கொடுத்துவிட்டான்**

**கோடி தரினும்**

**கிட்டுமா இக்காலம்?**

**வறியவன் இளமையில்**

**எழுநூறு காசும்**

**ஏழுகழஞ்சு பொன்னும்**

**இணையே!**

**பொருளுடையார் மட்டுமே**

**பொருந்தவேண்டும் காதலிலென்றால்**

**காதல் இந்நேரம்**

**கரையான் அரித்த ஏடாகியிருக்கும்**

**பொருள்முதல் வாதம் புறந்தள்ளிப்**

**பெருங்காதல் தொடர்கின்றேன்**

**நின்ற அவனுக்கும்**

**கிடைத்ததொரு இருக்கை**

**அவளைக் கண்டாங்கு**

**அவனமர்ந்தான்**

**கையிலிருந்த ஏட்டைத்**

**தன்னவள்**

**உள்ளத்துக்குள்ளேயே**

**உச்சரித்துக்கொண்டிருப்பதை**

**உள்ளன்பன் நோக்கியாங்கிருந்தான்**

**இவ்வளவு நேரம்**

**அவளொடிருந்து**

**எத்தனை காலம் ஆகிவிட்டது?**

**அந்த எஃகெருமை**

**அன்று**

**சற்று விரைவாக விரட்டப்பட்டது போலும்**

**சில நிமிடங்களுக்குள்ளாக**

**இறங்க வேண்டிய நிறுத்தம்**

**எதிர்வந்துவிட்டது**

**என் செய்வான் அவன்?**

**செவ்வண்ண எழுதுகோலைச்**

**சிந்தைக்கினியாளிடம் தந்துவிட்டுத்**

**தகரத்திலிருந்து**

**தரைக்குவந்தான்**

**எதிர்க்கரையில் நின்றிருந்தான்**

**இன்னொரு நண்பன்**

**தனைநோக்கி வந்த**

**தலைவனைக் கண்டான்**

**வந்தோனை நோக்கி**

**விசாரணைப் பார்வையொடு**

**வினாக்கணை தொடுத்தான்**

**”என்ன இந்தப்பக்கம்?”**

**”உன்னைக் காணத்தான்”**

**”நம்பும்படி பொய் சொல்”**

**”நம்பவில்லையா?**

**அது சரி,**

**இன்னும் பேருந்து வரவில்லையா?”**

**”வரும் பொறு”**

**தூரத்திலிருந்து**

**ஓர் எஃகெருமை**

**தள்ளாடி வந்துகொண்டிருந்தது**

**ஏறினர்**

**இருவரும் பேருந்தில்**

**அருகருகமர்ந்தனர்**

**இரட்டை இருக்கையில்**

**பெட்ரோலியக் கள்ளருந்திய**

**பேரெஃகெருமை**

**தள்ளாடி நகர்கையில்**

**சொல்லாடல் நிகழ்ந்தது**

**சாளர இருக்கையில்**

**சாய்ந்திருந்த தோழன்**

**சங்கதி பகர்ந்தான்**

”சேதி தெரியுமா?”

நம்மொடு பயின்ற

நந்தோழி ஒருத்திக்குத்

திருமணமாயிற்றாம்”

திக்கென்றிருந்தது

அருகிருந்தவனுக்கு

”என்னடா சொல்கிறாய்!

இவ் இளவயதில்

ஏனடா திருமணம்?”

”என்னடா செய்வது?

பாமரப் பெற்றோரும்

பருவப் பெண்ணவளைப்

பிடித்தொருவன் கைதனிலே

கொடுத்துவிட்டால் நன்மையென்று

நினைத்துச் செய்கின்றார்

நாம் சொல்லித்தான்

திருந்துமா சமூகம்?”

”என்ன நீ சொன்னாலும்

ஏற்காதென் னெஞ்சு

குழந்தைத் திருமணங்கள்

குறித்துப் புகாரளிப்போர்

**கூட்டத்தில் இல்லையோ?"**

**நீயொன்று சொல்கிறாய்**

**நிலைமை வேறொன்று**

**சட்டத்தை மிதித்துவிட்டுச்**

**சடங்குகள் செய்வதுதான்**

**சமூகத்தின் பொதுவழக்கு**

**அது மட்டுமன்று**

**அவரவர் விதி அப்படி**

**நாம் என்ன செய்யமுடியும்"**

**" இது விதியில்லையடா!**

**வீணர் செய் சதி!"**

***பாலருந்து மதலையர் தம்மையே***

***பாதகக்கொடும் பாதகப் பாதகர்***

***மூலத்தொடு குலங்கெடல் நாடிய***

***மூடமூடநிர் மூடப் புலையர்தாம்***

***கோலமாக மனத்திடைக் கூட்டுமிக்***

***கொலையெனுஞ் செய லொன்றினை யுள்ளவும்***

***சாலவின்னு மோராயிரம் ஆண்டிவர்***

***தாதராகி அழிகெனத் தோன்றுமே!***

**என்ற**

என் ஆசானின் வரிகள்

இவர்கள் காதுகளை எட்டவில்லையா?”

”பாரதி சொன்னதோ

பாலருந்து மதலையர்

இவர்களோ

பருவ மங்கையர்

பிழையிதில் என் கண்டாய்?”

”பதினெண் வயதுக்கு

உட்பட்டோர் யாவரும்

பாலருந்து மதலையராயினும்

பருவ மங்கையராயினும்

குழந்தைகள் என்றே

சட்டம் சொல்கையில்

இவர்கள் செய்வன

எள்ளளவும் நீதமில்லை”

”நீ சொல்வாய் நான் சொல்வேன்

கேட்பவர் யார்?

நீயே சொல்?”

சிற்றூர்களிலோ

இது சிறுவிடயம்

**நீநான் கலங்கித்தான்**

**நிகழ்வன மாறுமா?”**

**”பெண்ணுக்கோ**

**பேரழுத்தம் தரப்படுகிறது**

**ஆணுக்கெங்கே**

**அறிவு போயிற்று?”**

**”அறிவா?**

**ஆணுக்கா?**

**ஆணுக்கு**

**அழுத்தம் தரப்படுவது குறைவுதான்**

**சில நேரங்களில்**

**ஆசை கூடக் காரணமாகி விடலாமன்றோ?”**

**”நீ என்ன சொல்கிறாய்?”**

**”இப்படிக் கொள்வோம்**

**இருவரும் தம்மிடை**

**காதல் கொண்டு**

**சட்டம் வகுத்த**

**கெடுவின் முன்பே**

**குடும்பத்தாரால்**

**திருமணப் பந்தர்க்கீழ்க்**

**கூட்டுவிக்கப்பட்டால்**

**அதற்கென்செய்வாய்?”**

**”அதுவும் தவறே!**

**முன்னினும் பின்னது**

**மிக்க தவறே!**

**சொத்தே இருப்பினும்**

**சொந்த உழைப்பாயினும்**

**சில ஆண்டு பொறுத்தல்**

**சிறப்புடைத்தன்றோ?**

**குடும்பக் கூட்டுக்குள்**

**’கொட்டல்’ இல்லையேல்**

**பொறுமை காப்பதில்**

**தவறெதும் இல்லை**

**திருமணப் பந்தமோ**

**பண்பட்ட பின்பே**

**பயணிக்கும் பாதை**

**காதல் என்பதோ**

**பண்படும் நோக்கில்**

**பயணிக்கும் பாதை**

**பண்படா முன்னமே**

**பாதை மாறுதல்**

**நல்லதுக்கில்லையென**

**நான் சொல்லத் தேவையில்லை”**

**”என்ன நீ சொன்னாலும்**

**நடப்பன எவற்றையும்**

**நாம் தடுக்க இயலாது**

**நாவாடி நலியாமல்**

**நிறுத்தம் வந்துவிட்டது**

**இறங்கெ”ன்று இயம்பினான்**

**இறங்கிய அவனுக்கு**

**இடர் தோன்றியது நெஞ்சில்**

**”நம்மவளுக்கும் இதுபோல்**

**நடந்துவிடக்கூடுமோ?**

**இல்லை இல்லை**

**அல்லன எண்ணி**

**அகனழியாதே!**

**நல்லன எண்ணு**

**நலமே விளையும்!”**

**என்று தேறினான்**

***

**அகப்பொருள் பயின்றுகொண்டிருந்த**

**அழகான காலமது**

**அற்றைக் காதலுக்கும்**

**இற்றைக் காதலுக்கும்**

**இடையினிலே**

**அடிக்கடி**

**ஒப்பீடு செய்துபார்ப்பான் இவன்**

**காலங்கள் மாறிடினும்**

**காதலின் அடிப்படைகள்**

**மாறாமலிருப்பதனைத்**

**தானாக அறிந்திட்டான்**

**அவளை**

**அடிக்கடி காணவந்தால்**

**அலராகிவிடுமென்று**

**சில நாள்கள்**

**ஒருவழித்தணந்திருக்கிறான்**

**அப்பொழுதெல்லாம்**

**அவளங்கே**

**நின்றிருப்பதைக் காண்பான்**

**அவள்**

**வெறுமனே**

**பேருந்துக்காகத்தான் காத்திருந்தாளா?**

**அவனிடம்**

**பேசுவதற்காகவும்தான் காத்திருந்தாள்**

**அஃது அவனும் அறிந்தது**

**அவளை**

**நேரில் கண்டபின்னும்**

**பேசாமல் கடப்பது**

**உள்ளத்தை**

**ஊறுங்கண்ணீரால் நிறைத்துவிடுமென்று**

**அவனும் அறிவான்**

**தன்னவளின் துன்பமெல்லாம்**

**தானடையும் துன்பமன்றோ?**

**அவளைக் காணும்போது**

**அந்நொடியில் அடையும் மகிழ்ச்சி**

**அடுத்த நொடியே**

**அவளைக் காணாமையால்**

**துயராக மாறிவிடும்**

**அவளைக் காணும்**

**அச் சில பொழுதுகள்தாம்**

**அவனுடைய நாளின்**

**முழுமைகள்**

**சில்நாள்**

**அவளைக்காண**

**அவன் காத்திருப்பான்**

**உள்ளமும் உயிரும்**

**ஒருத்தியை எதிர்நோக்க**

**உளமெலாம் உணர்ந்து**

**ஒதற்கரியவளைக்**

**கண்காணும் கண நேரத்துக்காய்க்**

**காலம் மறந்தவன்**

**விரகத்தீயினில்**

**விறகென நிற்பான்**

**அன்றொரு நாள்**

**அவளிடம் கொடுத்த**

**அவ் ஏட்டை**

**அவள்**

**மீண்டும் அவனிடம் கொடுத்தாள்**

**"இந்த**

**எழுத்துக்கள் யாவும்**

**என்னவளின்**

**பொன்னெழுத்துக்களன்றோ!"**

**என்று எண்ணி**

**அவ் ஏட்டை**

**ஆயிரம் கோடி**

**எதிர்பார்ப்புகளோடு**

**திறந்தான்**

**"என்னை**

**நீ அங்குப் பார்க்கும்போது**

**உன் கண்ணில்**

**அன்பும் பயமும்**

**தெரிந்தது**

**. . .**

**நீ**

**என்னைப் பார்க்கத்தான்**

**வந்திருந்தாயென்பது**

**எனக்குத் தெரியும்**

**...**

**தொலைபேசி, இணையம் போன்ற**

**பல தொலைதொடர்புச்சாதனங்கள்**

**கண்டுபிடிக்கப்பட்ட பின்னும்**

**நாமிருவரும்**

**கடிதத்தினூடாகவே**

**பேசிக்கொண்டிருக்கிறோம்**

**...**

**கடிதத்தில் தொடங்கிய இது**

**கடிதத்திலேயே முடியுமென்று**

**நினைக்கிறேன்"**

**சொற்களெல்லாம்**

**மனனம் செய்யாமலேயே**

**மனத்துள் சென்று பதிந்தன**

*******

**அன்றொரு நாள்**

**அன்பு நிறைந்தாளைக் காண**

**அவ் இடத்து நின்றிருந்தான்**

**அவன்**

**”காதல் வானிலே...**

**காதல் வானிலே...”**

**என்ற பாடல்**

**அருகிருந்த கடையில்**

**ஒலித்தாங்கிருந்தது**

**ஆயின் என்செய?**

**அவளோ அன்று**

**வரவேயில்லை**

**ஒரு கிழமை வரை**

**அவளைக் காண இயலவில்லை**

**வரும் வழியில்**

**வண்ணங்களால் மின்னின**

**பதாகைகள்**

**கோயில் திருவிழா போலும்**

**”அங்காவது**

**அவளைக் காணவியலுமா?”**

**என்ற ஏக்கத்தோடு**

**அவ்விழா சென்றான்**

**அத்திருவிழாவிலோ**

**ஆடினர் சிலர்**

**மண்சட்டி கையில்**

**நெருப்போ சட்டிக்குள்**

**வேம்பின் மேல்**

**வெஞ்சட்டி வைத்து**

**வேம்பின் கீழ்த்**

**தன்கை வைத்து**

**ஆடினர்**

**ஆவேசமாய்**

**அவர்களைக் குளிர்விக்க**

**நீரூற்றப்பட்டது**

**அவர்களின் மேல்**

**எக்கட்டையெனத் தெரியவில்லை**

**எரிதீயில்**

**இடப்பட்டுக்கொண்டிருந்தன**

**சிறுதுண்டுக் கட்டைகள்**

**அக்கூட்டத்தில்**

**அவளைத் தேடினான்**

**அவளோ**

**ஆங்கில்லை போலும்**

**அவளைக் காணாது**

**அவன் திரும்பினான்**

**நேராமையே**

**நிதம் தொடர்ந்தது**

**என்னவென்று பார்த்தால்**

**இரு பேருந்துகளும்**

**வந்துநிற்கும் நேரம்**

**மாற்றப்பட்டுவிட்டது**

**சில நிமிடங்களும்**

**சுருக்கப்பட்டன**

**சிலசமயம்**

**இவன் வருவதற்குள்**

**அவள் சென்றுவிடுவாள்**

**நேர்ச்சி**

**மிக அரிதானது**

**அவ் அரிய நேர்வையும்**

**ஒருமுறை**

**ஒட்டைவாயால்**

**’சொதப்பி’விட்டான்**

**அந்தக் கதையை**

**என்னவென்று சொல்ல?**

**அவளைக் காண**

**அவ் எஃகெருமையிலிருந்து**

**வேகமாகக் கீழிறங்கி**

**ஒடி மறுகரை சென்று**

**அங்கு நின்ற அவன்**

**அவளிடம்**

**”பேருந்து இன்னும்**

**வரவில்லையா?”**

**என்று**

**கேட்டுக்கொண்டிருக்கும்போதே**

**எதிர்ப்புறத்திலிருந்து**

**அந்த எஃகெருமை**

**வந்து கொண்டிருந்தது**

**”நீ கேட்டு முடிப்பதற்குள்**

**பேருந்தே வந்துவிட்டதே!**

**நான்**

**சென்றுவருகிறேன்” என்றவளோ**

**அதிலேறிச் சென்றுவிட்டாள்**

**அவள் சென்றபின்**

**தன்னைத்தானே**

**வைதான்**

**”மூடனே!**

**நேர்வே அரிது,**

**அதனினும் அரிது**

**உரையாடல்**

**சில நொடிகளையும்**

**வீணாக்கிவிட்டாயே!**

**உன்னையெல்லாம்**

**என்ன செய்வது?**

**நின்னினும் மூடன்**

**நிலத்தினில் உண்டோ?**

**காத்திருந் தென்பயன்?**

**கடிதுவந் தென்பயன்?**

**நின்னவளைக் காணும்**

**நேரத்தில் நீயும்**

**காதல் மூளையைக்**

**கழற்றிவைத்தாயா?"**

**என்று பல கூறி**

**இவனும் சென்றான்**

***

**பின்னொரு நாளில்**

**பெரும்பிரிவின் பின்**

**தந்தனன் ஏட்டைத்**

**தன்னுளம் நிறைத்து**

**செங்கடிதத்தில்**

**சில்வரிகள்**

**சிறப்புடையன**

**"நின்னையான் காண்பதுவே**

**நிலையா என் ஆயுளின்**

**ஈற்றாசை என்றந்த**

**இறைவனிடம் சொல்லியிருந்தேன்"**

**எழுதப்பட்ட ஏடோ**

**பல நாள்கள்**

**அவன் புத்தகப்பைக்குள்ளேயே**

**உறங்கிக்கொண்டிருந்தது**

**பின்னொருநாள்**

**பேசப் பொழுதிலா போழ்தும்**

**போதவள் கரத்திடை**

**ஏடு சேர்த்தி ஏகினான்**

*******

**காதல்**

**கண்களினூடும்**

**காகிதங்களினூடும்**

**பரிமாற்றப்பட்டுக்கொண்டிருப்பினும்**

**வாய்ச்சொற்கள்**

**பயனிலவெனினும்**

**குரலாடாமை**

**கொடுத்தவிப்பன்றோ!**

**அவளிடம் பேசாது இறப்பதனினும்**

**அவளிடம் பேச இரப்பதில்**

**பிழையில்லை என்றே**

**துணிந்தனன் பின்னும்**

**கேட்கக் கூசிக்**

**குறுகினன் நைந்தான்**

**பிரிவாற் கவிஞன்**

**பேரெவ்வ மெய்தலை**

**கண்ணாற் கண்ட**

**கண்ணோட்டமுடையாள்**

**காணாத் துன்பைக்**

**காணற் பொறுத்திடாத்**

**தோழியொருத்தி**

**கொண்ட நட்பால் -**

**உடன்பிறப்பானவள்**

**கொப்பூள்க்குருதி**

**ஒன்றலவெனினும்**

**உகுவிழி நீரை**

**ஒரம் தள்ளும்**

**வாஞ்சை கொண்டதால்**

**மறவா நன்றியை**

**மற்றிவனுக்குச் செய்யநாடி**

**"அலைபேசி எனதுண்டு அழைத்தற்கு**

**அல்லல் ஒழிந்தே நீ அன்புசெய்யே!"**

**என்றுதன் பேசியைத்**

**தந்துதவ ஒப்பினள்**

**கொள்ளவும் இயலாது**

**தள்ளவும் இயலாது**

**தவித்தனன் அவன்**

**”என்னால் உனக்கு**

**இடரேன் தோழீ?**

**வேண்டாம் என்றே**

**விலக்கவுமியலாது**

**வேண்டும் என்றியான்**

**வாங்கவுமியலாது**

**துடிக்கும் துடிப்பை**

**யானே அறிவேன்**

**விரகமே என் விதியானது…”**

**”நொந்து பேசி**

**நேரம் போக்காதே**

**உதவ உனக்கு**

**உறுதுணை உண்டு**

**இதை நீ மறவேல்!**

**தேவையென்றால் இத்**

**தோழியைக் கேளு!**

**சோகம் நிறைந்து**

**சோர்ந்திருக்காதே!"**

**என்று சொல்லினள்**

**இவனைத் தேற்றினள்**

**அற்றை நாளில்**

**வானம் கருத்த**

**அந்திப் பொழுதில்**

**ஆற்றாமையோடு**

**கவியொன்றெழுதினான்**

**அவியும் நெஞ்சொடு**

***"இரவு...***

***காரிருள்***

***புறத்தும் அகத்தும்***

*அகத்தொளி நிறைத்தாளினை*

*ஆங்குக் காண இயன்றிலது*

*அவளும் ஆண்டு வந்திலள்*

*என்ன நேர்ந்திருக்கும்?*

*இடர்களில் இடறி விழுகிறேன்*

*இதை எண்ணி யெண்ணி*

*ஒற்றைப் பதில் கடிதம் வேண்டி*

*கற்றைக் காகிதங்கள்*

*நேரம் பிழைத்ததோ*

*நேர்தற்கு?*

*என்னவாயிற்று?*

*என்னவாயிற்று?*

*என்றெனக்கு இறை தெரியும்?*

*காத்திருப்பு - ஒரு தவம்தான்*

*முள்ளின் மீதன்றோ அமர்ந்துள்ளோம்*

*வெவ்விரும்பாணிகள் முட்களாய்!*

*ஒளி காணாவிடினும்*

*ஒலி கேட்டற்கு*

*ஓர் வழியுண்டு*

*மீண்டுமோர் அலைபேசி*

*காற்று எம் குரல்களை இணைக்கக்*

*காத்திருக்கிறது*

*ஆனால்...*

*என்னால், எம் நலம் விழைவார்க்கு*

*ஏதும் துன்பம் ஏற்படின்*

*பொறுக்கவியலாது*

*என்றன் துன்பம் பொறுக்க*

*மனவலி...உ...ண்டு...*

*ஆனாலும்*

*அடி மனத்தின் ஆழம்*

*என்னை இயங்கவிடாமல் செய்கிறது*

*பொறுமை, நம்பிக்கை*

*இத்தவத்தின் இன்றியமையாமை*

*இதுவும் ஒரு சோதனையோ?*

*பற்றவைத்த பட்டாசுத்திரி போல்*

*வேகமாகத் தீர்கிறது காலம்*

*பதில் கடிதத்துக்காய்க் காத்திருக்கும்*

*அஞ்சல்பெட்டி நான்"*

***

**அழுத்தப்பட்ட அவன் மனத்தினின்று**

**அருந்தமிழ் மட்டுமன்று**

**ஆங்கிலமும் வரும்**

**உணர்ச்சியின்**

**முகடு காணவியலா உச்சியில்**

**ஆங்கிலக் கவிகளும்**

**அவன் புனைவதுண்டு**

**அப்படித்தான் புனைந்தான்**

**"அவனுக்காக ஒரு பாட்டு"**

***'A song for me'***

***"I'm in***

***One's heart and***

***In her dream***

***This is a miracle, isn't it?***

***Recently***
***I haven't seen her...***

***My heart is struggling with***
***Flying time***

***The time has no sense;***

***Sometimes even it has...***

***Which can feel my pain***

***What can I do?***

***The waiting is eternal***
***But***
***My life is mortal...***
***We'll win one day***

***then***

***Our crystal pure love***
***Will be rewarded..."***

*[தமிழாக்கம்]*

*”நான்*

*ஒருத்தியின் மனத்திலும்*

*கனவிலும் இருக்கிறேன்*

*இது விந்தையன்றோ?*

*சில நாட்களாய்*

*அவளை நான் காணவில்லை*

*என் நெஞ்சோ*

*பறந்துகொண்டிக்கும் காலத்துடன்*

*போராடிக்கொண்டிருக்கிறது*

*நேரத்துக்கு உணர்ச்சியில்லை;*

*சில சமயங்களில்*

*அதுகூட என் வலியை உணர்கிறது*

*யான் எவன் செய்கோ?*

*காத்திருப்போ எல்லையற்றது*

*ஆனால்*

*என் வாழ்வோ எல்லைக்குட்பட்டது...*

*ஒரு நாள் யாம் வெல்வோம்*

*அந்நாளில்*

*எம் மீத்தூய காதல்*

*கௌரவிக்கப்படும்"*

***

**அவளைக்**

**காணாத நாட்களின் எண்ணிக்கை**

**கூடிக்கொண்டேயிருந்தது**

**உதவிய தோழியிடம்**

**உறுபெரு நன்றியுடன்**

**கைப்பேசியைக் கைப்பெற்றான்**

**ஒவ்வோர் எண்ணாய்**

**உற்றுக் கவனித்து**

**உள்ளிட்டான்**

**அஞ்ஞான்று அத்தோழி**

**கேட்டாள் ஒரு வினாவை**

**"அவள் எண்ணை**

**மனனம் செய்து விட்டாயா?"**

**இல்லையெனத் தலையசைத்தான்**

**பாவப்பட்ட முகத்துடன்**

**”என்ன நீ இப்படியிருக்கிறாய்?**

**மனத்துள்ளவளின் தொடர்பு எண்ணை**

**மனத்தமைக்க மாட்டாயா?”**

**கவிஞன்**

**நாணி நின்றான்**

**”நாணியது போதும்**

**நான் சொன்னது செய்!”**

**ஒவ்வோர் எண்ணாய்**

**உற்றுக் கவனித்து**

**உள்ளத்துள் இட்டான்**

**பத்து எண்களின் பின்**

**ஒற்றைப் பொத்தானின் இடைவெளியே**

**குரலாடல் நிகழ,**

**அவ் இடைவெளியை நீக்கினான்**

**அவள் குரல் கேட்கும் முன்**

**அழைக்குநர் கேளொலி (Caller Tune)**

**தீந்தமிழ்த் திரையிசைப் பாடலாய்த்**

**தேனெனச் செவிகளில் பாய்ந்தது**

***"முன்பே வா! - என்***

***அன்பே வா!***

***ஊனே வா! உயிரே வா!"***

**நின்றது அப்பாடல்**

**இப்போது**

**கேட்டது அவள் குரல்**

**"அழைத்தவர் யார்?" என**

**ஆங்கவள் கேட்டாள்**

**"யானே!" என்று**

**ஈங்கிவன் கூறினன்**

**"ஈதோ உன் எண்ணென்று**

**இசையன்னாள் கேட்க,**

**"ஈதென்றன் தோழியின்**

**எண்" என்று மொழிந்தான்**

**பின்னே நிகழ்ந்தது**

**சிற்றுரையாடல்**

**குரல் கேட்ட களிப்பில்**

**கூத்தாடாநின்றான்**

**காணாத் துயரும்**

**மறந்ததஞ்ஞான்று**

**பேசி முடித்துப்**

**பேசி கொடுக்கையில்**

**உள்ள ஆழத்தினின்று**

**உவந்து, தோழியிடம்**

**"நீ செய்த உதவி**

**நினக்குத் தினைத்துணையாகினும்**

**எனக்குப்**

**பனைத்துணை**

**அன்று,**

**பனை சிறிது**

**மலை பெரிது**

**மலை என்ன?**

**மனத்துள மகிழ்வினில்**

**காலத்தினால் நீ செய்த உதவி**

**ஞாலத்தின் மாணப் பெரிது”**

**என்றவன் சொல்லி**

**இன்பிலே திளைத்தான்**

*******

**அன்றோர்**

**அழகிய நாளில்**

**அருமையானதான நேர்வில்**

**அவனிடம் திரும்பிவந்தது**

**அந்தக் ’காகிதப் புறா’**

**அணையுடைந்தோடும்**

**அன்பு வெள்ளம்**

**உள்ளத்தில் பெருக**

**காகித வானில்**

**எழுத்து விண்மீன்களை**

**கவிஞன் நோக்கிக்**

**காதலொடு பயின்றான்**

**"ஏன் இவ்வளவு நாட்களாக**

**என்னைக் காண வரவில்லை?"**

**அவ் எழுத்துக்களோ**

**அவனை அன்பாய் அதட்டின**

**"நீ ஏன் என்மேல்**

**இவ்வளவு பாசம் வைத்திருக்கிறாய்?"**

**அவளைக் காண்பதே**

**அவன்றன் ஈற்றாசையென**

**எழுதியிருந்த வரிக்கு**

**இவ்வரியைக் கேள்வியாக்கியிருந்தாள்**

**அவன் என்ன சொல்வான்?**

**அவன்**

**தமிழ் மீது கொண்ட காதலுக்கும்**

**அவள் மீது கொண்ட காதலுக்கும்**

**காரண காரியம் தேடுவது**

**உடலில்**

**உயிரெங்குளதெனத்**

**தேடுவது போன்றது**

**"உன்னைப்போல் எனக்குக்**

**கவிதைகளெல்லாம் எழுதவராது**

***"எனக்காகக் காத்திரு***

***உனக்காக வருகிறேன்"***

**எழுதப்பட்டன யாவும்**

**எளிய வரிகள்**

**அவள் எழுத்துக்கள்**

**தொல்காப்பிய நூற்பாவானால்**

**அவன்**

**நச்சினார்க்கினியராகிவிடுவான்**

**காதற்றமிழனின்**

**கைகளில் சேர்ந்த**

**முதல் இலக்கணம்**

**தொல்காப்பியமன்றோ!**

**அக் காகிதப்புறா**

**மீண்டும் அவனுடைய**

**மிக நீண்ட கடிதத்துடன்**

**அவள் கை சேர்ந்தது**

***

**ஓர் இரவு**

**கவிஞன்**

**தாளொடும் கோலொடும்**

**தனித்திருந்தான்**

**காகிதத்தில் உறையும் கவிதைகளோ**

**ஒவ்வொரு சொல்லாய்க் கோத்து**

**மனத்துள்ளேயே சரிபார்க்கப்படுவன**

**ஆனால்**

**வெள்ளமான அவன் மனப்போக்கைச்**

**சொல்லிலே காட்ட எண்ணியவன்**

**மனக்காளையை**

**நுகத்தில் பூட்டி**

**எழுதுகோல் ஏர்முனையால்**

**காற்றினும் கடிதாய்க்**

**காகித நிலம் உழத்தொடங்கினான்**

**செந்தமிழ் கிறுக்கினான்**

***"நொந்தென் மனம் வருந்து துன்பு நீக்க நீ வந்தாய்! வாழ்விலே தாழ்வினை நீக்கிப் புத்துயிர் தந்தாய்! நான் அழுதற்கோர் ஏதுண்டு; அஃதுன்றன் பிரிவு; யாவும் உரைப்பன் யான் இங்குக்***

*கேட்பவர் யாரோ? நீயிலாப் பெருவாழ்வு என்பதென் தேவையில்லை; நீயிருந்தால் குறுவாழ்வு போதும்; எண்ணங்கள் வடிகட்டப்படாமல் வந்து விழுகின்றன; எத்தனை உண்மைகள் உண்டோ உரைப்பன் கேள்! நீ இன்னும் எத்தனை நாள்கள் என்னைக் காணா ஏக்கில் தவித்துத் துடிக்கப்போகின்றாய்! என் எண்ணங்கள் எழுதப் பல கோடி பக்கங்கள் போதா ஆயினும் இப்போது வெளிவருவன மனம் அவ்வப்போது எண்ணும் வரிகளென்பதை நீ மறக்கவியலாது; எதுகையோ மோனையோ இதில் தலையிட்டு என் எழுத்தின் திசை மாற்றாது, எனக்கு இச் செந்தமிழ் எழுதிடத் துணிவுளதா எனச் சோதிக்கும் நேரமிது! உயிரே! தமிழே! அமிழ்தே! இன்பே! ஒளியே! இன்னும் எத்தனை பெயர்கள் சூட்டுவன் நினக்கு மலரே! ஆயிரம் கோடி நற்சொற்கள் அவையெல்லாம் கொட்டிக் களிப்பேன்; நின்னை வரைதற்கு இக் காகிதமோ சொற்களோ போதா! யான் என் செய்வேன்? என் இடரெல்லாம் இதிற் பதிக்கும் யான் நின் துயர் அறிந்திலனே! நீ எங்ஙனம் இருக்கிறாய்? நின் மனம் உயிர் யாவையும் நலமா? எனக் கேட்கவும் நாதியற்று ஒர் நாங்கூழ்ப் புழு போல இங்கு தவிக்கிறேன். அப்புழுவேனும் மண்ணுக்கு நன்மை பயக்கும்; என்னால் என்பயன் சொல்லிடு நீ! யாவையும் உன்னிடம் மனது மறைக்காமல் உரைத்திட ஆவல்; யாது உரைப்பது? நீண்டு கடந்த காலத்தில் யானுற்ற துயரெல்லாம் உரைப்பதாயின் ஒர் பேனா போதுமா? இல்லை நூறாயிரம் மைப்புட்டி போதுமா? நதி போல் வரும் தமிழை நினக்காக எழுதுகிறேன், கேளாய்! நான் உனக்கு மட்டும் நனி நல்லன், உன்னிடம் பொய் சொல்லுதல் ஏலாது, நின் மனம் மறைக்காத மாண்பினோய்! எவையெவை யான் செய்யவேண்டும் என நினைப்பினும் அதற்குப் பல தடைகள் வருவது காணாய்! நீயும் நானும் மன்றற் கோலத்திலமரும் அந்நாள் என்று வருமோ என எண்ணியிருக்கிறேன்; இவனென்ன மன்றலை மிகக்கடிதாய் விரும்புகிறான் என்று என்னை நினைத்துவிட வேண்டாம், நம்மைப் பிரிக்கும் எவ் இடரும் ஆண்டு இருக்காது; ஆயினும் அதன் பின் நம் காதல் நனி*

*பெருக வேண்டும்; இன்னுமின்னும் பெருகவேண்டும் எதைஎதைக் கூறுவன் யான்? என் பேச்செல்லாம் இப்பேனா பேசுகையில் நான் என் செய்வேன்? இயற்றமிழ் முதலான முத்தமிழில் பாக்கள் இயற்றி நம் காதலைப் பாருக்குச் சொல்லிவிட முயன்றாலும் அதைச் செவிமடுக்க யாருக்கும் நேரமில்லை; அதனால் அவர்கட்குப் பயனுமில்லை, அதனாலென்? யாரும் கேட்கவில்லை எனக் குயில் கூவாமலா போய்விடும்? என் எழுத்து எல்லாவற்றையும் மறைக்காது நவிலும், முன்னம் சொன்னதே! என் எழுத்து நின்னிடம் எப்போதும் பொய் சொல்லாது; யான் உன்னுடன் கொண்ட இக்காதல் என்னை நன்மானுடனாக மாற்றிய மாயத்தை நீயறிவாயோ? நேருங்காலம் நோக்கி என்னெஞ்சம் தவித்துத் தவித்துத் தனல் காய்ந்ததை யான் மறக்கவும் முடியுமா? நின் துயர் யான் எழுதவல்லேன் அல்லன், ஆயினும் நீ என்னைப் போல் பல்பக்கம் எழுதிச் சலிப்பேற்படுத்த மாட்டாய் என்று எனக்குத் தெரியும், உன்றன் சொற்கள் குறியீட்டின் குத்தகைக்காரரர்கள்; அவற்றில் பொருள் தேடிக் கொண்டு புரிந்து கொள்வது என் கடன்; யாதுரைப்பேன்? நீ என் வாழ்வில் நேராது போயிருப்பின்? அஃதெண்ணிப்பார்க்கும் போதெல்லாம் என் உள்ளம் நடுங்கும் ஓசை உனக்குக் கேட்குமா? யாரிடம் சொல்ல? இத்தனை வரிகளை இலக்கியம் கற்கின்றவன் எழுதுகின்றான்; நீ கடவுள் எனக்களித்த வரமாவாய்! நானும் உனக்காகத் தவமிருக்கிறேன், நான் இஃதொழுதும்போது வானம் என்னுடன் சேர்ந்தழுவதை நீ பார்த்திருக்க நியாயமில்லை; என் கண்ணீரை அது சிந்திக்கொண்டிருக்கிறது. சிலருக்கு அது மண்வாசனை; சிலருக்கு அது தேவையில்லாத ஒன்று சிலருக்கு அது எரிச்சல்; சிலருக்கு அது பெருந்தவப்பேறு; நம் காதலும் அதுபோலத்தான்; நமக்கு அது தவப்பேறு; ஊருக்காக இவையெல்லாம் உரைக்கிறேன் என்று உள்ளாதே உயிரே! யான் உள்ளுவனவெல்லாம் நல்லனவாக நனி முயன்றுகொண்டிருக்கிறேன்; தமிழ் கூறும் நெஞ்சம் வற்றிவிட்டதா? என் நெஞ்சில் சுமக்கும் கவியூற்று காணாமல்*

*போய் விட்டதா? உயிரே! நின்றனுக்குக் கேட்டதை வாங்கித் தரக் கூடக் கையில் காசில்லாதவனாக இருக்கிறேன்; என்னை நம்பி உன் வாழ்வினைக் கொடுத்துள்ளாய்! கவிதை நிறைந்த என் வாழ்வில் காசு நிறையவில்லையே! என்செய்ய? காதலே! ஆசு நீக்கு மனத்தானிடம் காசில்லை; பின்னென்னை இப்பூமியில் பேணுவோராகிய என் பெற்றோர் என்செய்வர்? தம்முடைய விருப்பத்திற்கே என்னை ஆட்டிவைப்பர்; ஆடாவிட்டால் அனல் தகிக்கும் சொற்கள்; சில நேரம் அன்பும் பரிவும் உண்டு; ஒருபக்கம் நம்மன்றல் வேண்டி வரைவிடைவைத்துப்பொருள்வயிற்பிரிய வேண்டும்; இன்னொரு பக்கம் மதங்களால் மாசறு நெஞ்சங்களைப் பிரிக்கும் மாக்கள்; ஒப்படைவு எழுதுவது ஒதுக்கி என் உள்ளம் பல பக்கம் எழுதி அமர்ந்துள்ளேன்; என்ன முரண்பாடிது? எழுத்து பொதுவானாலும் எண்ணம் வேறாக இருப்பதால் என் எழுத்துக்கள் நிறையும் வேகம் கடிதன்றோ? எழுத்துப் பிழை மலியாது நலிந்திருக்கும் என நம்பி இதனை முடிக்கின்றேன்! வருந்தேல்! நலம் விளையும்!"*

***

**அகத்துள அன்பை**

**அகவலிற் பாட**

**இசைவினைக் கேட்டான்**

**இசைந்தது**

**அவனுக்காய் அப் பாவும்**

*"அகவல் யாப்பே! அகவல் யாப்பே!*

*யானென் காத லுரைக்கின் கேட்பாய்*

*அளத்துப் பன்ன வெள்ளுளர் வாழ்வை*

*அளவில் அன்பை அடக்குதி நீயே!"*

**பாங்கனோ இப்போது**

**பாங்குடை அகவலே**

**பாங்கனிடம் வியந்துரைத்தான்**

**ஈங்கவள் அருமையை**

***"பகருவேன் பாங்க! என்மொழி கேளள்!***

***அகன்றிடா நாணும் புகழுடை துணிவும்***

***ஒருங்கு பெற்றன ளிவளே;***

***நீரோ! தீயோ! மருண்டனன் யானே!"***

**கவிதருவன எவையெவையென**

**அகவலினிவ னக(ம்)மொழிந்தனன்**

***"பிரிவுங் கவிதரும், நேர்வும் கவிதரும்;***

***நினைவும் கவிதரும்; நிகழ்வுங் கவிதரும்;***

***நெருநற் கவிதரும்; நாளையும் கவிதரும்;***

***நெஞ்சிற் கவிதரும் நேய மிஃதே***

***இன்பும் துன்பும் இயல்பென உணர்ந்த***

***நற்றவ ளுள்ளந் தோன்றும்***

***ஞான ஒளியின் கூறா கிற்றோ?"***

**கணையெனத் தாக்கிய**

**பிரிவெனும் பிணியால்**

**இணைக்குற லகவலால்**

**வரிசில வரைந்தான்**

***"கண்ணி னோக்கமும் காத லேக்கமும்***

***இன்பும் துன்பும்***

***இயல்பென் றாலும்***

***நேருங் கால மெண்ணிக்***

***காக்கு மெந்தம் நெஞ்சம்***

***உணர்ந்த திதையே! உய்வெமக் கென்றோ?"***

***

**அன்றொருநாள்**

**கருநேமியுடை பெருந்தகரப்பெட்டியினுள்**

**காலதர் இருக்கை தன்னில்**

**காதலன் அமர்ந்திருந்தான்**

**காதலியோ**

**பேருந்துக்காகவும்**

**பேரன்பிற்காகவும்**

**ஒருசேரக் காத்திருந்தாள்**

**காத்திருந்தவளோ**

**காலதரருகிருந்தோனைக் கண்டிலள்**

**காலதரருகிருந்தோனோ**

**காத்திருந்தவளைக் கண்டனன்**

**கண்டு தணிந்தன காணிய கண்கள்**

**பேசத் துடித்தன நெஞ்சொடு நாவும்**

**ஓடத் துடித்தன ஒரிரு கால்கள்**

**ஆனால் தடுத்தது அவன்றன் நேயம்**

**"நானும் அவளும் நேர்வது காண்போர்**

**பெயர்பு பெயர்பு காணின்**

**பெருகும் அலரே; பின்பல நிகழும்**

**ஆதலால்**

**பொறுப்பமித் துயரை**

**இறுதியி லிடரழியும்"**

**என்று நினைந்த அவனோ**

**நகரும் எஃகெருமையுடன்**

**அகன்றனன் அவ் இடத்தினின்று**

**மூடிமகுடம் இறக்கிய பேனா**

**இவனுக்காய்த்**

**தாளில் கூர்சிரம் தேய்ந்தெழுதியது**

***"ஆற்றேனெனில் கவிதை யூற்றாய்வரும் - மனதி***

***லாற்றாமையின் மொழியில் வாட்டம்மிகும்***

*இற்றைதினம் எனது நற்றோழியும் - உயிரில்*

*உற்றோளுமாம் நினையங் கேநோக்கியான்*

*நேற்றேநினை விழியும் நோக்காமையாம் - கொடிய*

*கூற்றந்தனை நொடியி லேவென்றனன்*

*காலம்வரும் இனிய நின்றன்முகம் - மனதி*

*னாழத்தினில் பதிந்து பாவெங்கிலும்*

*காதல்மிகுந் தழகுப் பூக்கள்மலர்ந் - துளத்தி*

*லோதல்எலா முனது பேரென்னவே*

*யாதுங்கதைத் திடநன் னேரம்பெறா - துளமும்*

*போதுன்னையே நினைந்து ஏக்குற்றிரு*

*கண்ணில்உனைப் பதித்தி யான்வந்தனன் - கவிஞ*

*னெண்ணத்துள வனைத்து மித்தாளிலே!"*

***

பிரிந்திருக்கிறோம் என்ற

பெருந்தவிப்பிலும்

பிரித்து விடுவார்களோ என்ற

அச்சத்திலும்

**மனமானது**

**மாறி மாறி**

**வெந்து கரிந்து கொண்டிருக்கிறது**

**அன்பும் துன்பும்**

**காதலில்**

**இருவர்க்கும் சமமானது**

**முன்னது மிகுந்தால்**

**சொல்லி இரட்டிப்பாக்கலாம்**

**பின்னது மிகுந்தால்**

**சொல்லிப் பாதியாக்கலாம்**

**ஆறுதலால் அல்லல் தணிக்கலாம்**

**தனக்கென்று ஒருயிர்**

**தன்னலம் நோக்காது**

**கண்ணீர் சிந்திக்**

**காத்திருக்கும் காதலுடனென்ற**

**அந்தவோர் எண்ணமே**

**அக்காதலினை**

**வைரத்தைவிட உறுதியாக்குகிறது**

**அன்பு செய்யும் உறவாகவும்**

**நண்பு கொண்ட தோழமையாகவும்**

**கேளிர் ஒருவர் கிடைத்துவிட்டால்**

**காலின் கீழே உலகமெல்லாம்**

**நெஞ்சு தேற்றவும்**

**விஞ்சி நிற்கும் நேயமறிவுறுத்தவும்**

**அஞ்சல் தவிர்ந்து அவன் துணையாளுக்கு**

**’அஞ்சேல்’ என்று ஆறுதல் கூறவும்**

**கெஞ்சி நின்றால் கீழென ஏசும்**

**வஞ்ச உலகினை நோக்கி உரைக்கவும்**

**செஞ்சொ லாளன் செய்தனன் கவிதைகள்**

***”இம்மரம்***

***தண்ணீர் ஊற்றியா வளர்க்கப்பட்டது?***

***இதன் வேர்களைப் பாருங்கள்***

***தீப்பிழம்புகள் தீண்டித் தீண்டி***

***வடுக்கள் உண்டாகியிருக்கின்றன***

***தீயருந்தி வளர்ந்த மரமிது***

***உங்கள் இரும்புக் கோடாலிகளை***

***உருக்கிவிடும்***

***நெருப்புமரம்***

*யுகம் யுகமாய்*

*இதனை வெட்ட முயற்சித்த கைகளைக்*

*கரைத்துத்*

*தன் சைலத்தையும் புளோயத்தையும்*

*நிரப்பிக்கொள்கிறது*

*இது*

*எல்லாக் காலத்தும்*

*எல்லா இடத்தும்*

*ஏன்?*

*பரிமாணங்களைக் கடந்தும்கூடப்*

*பரந்திருக்கக்கூடும்*

*மழைக்காக ஏங்கும் இம்மரம்*

*ஒற்றைத் துளியில்*

*உயிர் நனைக்கும்*

*மழைக்காக*

*மீண்டும் அழல்... அழல்... அழல்...*

*அவியாத ஒரு விண்மீன்*

*அங்கிருந்து பிறக்கிறது ஆற்றல்*

*ஆயுள் முழுவதும்*

*ஆயுள் முழுவதும்*

*ஆகாயத்திலும்*

*மண்ணில் வாழும் மரத்தின் ஒவ்வோர் அணுவும்*

*இதே போல் மரங்களை உருவாக்கும்*

*இரும்புக்கரங்களே!*

*உம்மிரு கரங்களால்*

*எம்மைக் கட்டியணைத்து*

*ஏற்றுக் கொள்ளுங்களேன்!*

*உம்மோடு போரிட விரும்பவில்லை*

*தழன் மரம் தண்மரம் ஆகவும் வழியுண்டு*

*எங்களை வெட்ட எண்ணாதீர்கள்*

*முடியாது...*

*உங்கள் வீண்முயற்சிகளுக்குக் கூலியாக*

*வேதனை(ச்) சுமந்தலையாதீர்கள்*

*

*என்னவளே!*

*காகிதங்களுக்காகக் காத்திருத்தல் வீண்! வா!*

*கைத்தோல் கிழித்துக் காதற்கவி புனைவோம்!*

*பூப்பாதைகளுக்காக நாம்*

*புதைக்கப்பட்டது போதும் - வா*

*முட்பாதைகளின்மேல்*

*பீடுநடைபோடுவோம்*

*'மதமூறு' சினக்களிறுகளின் கால்களில்*

*கழைச்சிலாம்புகளாக*

*உறுத்துவோம்*

*வா! இனித்*

*துணிவுக்குத் துணையாவோம்!*

*ஒரு துளி விடமெனினும்*

*பகிர்ந்துண்போம்*

*அஃது அமிழ்தாவதைப்*

*பிறர் அறிய வாய்ப்பில்லை*

*காலத்திரையில் நாமே*

*நிறம் பல நிறைப்போம்*

*செங்குருதி சிவப்பாகட்டும்*

*வானுரித்து நீலம் செய்வோம்*

*சூரியப்பழச்சாறு பிழிவோம்*

*நிலவு கொண்டு*

*கோலிகுண்டு விளையாடுவோம்*

*உண்மைகள் மட்டுமே*

*நம்மில்*

*உயிர்வாழ இடங்கொடுப்போம்*

*நீரில்லையா?*

*நீறுபூத்த நெருப்பள்ளிப் பருகுவோம்! - வா!*

*காட்டு நெருஞ்சிகளைக்*

*குத்திக் கிழிப்போம்*

*வசைகளை இசையாகக் கொண்டு*

*நாம் மெட்டமைப்போம் - வா!*

*ஆனால்,*

*இந்த உலகுக்கோ*

*நம்மிசை கேட்க அருகதையில்லையே!*

*உலகின் கோடிக்கணக்கான கண்களுக்கு*

*நாம்மட்டும்*

*பொருள்புரியா ஓவியமாகத் தெரிவோம்*

*பொருள் புறம்போகினும்*

*அறத்தை அகனமைக்கலாம்*

*இன்பத்தை எல்லை மீறாமல்*

*கண்ணொடு கண்ணினை நோக்கி*

*உள்ளப் புணர்ச்சியால்*

*உயர்நிலை எய்தலாம் வா!*

*விழியற்றவர்களுக்காக*

*நாம் அழுவது*

*வீணாக்கும் கண்ணீரை*

*செவியற்றவர்களுக்காக*

*நாம் அழுவது*

*காலவிரயம்*

*புலனில் சமூகப் பொம்மைகளின் முன்பே*

*நாம் உயிர்பெற்றுலவுவோம்*

*ஆடைக்காய்ப்*

*பட்டுப்பூச்சிகளையும்*

*'சுட்டுக்' கொல்லும்.*

*சுயநல உலகமிது*

*நாம்*

*கோள்கடலாக மாறாவிடில்*

*நிலத்துத் தத்தளிக்கும் கயல்களைக்*

*காப்பாற்ற இயலாது*

*நின்னை*

*என்னோடு சேர்த்து*

*இடர்களிற் சிக்க வைத்துக்கொள்வதில்*

*எனக்கு விருப்பமில்லை என்றாலும்*

*இக்கவிதை*

*நம் நெஞ்சில்*

*குத்தப்படும் ஈட்டிகளின்*

*முனை மழுங்கச் செய்யும்*

*வா!*

*அவற்றைப் பொசுக்க*

*நாம் தழலாவோம்*

*வாழ்க்கைப் போர்க்களத்தில்*

*மிதிபடுவன*

*முட்கள் மட்டுமல்ல*

*பூக்களும்தான்*

*நம்மை முள்ளாகக் கருதுபவர்களை*

*நஞ்சொல் உறுத்துமே என்றுகூட*

*நெஞ்சம் சிறிது வருந்தும்*

*சிறுமென் கம்பிகள்*

*யாழில் இணைக்கப்பட்டு*

*மீட்டப்படுகையில்*

*அதிர்வுறும்*

*அஃது இசை*

*அவையே அறுத்தெறியப்பட்டுவிட்டால்...?*

*யாழுக்கன்று இழப்பு*

*யாழ்நரம்பறுப்பதால் இசை சாகுமென்னும்*

*இப்படிப்பட்டவர்களை*

*எத்தனை முறை ஏசுவது?*

*எனக்கும்*

*என் போல் பற்பல கவிஞர்களுக்கும்*

*இவர்களை எள்ளி எள்ளிச்*

*சலித்துவிட்டது...*

*இருட்டுக்குள் அடைந்திருந்து*

*வெளிச்சத்தையே சிந்தித்துக்கொண்டிருக்கிறேன்*

*

*நான்காம் பரிமாணத்தைப்*

*புரிந்து கொள்ள இயலாமல்*

*அதிலேயே வாழ்வது போன்ற*

*ஒரு பிரமை*

*’விடு’முறைகளால்*

*முறை விடாத நான்*

*துன்பப்படுகிறேன்*

*யானையில் வால்பிடித்து*

*யானை மெலிந்தது எனச் சொன்ன*

*யாரோ சிதடரின் சொல் கேட்டுப்*

*பேருருவைச் சிறியதாக்குகிறார்கள்*

*காதல்*

*மனக்குப்பிக்குள் அடங்கிவிடும் கடலென்று*

*இவர்களுக்குத் தெரிய வாய்ப்பில்லை*

*தீயையே செதுக்கிச் செய்த*

*சிற்பம் எம் காதல்*

*இதைக் காணப்*

*புறக்கண்ணோ - ஏன்*

*அகக்கண்ணோ கூடப் போதாது*

*கண்களைத் தொலைத்துவிட்டுத்தான்*

*காதல் செய்தோம்*

*கண்களிருந்திருந்தால்*

*காமம் தான் நிகழ்ந்திருக்கும்*

*புலன்களைத் தவறி*

*எங்கோ விட்டு விட்டோம்*

*உயிரிரண்டு கலந்த பின்*

*உள்ளுணர்வுக்கே வேலை*

*பணச்சாணி போட மட்டுமே*

*அறிவைப்*

*புண்ணாக்காகத் தின்னும்*

*செக்குமாடுகளும்*

*யானைக் கூட்டத்தைக்*

*கசையடிகளால் கட்டுப்படுத்தும்*

*பிரம்படி பிரபுக்களும்*

*இருக்கும் வரை*

*காதல் என்பது*

*கற்பனை தான்*

*அடைய முடியாத*

*இலட்சிய வாதம்தான்.*

*ஆழ்ந்த சிந்தனைகள்*

*அச்சு பிசகக்கூடாத கணக்குகள்*

*நான் சோதிடம் பார்க்கவில்லை*

*'நே'திடம் பார்க்கிறேன்*

*'கோள்'களின் சுழற்சி*

*எம் வாழ்வில்*

*வளர்ச்சியையும் வீழ்ச்சியையும் ஏற்படுத்துமென*

*எண்ணவில்லை*

*சாத்தியக்கூறுகளையும்*

*சாமானிய எண்ணங்களையும்*

*சாமர்த்தியத்தையும்*

*சந்தர்ப்பங்களையும்*

*சந்திப்புகளையும்*

*சொற்கோர்ப்புகளையும்*

*சுயசிந்தனையையும்*

*சோதனைகளையும்*

*சகலங்களையும்*

*சிந்தித்திருக்கிறேன்*

*மதக்கோட்பாடுகளுக்கிடையில்*

*மானுட மனங்களின் புரிதல்*

*மறுக்கப்படுமா?*

*சாதிகளின் சதிகளால்*

*சாம்பலெனச் சிதையுமா?*

*ரூபாய் நோட்டுகளின் மதிப்பிழப்பால்*
*செல்லாப் பணமாக ஆக்கப்படுமா?*

*இப்படி எதுவும் நிகழாது*

*குறிஞ்சியில் தொடங்கியது*
*முல்லையில் வலுத்தது*
*நெய்தலில் புலம்பியது*
*தும்பையில் பொருது*
*வாகை சூடும்*
*பாலை நிலத்துப்*
*படர மாட்டோம் என*
*எண்ணுகிறோம்*
*காலம் பதில் சொல்லட்டும்*

*எதார்த்தங்களும்*
*ஏக்கங்களும்*
*எதிர்பார்ப்புகளும்*
*ஏக இறைவனே பொறுப்பு!*

*படித்த திமிரென்பார் சிலர்*
*வாலிபக் கிறுக்கென்பார் சிலர்*
*புதைகுழியின் வரவேற்பென்பார் சிலர்*

*தங்களின்*

*பரந்த மனப்பான்மையின்மைக்குப்*

*பாவம்*

*இவர்கள் என் செய்வர்?*

*இரு உடல்கள் இணைய*

*இருட்டு போதும்*

*இரு உள்ளங்கள் இணைய*

*ஒளி தேவை*

*உங்களுடைய*

*கவச குண்டலங்களை*

*அவ்வளவு எளிதாகக்*

*கழற்றி விட முடியாது*

*ஓ!*

*எஜமானர்களே!*

*இந்த அடிமைகளை*

*இவர்களிடமே*

*உரிமைவிட்டால் தான் என்ன?*

*சிதைமேடையிலும்*

*புதைகுழியிலும்*

*போட்டெடுத்த எம் பிணங்களை*

*எந்தக் கைகளில்*

*பிடித்துக் கொடுக்கப்போகிறீர்கள்?*

*மனதை ஒரிடத்தும்*

*உடலை ஒரிடத்தும்*

*ஒப்படைத்துவிட்டுப்*

*பேயாக அலைந்தால் தான்*

*பெருமையோ?*

*என் கவிதைகளைப்*

*புரிந்து கொள்ள இயலாத எவராலும்*

*என்னையும் புரிந்து கொள்ள இயலாது*

*என்னவளையும்*

*என் நண்பர்களையும் தவிர*

*தங்கள் பேரன்பைத் தள்ளித்*

*துள்ளாட்டம் போட விரும்பிலேம்*

*தங்கள் செவிகளோடு*

*சிந்தையையும்*

*திறந்து வையுங்கள் என்றுதான்*

*விண்ணப்பிக்கிறோம்*

*தயை கூர்ந்து*

*இதையும்*

*எங்கிருந்து கற்றாயென்று*

*வினாத் தொடுத்துவிடாதீர்கள்!*

*அது*

*பிறந்த குழந்தையை*

*அழுவதை எங்கிருந்து கற்றாய்?*

*எனக் கேட்பது போலவும்*

*மீன்களிடம்*

*நீச்சலை எங்கிருந்து கற்றீர்?*

*எனக் கேட்பது போலவும்*

*மயில்களிடம்*

*நடனத்தை எங்கிருந்து கற்றீர்?*

*எனக் கேட்பது போலவும்*

*குயில்களிடம்*

*பாடலை எங்கிருந்து கற்றீர்?*

*எனக் கேட்பது போலவும்*

*பொருளற்ற கேள்வியாய்ப் போய்விடும்*

*பயனில சொல்லாமை மட்டும் அறமன்று*

*அறிந்தன வினவாமையும் அறமே!*

*எங்களையும்*

*மானுடர்களாகக் கருதினாலேயன்றி*

*காவுகொடுக்கப்படும்*

*விலங்குகளின்*

*மரண ஓலமாகத்தான்*

*எம் குரல்*

*நும் காதுகளில் விழும்*

*கண்ணாலே காணாத உயிர்*

*எங்குச் செலின் என்?*

*இறைச்சியோ*

*உண்ணப்பட*

*ஆயத்தமாக இருக்கும்*

*ஒரு நாள்*

*நீதியைப் போல்*

*காதலும் அழிந்துபோம்*

*என்பவர்கள் கேட்கட்டும்*

*அவர்களுக்காகத்தான் இது*

*அநீதிதான் அழிந்துபோம்*

*காமம்தான் அழிந்துபோம்*

*மெய்க்காதல்*

*சுடச்சுடரும்*

*சுட்டாலும் வெண்மை தரும்*

*ஏனென்றால்*

*உண்மை அழியும் நாள்*

*ஒரு போதும் இல்லை…”*

***

**இவர்களுளத்துறை காதல்**

**இல்லம் தெரியின்**

**என்னா மென்னும்**

**எண்ணமெல்லாம்**

**வெள்ளைத் தாளிலே**

**வெள்ளை யாப்பிலே**

**யாத்தான்**

**இயற்சீரையும் வெண்சீரையும்**

**வெண்டளையால் கோத்தான்**

# பெருநேயக்காலம் 2

## இறை வணக்கம்

**கற்றிடிச் செந்தமி ழென்றெனக்குச் சாற்றியுங்**

**கற்பனைச் சாற்றினை நெஞ்சிலே ஊற்றியும்**

**நற்றுணை யாகிஇவ் வாழ்வெனக் கீந்தநீ**

**குற்றமில் பாவரந் தா.**

## தமிழ் வாழ்த்து

**கேட்குஞ் செவிக்கினிதாய்ப் பேசத் திகட்டாமல்**

**ஆட்கொண்டாய் என்னை அருந்தமிழே! - வேட்பேனே**

**நின்னாற் புகழ்பெற்று நானிலம் வாழ்த்திடவே!**

**என்றும் எனைப்புதுக்கு நீ.**

## என் குறள்(ரல்)

**1.சில்லோரின் சொற்கஞ்சி உள்ளத்தைப் பூட்டாது**

**சொல்லிட்ட நேய மிது.**

**2.வேதத் துளதெனப் பேதம் புகட்டுவோர்**

**ஓதுமி னிந்நூ லுணர்ந்து.**

**3.அறமிகு காதலு மன்பொடு பண்பும்**

**பெறற்கரிய வென்றி பெறும்.**

**4.இருணிறை நெஞ்சிலும் நல்லொளி பாய்ச்சும்**

**அருணிறைந் தோன்செயல் நேயம்.**

**5.தின்மையும் புன்மையுங் கொண்டதை நேயமென்**

**றெண்ணலுந் துன்பம் தரும்.**

**6.மனத்தினி லின்பொடு மாசறு நண்பா**

**லினிப்பது நற்காத லாம்.**

**7.காதலென் றோதினும் வெஞ்சினம் கொள்ளுவோர்**

**காண்பீர் அதிலுள மெய்.**

**8.கையறு காலத்தும் பொய்யறு நெஞ்சினில்**

**பெய்திடும் நேய மழை.**

**9. காதலும் நற்காற்று மொப்பன வாகினும்**

**உட்சென் றுயிர்தங்கு மொன்று.**

**10.நெஞ்சுகுக்குங் கண்ணீரை மையாக்கி யான்வரைந்தேன்**

**அஞ்சாம லெங்கள் மனம்.**

**1.கடந்த நேரம்:**

**இன்பொ டிருவிழி நோக்கிய காதலர்**

**அன்புமிக் கோங்கிட வோங்கிட வோங்கிடத்**

**துன்பறு நெஞ்சொடு தூய்மனத் தோர்களாய்**

**மன்பதை கொண்ட மகிழ்வனைத்தும் தம்விழியில்**

**ஏந்தியே நின்றனர்; கண்கொளாக் காட்சியே!**

**மாந்தர் மனத்திலே தோன்றிடுங் காதலே**

**வேற்றுமைக் புன்களை வேரறுக்க வல்லதாம்**

**காற்றினைப் போலவே காசினிக் கேயுரித்தாம்**

**மையல் புகாததன் மாண்புள காதலைத்**

**தையல் பெறினும் மிகமகிழ்வா ளீங்கேநல்**

**தோன்றல் பெறினும் அகமகிழ்வா னீங்கேள**

**ஆன்றவப் பேறதாம் காதற் பெறலறிதே**

**நேரங் கடந்தது நேர்வம் பிறகென்றே**

**காரம் கருவிழி சேர்ந்தது போலவள்**

**கண்கள் கலங்குவள்; கண்டிதைத் தாங்கிட**

**வொண்ணா தவனும் உவர்நீ ருகுப்பன்**

**பிரிவு பிறந்தது மாலையம் போழ்தில்;**

**எரியுங் கதிரவன் கோட்டின்பின் துஞ்சினன்**

**வான மிருண்டிட வெண்ணிலா மீண்டுமவ்**

**வான வெளியிலே ஊர்வலம் போகுதே!**

**மாண்புடை நற்செய லிஃதோஒ? அற்படு**

**மாலையே! தீயினைக் காதலர் நெஞ்சிலே**

**துன்புறு மாறு விதைத்தனை; ஈங்கிவர்**

**அன்பினி லேற்றம் வளர்த்தனை! சாத்துயர்**

**உள்ளே மிகுந்திட ஏங்குவ ராயினும்**

**வெள்ளத் திடையினில் மாட்டுவ ரேனும்**

**புயலிற் புகினும் உலகே படினும்**

**இயல்பி லெழுந்தஇந் நற்காதல் நீங்கார்**

**அகிலஃ தரைக்கவே நன்னாற்றம் வீசும்**

**உளிபடு கல்லே எழிற்சிலை யாகிடும்**

**நற்கனி கொள்மரம் கல்லடி பட்டிடும்**

**அன்னதே காதலும் ஏற்படுந் துன்பமும்**

**அந்தி பிரிப்பினும்; வேற்றுமை தீட்டுவோர்**

**புந்தி பிரிப்பினுங் காதலர் தன்மனம்**

**நொந்து வருந்துதல் தேவையே இல்லையே**

**சிந்திதங்  கண்ணீர் சொரிவதும் வீணேகொல்!**

**சிந்தை தனிலே தளராத நம்பிக்கை**

**சிந்தை புகுந்தே உயிர்நிறைத்த காதலைச்**

**சேர்த்துவைக் கும்,நல் உறுதிகொண் டோர்க்கேள**

**ஆர்த்த பலதுயர்கள் செந்தீமுன் காய்சருகே!**

**முத்தை எடுக்கக் கடலுள்ளே மூழ்கலும்**

**வித்து முளைக்க நிலத்துள்ளே ஆழ்தலும்**

**ஒல்லென் றருவிகற் பாறையில் வீழ்தலும்**

**அல்லதென் றெண்ணினே ஒல்லுமோ சொல்லிடே!**

**இல்லையே துன்பமில் வாழ்க்கையும்; தாரணியி**

**லில்லையே இன்பமில் வாழ்க்கையும் ; ஏரணங்க**

**ளில்லாத வாழ்வு மினித்திலது; காரண**

**மில்லா நிகழ்வும் புவியினிலே உண்டுகொலோ?**

**செம்பட் டுடுத்திய வானரிவை இப்போது**

**செம்பட் குயிலின் நிறமுடுத்த, தப்பாது**

**தோன்று மதியந் தனைநோக்கி இத்தலைவன்**

**தோன்று மனத்தெண்ண மெல்லா முரைத்திடுவான்.**

## 2.உயிர் சுட்ட வினா

**வானி லலைந்திடு மொண்மதீ! ஒண்மதீ!**

**வேனிற் பொழுதிலே வெந்திடும் பாறையைப்**

**போலச் சுடுகிற தென்னுயிர் நீயூஉம்**

**சாலத் துயரீ பருவரற் கேளாயோ?**

**முன்பென் வினாவுக் ககத்தொளி பாய்ச்சியோள்**

**என்மனன் நோகாம லோரிறை கூற**

**அவணவில் நல்லிறையில் யாஅுன் மகிழ்ந்தேன்**

**அலருரை ஊராரிந் நன்னெறியை ஏற்பாரோ?**

**கல்லாருங் கற்றாருங் காதலென் றோதிடின்**

**பொல்லாதா ராகிடக் கண்டேன்; நயமில்லாச்**

**சொல்லானற் காதலரைத் தூற்றுவர்; போற்றுவோர்**

**நல்லாளும் நானுமென் நற்றமிழு முள்ளோஒம்**

**சேற்றிலே கால்வைத்தா யென்பார் சிலரோஒ**

**கூற்றினுக் குன்னை இரையாக்கு வேனென்பார்**

**கூற்றினுக் கென்னை இரையாக ஆக்கிடினும்**

**மாற்றமில் லைஎங்கள் மாசிலாக் காதலில்**

**சாற்றுவர் சில்லோர் இறைவனிது கண்டாஅல்**

**மாற்றமில் வெந்நரகில் வாட்டுவன் நின்னையென்**

**றாற்றாமை யாலே யலறுவர்; நல்லிறைநீ**

**மாற்றமில் நற்காதல் வென்றிட ஆறுசெய்வாய்!**

**ஏற்றின னிவ்வுறுதி தன்னையென் னெஞ்சினி**

**லூற்றினை தூய பெருநேயம் அஃதெண்ணிப்**

**போற்றுவ னுன்னை யருளாளா! பேரன்பா!**

**ஏற்றங்கொள் நம்பிக்கை நெஞ்சத்தே வைத்துள்ளேன்.**

**எந்நவையு மில்லாஇந் நேயத்தை நீயேதான்**

**எந்தையுந் தாயு மவடந்தை தாயும்**

**உளமகிழ்ந்து வாழ்த்த நலனிறைந்து காதல்**

**வளங்கூர் தமிழ்போல் தழைத்திடச் செய்வாய்!**

**அழுகிறே னென்றன் மனத்துளே யாரும்**

**அறிவரோ யென்றன் மனத்துள தெல்லாம்**

உளறுவே னென்பார் கவிபூக்கும் நெஞ்சு
களர்நில மென்பார் களவெனில் சீறுவார்

நல்லமிழ்த மோயா னருந்திய தில்லையே
சொல்லமிழ் தேயான் தமிழிலே யுண்டனன்
நல்லமுது மிக்கது நஞ்சென்பா ரித்தமிழ்ச்
சொல்லமுது மிக்கது நல்லின்பம்; கற்றலாம்

நற்றமிழ் தன்னின் சுவையுணர்ந்தோர் யாவரும்
பொற்குப்பை தந்திடு வேன்வா துறைமாறி
யென்றாலு மச்சொல் செவியிலேற் காமலே
பொன்தோற்கு மித்தமிழின் முன்னென்றே கூறிடுவார்

நண்ணிய செந்தமிழ்ப் பாட்டிலே நெஞ்சத்து
நண்ணிய காதலைச் செப்புமக் காலமஃ
தெப்பொருட் கொட்டினும் கிட்டாத தன்மைத்தே
முப்பொழுதும் நற்றமிழ்ப் பாப்புனைய ஒப்புவனே!

பூவாடப் பூமனத்தோள் உள்ளத்தி லாங்கேஎ
தீயாடப் பார்த்திருந்தாள் தீயவிக்குந் தண்சொன்
மனத்துள் மிகமொழிந்து துன்பறுப் பாளே
வனப்புறு செந்தமிழ் எண்ணத்தை ஒத

**“அணங்கியா னிங்கே அவனொடு நேர்ந்தேன்**

**வணங்கினே னுன்னைக் குமரா! கவிஞனோ**

**தன்னெஞ்சி லுள்ள துயருரைத்தான் நானுமங்**

**கென்னெஞ்சி லுள்ளியது சொல்லினள் நன்றஃ**

**தவன்மனத் தாறுதற்குச் சொன்னதோ ஈங்கே**

**இவள்மனத்து மவ்வெண்ணஞ் சால மிகுந்துளதே!**

**அன்னைமுன் தங்கைஎன் புன்னையின் நண்ணியோள்**

**தன்னவன் தன்னருகி னிற்கினுந் தங்கைமுன்**

**காதல ரோடு கதைத்தற்கு நாணினளென்**

**றோதிடும் போழ்திலே யுள்ளஞ் சிலிர்த்தது**

**காதலி லிஃதுயர் காதலாம் மற்றவை**

**யாதென யானறியே னென்ற னகமேஎ!**

**பொய்யில் காதலில் மூழ்கியோர் யாவரும்**

**மெய்யின் தொடுதல்கள் காதலென் றெண்ணிலர்**

**மெய்யைத் தொடுதலே மெய்க்காத லென்போர்கள்**

**பொய்ம்மை நெறியிலே போயொழி வார்களே!**

**தள்ளியே நின்றோஒம்; தண்ணிய சொற்கதைத்தோம்**

**உள்ளியே காதலை உள்ளம் மகிழ்ந்திட்டோம்**

எள்ளுவோ ரெள்ளட்டு மிந்நெறி யாண்டுமே
தள்ளித் தவிர்ந்தியாம் காதற் பழகிடோம்.

முள்வழியாய்த் தொல்லைகள் முன்னே விரியினும்
வள்ளற் றமிழ்க்கவி தன்னொடு சொல்லாட
எல்லாத் துயரமும் நில்லாம லோடிடும்
சொல்லா லுரைக்கவே சொல்லில்லை யின்பத்தை!

அல்லற் படுத்தியவ் வூழஃ தெமரையே
சொல்ல வியன்றிடா மீத்துயரி லாழ்த்தினும்
வற்றாத நெஞ்சூறு நேயப்பே ரூற்றையே
பெற்றோமே யாஅம்! நனியுவகை இஃதெண்ணி!

காதல்செய் வாதத்தில் தின்பேதம் தீசூழ்ந்து
நீதஞ்செய் போர்தன்னில் தன்னுயிரை மாய்த்திடுமே
காதல்கள் சேர்ந்தாலே யார்க்கோஒ துன்பென்றால்
பேதங்கள் மாந்தர்க் கிடையே வளர்ப்போர்க்கே

என்னெஞ்ச மென்னிடத்துக் கேட்டதோர் நற்கேள்வி
'இன்புடைத் திக்காத லென்றுநீ சொல்கிறாய்
துன்புசில் காதலினாற் றோன்றுதலு மேன்?' என்றாய்
அன்புடையென் னெஞ்சே! அதையும்நான் சொல்லுகிறேன்

**கண்ணியமில் சொல்லாடிப் பொய்மொழிந்து; காசெல்லாம்**
**தண்ணீரைப் போலே செலவளித்து; தன்னிணை**
**மெய்தொட்டு நேயமென் றஃதை அழைத்துச்செம்**
**மெய்க்காதல் தன்னின் சிறப்பழித் தின்னுமென்**

**நாவா லுரைக்க இயலாப் பலசெய்து;**
**நாவி லிரட்டை மொழிநவின்று; கூசாமல்**
**ஆசோ டலைவானைக் காதலித்த லஃதூஉம்**
**பேசுமொழி தன்னிலொரு பெண்ணைச் சுடுசொல்லால்**

**ஏசுபவ னின்பின்னே செல்வதுவும்; நல்லோன்போல்**
**பேசிப்பின் ஏமாற்றும் பொல்லானை நம்பிடலும்;**
**சூதின்பின் மாது மதுவின்பின் செல்பவனின்**
**காதல்விண் ணப்பத்தை ஏற்றிடலும்; சொல்லியதில்**

**எவ்வுளமு மேற்காத ஐயத்தைத் தீமனங்கொண்**
**டவ்வரிவை மேலேள கொள்பவனைக் காண்பதுவு**
**மாகிய வெல்லாமிக் காதலை வெந்நர**
**காகிடச் செய்வன கேட்டனையோ நன்னெஞ்சே!”**

**என்றவள் பற்பல எண்ணத்தி லாழ்ந்திடுவாள்**
**வென்றிடும் நன்னேயம் என்றங்கு நற்றலைவன்**

**தன்மன ஏட்டினிலே தாஅுன் பதித்தனன்.**

**தன்மனை தன்னிலே தாயுடன் தந்தை**

**களிப்புட னுள்ளத் தடங்கிய யாவும்**

**வெளிப்படச் சொல்வன காதிற் புகுந்திடவே**

**எப்பொருள் பற்றிஇந் நேரத்தி லிருவரும்**

**செப்பினர் என்றியான் கூறுவன கேண்மினே!**

## 3.தனல்விழு சருகு

**‘இங்கிவ னுக்கோர் சிறப்புடை நற்றுணையை**

**எங்கலைந் தோகண் டறிந்திடுவோம்? அவ்விறைவன்**

**வேதமோதி எந்நாளும் நேரம் தவறாமல்**

**வேதமளித் தோனை வணக்கஞ்செய்ம் பெண்ணையே**

**ஆதரவாய்த் தந்தருள்வான் இவ்வாழ்வில்’ என்றோத**

**காதுபட இச்சொல்லைக் கேட்குமவன் நெஞ்சத்தே**

**இப்போ திடியிடிக்கும் சேதஞ்செய் காற்றாடும்**

**உப்புக் கடனீரில் மூழ்கிவிட்ட மாந்தனைப்போல்**

**தத்தளிக் கின்றாஅுன் இத்தலைவன், நெஞ்சிடத்தே**

**‘இத்தனை காலமாய் என்னை வளர்த்தோர்கள்**

**என்னெதிர் காலத்தை இந்நெறியி லெண்ணியுள்ளார்**

**என்னெதிர் கால மிவர்மனம்போ லில்லாக்கா**

**லென்னென்ன வாகுமோ என்னிறையே? எங்காத**

**னன்னிலை நீயறிவாய்! தீவிழு காய்சருகாய்**

**என்மனம் ஆகுதே! ஏக்குநீ போக்கிடு**

**நன்னயக் காதலரை ஒன்றாக்கென் னிறையே!**

**யானுகுக்குங் கண்ணீர் கரைத்திடுமோ உன்மனத்தை?**

**யானுற்ற துன்பம் இளக்கிடுமோ உன்மனத்தை?**

**யாம்பெற்ற நற்காதல் கைகூட் டிறைவா!**

**யாம்பெற்ற நற்காதல் கைகூ டிடுமே!**

**நம்பிக்கை கொண்டதனா லஞ்சுத லீங்கில்லை**

**நம்பிக்கை கொண்டுள்ளோம் நல்லிறைவன் மீதேஎ**

**பொய்தீர்ந்த நெஞ்சங்கள் நண்ணிய நற்காதல்**

**நைந்தியாம் போம்நிலை யேனும் தொடருமே!'**

**ஈங்கிவனு மீன்றோரும் இவ்வா றுளத்தெண்ண**

**ஆங்கவளில் தன்னிலு மிப்பேச் சடிபடுதே**

**'நங்கை யிவளுக்கு நல்ல தொருதுணையை**

**எங்கே யிருப்பானென்றி[1] யாண்டியாம் தேடுவோம்?**

**நம்பெண் ணறிவுடையாள்; நற்சிந் தனையுடையாள்;**
**நம்மனம் நோகாமற் காக்கும் நெறியறிந்தாள்;**
**பூமென் மனத்தாளின் வாழ்வை நிறைக்குமோர்**
**மேனன் மனத்தானிப் பூமியி லெங்குள்ளான்?**

**சொல்லிலே நாணிழைந் தேயுரை யாடிடுவாள்;**
**இல்லத் தெனக்குத்து ணையா யிருந்திடுவாள்;**
**இன்னல் மிகுந்திடினே என்றன் மடிசாய்வாள்;**
**அன்னம் நிகர்த்தாஅள் நன்மை பிரித்தறிவில்'**

**என்றுதன் பெற்றோர்கள் சொல்லற் செவியுற்றாள்**
**தென்றல்தன் கண்ணீரின் வெம்மையைத் தாங்காமல்**
**தள்ளியே செல்வதையும் நல்லா லறிந்திலளே!**
**உள்ளியே தன்னிலையை உள்ளத்தி லெண்ணுவன,**

**"என்றன்மே லிவ்வள வன்புடையார்; நம்பிக்கை**
**என்றன்மேல் குன்றாது பேசுகிறார்; இந்நிலையில்**
**எவ்வாறி யானென்றன் காதலைச் சொல்லிடவோ?**
**அவ்வாறு சொல்லிட்டா லென்னென்ன ஆகிடுமோ?**

---

[1] ¬Ž§ g• [h˝ Oj ¬v e i q...

**என்றெண்ணும் போதென்றன் நெஞ்சத்தில் தோன்றுகிற**

**இன்னலாம் மின்னல்கள் என்னைத்தான் தாக்கிடுதே!**

**தன்னல மெண்ணிடவோ? ஈன்றெடுத்த என்னன்னை**

**தன்னல மெண்ணிடவோ? என்வாழ்வு நன்னிலையை**

**எய்திடி னென்னன்னை தன்னின் மனத்தில்லே**

**பெய்திடுந் தண்மழையே! பேதங்கள் பாராமல்**

**உள்ளம் நிறைந்தானை ஏற்றிடிலே மீமகிழ்ச்சி**

**உள்ளத் துறுதியது வெல்லுமிதில் மாற்றமில்லை!**

**உள்ளங்க லொன்றல்லே வாழ்வி னடிப்படையாம்**

**கள்ளங்க ளில்லாக் கருத்தொரு மித்தநிலை**

**நல்லதெங் காதலிலே நன்றாய் அமைந்ததனால்**

**அல்லல்க ளில்லை! அதிற்றோல்வி இல்லைகாண்!'**

**ஈங்கிருவர் பெற்றோரின் எண்ணத்திற் றீதில்லை**

**ஈங்கிருவ ரொன்றானோ ரெண்ணத்துந் தீதில்லை**

**ஏங்கிடுமீ ருள்ளங்கள் சேராது போய்விடினே**

**தாங்குதலில் லாத்துயர் வாழ்வாற் பயனிலையே!**

## 4.அறத்தொடு நிற்றல்

**தொன்னெறி மாறிற்றே தோழியு மீங்கில்லை**

**நன்னெறிக் காதலைத் தானே தனையீன்றோர்**

**தன்னிடம் சொல்லற்குத் தன்னெஞ்சைத் தான்தேற்றி**

**நின்றாள் நனிநல்லள் நேயம் புகன்றிட்டாள்,**

**“அன்னாய்! தவத்தோய்! எனையீன்று காப்போளே!**

**நின்னிடம் சொல்லுதற் கோர்செய்தி உள்ளதம்மா!**

**அன்னாய்! இதுகேட்டு நீயென்ன சொல்வாயென்**

**றென்னெஞ்சம் இங்கே பலஎண்ணம் கொள்ளுதம்மா!’**

**“பீடிகை நீட்டாதே சொல்வாய்! மலரன்னாய்!**

**நாடிநீ என்னிடம் வந்தாய்! மனத்துள**

**தெல்லாமுஞ் சொல்லலாம் பெண்ணே! நானுன்தாய்,**

**சொல்லாய் சொலவந்த சொல்லெல்லாஞ் சொல்லாய்நீ!’**

**“கொண்டேன் நறுங்காதல் ஒர்கவிஞன் மேல்நானே**

**கண்டேன் அவனைஎன் வாழ்வின் துணையாக**

**உள்ளம் நிறைந்தானை உங்க ளிசைவோடு**

**கொள்ளஇவ் வாழ்வில்லே நானும்மை வேண்டிநின்றேன்.**

**நண்ணியோ னோறிறைக் கொள்கையை; செந்தமிழ்ப்**

**பண்ணைப்போல் செம்மனம் கொண்டவன்; தன்னெழுத்தில்**

**யாவையும் நெஞ்சுள கூம்பாது கூறுவன்;**

**நேவையும் என்அண்மை வாராது காட்டுவன்;**

**என்துயரும் என்மகிழ்வும் தன்துயராய்த் தன்மகிழ்வாய்**

**நன்னய னெப்போதுங் கொள்ளுவன்; இன்னும்பல்**

**சொல்லுவள் யானெனினும் நும்முக வேற்றுமை**

**கல்லா னொருவனனி கற்றார்முன் நின்றாற்போல்**

**என்றன் உளத்தின்கண் ஓரச்சம் ஏற்படுத்தும்!"**

**"உன்றன் மனத்துள யாவும் உரைத்தனைநீ**

**நன்றேநின் வாதங்கள்! யாமளித்த நல்லறிவு**

**மின்றே செயலாற்ற லாயிற்றோ? நின்வாழ்வை**

**நீயே அமைப்பதெனின் யாமெதற்கு? யாமுனக்குத்**

**தீயே மிகுந்திருக்கும் வெந்நரகு காட்டுவமோ?**

**வீயான என்வாழ்வில் எத்தனையோ கண்டுள்ளேன்**

**தாயாகு முன்னுனக்கி யானுமோர் நற்கன்னி!**

**பெண்ணே! அறிகிலையோ? சொல்லிடே! உன்மனத்**

**தெண்ணங்கள் யாவும் அகவையின் கானல்கள்**

**முன்னே விரிந்துள்ள வையம் மிகக்கொடிது**

**மின்னும் பொருளெல்லாம் பொன்னல்ல என்னெழிலே!**

**கண்ணேபோல் காத்திருந்தோம் நின்னையாம் இன்றோநீ**

**எண்ணலல்லா எண்ணமெல்லாம் எண்ணி உரைக்கின்றாய்!**

**நண்ணுதனன் றன்றென் இனியவளே! நீயவனை**

**கண்ணாலே கண்டதெல்லாம் ஒர்கனவென் றெண்ணிவிடு**

**தண்டமிழைத் தன்னுளத்தில் நாளும் மிகஏந்திப்**

**பண்ணிறைந்த இன்கவிகள் செய்திடுவான் என்றனைநீ**

**தெள்ளுதமிழ்ப் பாவிசைக்கக் கேட்டிடலாம்; பின்அவனை**

**உள்ளுவதும் உன்மனத்தே நன்றன்றே! நெஞ்சினிறை!”**

**ஈண்டவளி னில்லத்தே இத்தனைசொல் லாடுங்கால்**

**ஆண்டவனி னில்லத்தே பொற்றமிழ்ப் பாவலனும்**

**தன்மனக்கோள் தாய்தந்தை நெஞ்சுபுகு வண்ணமுயி**

**ரொன்று பெருநேயங் கொள்வதனைச் செப்பினனே!**

**“நன்றுநும் ஆசைகள்! என்மனத் துள்ளுவன**

**என்னென்ன கேட்டீரோ?” “யாதுநீ எண்ணினை?**

**நேர்படப் பேசுதி!” “பேசுவன் யானதை**

**நீர்கேளீர் ஆர்பொறைகொண்டி[2]! யானோஒர் நல்லாளை**

**யென்னுயிரிற் கொண்டுளன், உண்மைசால் நன்மனத்தள்;**

**என்னுயிரி லொண்ணிறைத்தா ளன்பொடுநன் னண்புடையாள்**

**மென்தமி ழன்னவளு மாகிய நல்லோளை**

**என்ற னிருபெரியோ ரேற்பீரே! நன்னயளோ**

**குன்றக் குமரன் முதலாய பல்தெய்வம்**

**நன்றெனப் போற்றி வணங்குபவள்!" "என்மொழிந்தாய்?**

**என்னைநீ பித்தனாய் விட்டனையோ? புண்ணியநூ**

**னன்மொழிகள் அத்தனையும் கற்றும் பிதற்றுகிறாய்!**

**பெண்களைக் கண்ணோக் குதலும் பிழையென**

**எண்ணில் முறைநவில் வேதம் படித்துமா**

**நின்னெஞ் சலைவுற லாவது? நன்றில்லை!**

**நின்னுடை நெஞ்சம் நொடியிலே மாற்றுவை!**

**பாட்டிலே பெண்ணெழின் மீட்டற் றவறெனின்**

**வேட்டலோர் பெண்ணினை யெவ்வழி? அச்சமில்**

**கன்றுநீ! காசினி தன்னிலோர் பேரிருள்**

[2] ¬Ž§ g• [h″ Oj ¬v e i q…

**சின்னதைப் பேருரு வென்றும் புரட்டிடும்**

**காணாய்நீ! செங்கவிதை நற்றமிழில் பாடிடுவோன்**

**நாணாய்நீ? இப்படியும் செப்பினையே! நின்மேல்யாம்**

**கொண்டிருந்தோம் நம்பிக்கை நீயோஓ ஒர்நொடியிற்**

**சுண்டிவிடச் செய்துவிட்டாய் அத்தனையும்! காரிகையைக்**

**கண்டவுடன் சென்றதுவோ நல்லறிவு வேறிடத்தே?**

**விண்டனைநீ எம்முன்னே நின்நல்லாள் தன்பெருமை!**

**தெண்டிரை யாழ்ந்தவனும் மீள்வானே இக்காதற்**

**கொண்டவன்தான் மீள்வதில்லை யாதுரைக்க**
**மற்றினியாம்?"**

## 5.தன்னிலை மொழிதல்

**பெற்றோர்க ளிவ்வா றுரைக்க, கவிஞனவன்**

**சொற்பால் பலதுயரம் பொங்கிடச் சாற்றிடுவான்**

**"என்னைஇக் கூவில் பிறப்பிக்க; ஆசின்றி**

**நன்முறையில் சீராய் வளர்ப்பிக்க நும்முடை**

**காலத்தோ டின்னனவும் ஈந்தீரே! இப்பெரிய**

**ஞாலத்தே நல்லீரே! மையில் பெருநேயம்**

**மெய்யா யுணர்ந்தனன், யானந்த அன்பின்றேல்**

**உய்யே னிருமையும்! பொய்யன்று பொய்யன்றெம்**

**உள்ளமுயி ரொன்றான மெய்க்காதல்; தாம்கொண்ட**

**கொள்கையால் கூறுபட்டுக் குற்றங்கள் வீசிக்கொள்**

**பற்பல மாந்தர்கள் உண்டித் திருநாட்டில்**

**குற்றமில் நேயத்தின் அத்தனை கூறுகளும்**

**முற்றும் பொருந்த லரிதினும் பேரரிது**

**பெற்றேன்யான் அத்தகு நேயத்தை; நன்னேயம்**

**விட்டுவிடல் செத்துவிட லொத்திடுமே; ஒரீரோ?**

**நட்டுவைத்த நற்செடியைப் பட்டென் றொடித்து**

**வளர்கென்று சொன்னாலும் நீரூற்றின் வாழும்**

**கிளையொடிக்கா தேஅதனின் வேரறுப்பி னச்செடிதான்**

**வாடி வதங்கித்தன் நல்லுயிரை விட்டிடுமே!**

**நாடிஒர் பேறொன்றை நாம்தவம் செய்திடினே**

**நீடு தவத்தின்பின் அப்பேறு கிட்டுமென்பார்**

**நீடு தவமெதுவுஞ் செய்த நினைவில்லை,**

**பேரிறைவன் ஈந்தான்நற் பேறேயென் னுள்ளத்துக்**

**காரிருளைப் போக்கி ஒளிநிறைத்தாள் அத்தகையோள்**

**நன்னேயம் நான்விடவுங் கூடிடுமோ? யாண்டுமில்லை!**

**துன்பங்க ளென்றுமுண் டிவ்வுலகில்; யாமிருவர்**

**எம்வாழ்வில் ஒன்றாதல் குற்றம்மோ? வெற்றீர்ப்போ**

**எம்ஆணத் தில்யாண்டு மில்லை!" எனஇவனு**

**மிங்கு பலசொல்லித் தன்னிலை யைவிளக்க**

**அங்கவ ளில்லத் தவளும் விளம்புவாள்**

**"கண்டேனே பல்லோரைக் காசினியிற் பொல்லாரை**

**பெண்ணென்றால் வல்லமையில் லாளென்றும் சொல்லிடுவர்**

**பெண்தாழ்த்தி ஆணுயர்த்திப் பேசுகிற பல்மாக்கள்**

**விண்கீழே உள்ளாரே ஆகிடினும் என்னவனோ**

**அவ்வாறோர் எண்ணத்தை நெஞ்சத்துங் கொண்டில்லான்**

**எவ்வாதை நானுறினு தன்வாதை யாயுணர்வான்**

**இன்சொல்லன்; என்னவனென் ஆவிபுகு காதலனாம்;**

**சொன்னிறைக்குந் தாளினிலே மெய்தவிர்த்து வேறெதுவும்**

**சொல்லாதான்; என்றன்மேல் எல்லையில் அன்புடையான்**

**நல்லானை நான்பிரிதல் வைரத்தை வாள்பிரிதல்**

**நன்னண்ப னாகினனென் னல்லன்ப னாகினனென்**

**முன்னில்லா னாகினுமென் உள்ளெல்லாம் ஆர்ந்தவன்**

**உள்ளன்பில் ஆசிலன்தன் உள்ளத்தே என்னையே**

**கொள்ளன்பன் தன்னையா னென்வாழ்விற் பெற்றனள்!**

**கூடிச் சிறுகதைகள் பேசிப் பயின்றிலம்யாம்**

**நாடித் தவமிருப்போம் நேரும் பொழுதினுக்கே**

**காதற் பிரிவுகளில் தேயா நினைவுகளில்**

**சாதற் பொறுத்தினிதாய் நேயம் வளர்த்திருப்போம்**

**யாதினி யானுரைப்பே னென்மனத் துன்பமெல்லாம்**

**மேதினி யோர்தனிலே யாவ ரறிந்திடுவார்?**

**போதென்ற னெவ்வமெல்லாம் காதில் விழுந்திருந்தால்**

**நீதமும் கண்ணீரை மிக்கே உகுத்திருக்கும்**

**பூதலத்தே என்னைப் புகுந்திடச் செய்தோரே!**

**வேதனை கேட்டும்நும் நெஞ்சஃ திரங்காதோ!**

**வாதங்கள் வேண்டிலள்யான் வான்போலே என்மனத்துள்**

**காதல்லை நுங்களுக்கே சாற்றின ளீங்கேஎ”**

## 6.துணிபுனக் கென்னை?

**ஈங்கிவ ளிவ்வா றுரைத்திடற் கேட்டபின்**

**தாங்கலல் வெஞ்சினம் நெஞ்சினிற் பாய்ந்திடத்**

**தேங்குதுன் போடுபல் கூர்நுதிச் சொல்லெஃகம்**
**ஆங்கவள் மீதி லெறிந்தது கூறுவன்**

**"யாண்டுநீ உன்மனத் தித்துணை அன்பினைப்**
**பூண்டனை வேறொரு கொள்கையன் மீதேஎ?**
**நீண்டது நின்னுடை ஒர்நொடி நில்லாத**
**மாண்புரை! ஆடவன் அத்துணை நல்லனோ?**

**போற்றினை நும்முடை காதலை! எம்நெஞ்சி**
**லேற்றினை காய்சினம்! நங்கையே! நின்னைச்**
**சுமந்த கருவறை தீயினில் வேக,**
**அமர்ந்தனைநீ மாற்றானை நெஞ்சினில்! நன்றன்று!**

**நீசெய்யும் செய்கைகள் ஒவ்வொன்றும் எம்நெஞ்சைத்**
**தீசெய்யும் செய்கைகள், ஏன்நீயும் ஒர்கில்லாய்?**
**நல்லானே யாகிடினும் நங்கொள்கை சேரானை**
**நல்லாளே நீயுன்றன் நெஞ்சத்தே ஏன்கொண்டாய்?**

**காணாயோ ஏனிங்கே நல்லார்க லில்லையோ?**
**சேணாகிச் சேரலல் பாதையைச் சேர்ந்தனை**
**வீணாக நின்மனத்தே ஆசைவ ளர்க்காமல்**
**பேணாயுன் உள்ளத்தை! பாழாக்கா தெங்கனவை**

**மூண்டதுன் செம்மையில் நெஞ்சத்தில் நேயத்தீ**

**மூண்டனள் உன்னம்மை நெஞ்சிலே செந்தீ**

**தாண்டினை வாசலை; வேண்டினை வேற்றானை**

**மீண்டனை யென்றிடில் ஈண்டியான் ஆறுவள்**

**வேண்டினை நீயுமுன் னாருயிர்க் காதலெனின்**

**மாண்டுபோ னாலுமே என்முகம் வேண்டாதே!**

**கேட்டதோ என்குர னின்செவி தன்னிலே?**

**வாட்டுதே நின்செய லென்னுயிர் யாவுமே**

**விட்டிடுன் நேயத்தை; இல்லையே னந்நலங்**

**கெட்டிடும்; சீரல எண்ணேஎல்! எண்ணேஎல்!**

**முட்டிடும் அன்பினைக் கட்டிட வல்லையேல்**

**எட்டுணைத் துன்பமும் உன்வாழ்வில் ஏற்படா"**

**திங்ஙனம் பற்பல தன்றாய் மொழியவும்**

**நங்கையோ கற்சிலை போலவே நின்றனள்**

**வெள்ளமாங் காதலைச் சொல்லணை என்செயும்?**

**உள்ளமார் காதலை விட்டிட லாகுமோ?**

**நல்லாள் தனைச்சுமந்த மெய்யிளை மெய்யன்பள்**

**சொல்லாற் றன்னிலை தானெடுத்துக் கூறிட**

**பண்ணேய் தமிழ்கற்கும் பாவல னில்லத்தும்**

**விண்ணளாவப் பன்மொழிகள் பேசித்தீர்ப் பார்கள்**

**“நெருப்பள்ளி நெஞ்செறிந்த பொல்லானே! சிந்தை**

**வருத்திடும் வண்ணம்நீ என்னென்ன கூறினை?**

**யாங்ஙனம் வந்ததித் தீநெறியில் செல்துணிவு?**

**ஈங்குனை ஈன்றவர் தேவையோ? இல்லையோ?**

**நீயேஉன் வாழ்க்கையைச் சீருற ஆக்குவையேல்**

**தாயான நானெதற்குத் தாதை உனக்கெதற்கு?**

**போநீயும் உன்வழியில்  வேண்டுவன செய்தொழிநீ!**

**போநீயும் எங்கேயோ கண்முன்னே வாராதே!**

**நின்னையாம் பேணிவளர்த் தெங்கள் இருவிழிக்குள்**

**நின்னின்பம் கண்டே மகிழ்ந்தனம் நீயோஒ**

**எங்கண்க ணீர்வடிக்கத் தீநெறியில் செல்கின்றாய்!**

**எங்க ளிருமனமும் நோகடித்து வாட்டுகிறாய்**

**மீசை முளைத்துவிட்டால் மண்பொம்மை மேல்கூட**

**ஆசை வளருமடா! நீகேளா யெங்கள்சொல்!**

**காசைப் பெருக்காமல் மண்பொம்மை யைக்கூட**

**ஆசைப் பட்டாலும்  வாங்க இயலாதே!**

**காணும் அனைத்துமே கானலின் நீரென்றே**

**காணுதி! இவ்வுலகில் ஏதுமே சொந்தமில்லை**

**பாருக்கே நன்று பகர்ந்திடும் நின்மதியில்**

**சீரற்ற சிந்தனைகள் தோன்றுவதும் ஏன்கொலோ?**

**பல்லிறை போற்றிடும் கொள்கையர் தம்மிடைச்**

**சொல்லரும் பேறென நீயொரு நங்கையை**

**நின்மனத் தேற்றதும் எங்ஙனம் கூறுக?**

**வன்மனத் தானே! அறிவுண்டோ? போயிற்றோ?**

**செய்யலல் குற்றத்தைச் செய்துநீ எம்நெஞ்சில்**

**வெய்யழன்  மூட்டினை! வெஞ்சினம் கூட்டினை**

**தையலை நீயும்  மறவா யெனினே**

**நைகுவை  உள்ளத்தே! நன்றாய்நீ சிந்திப்பாய்!**

**தப்பிது தப்பிது தப்பிது தப்பிதை**

**ஒப்பிடோம் ஒப்பிடோம் ஒப்பிடோம் ஒப்புகை**

**செப்பிடோம் செப்பிடோம் செப்பிடோம் செப்புதல்**

**விட்டிடே விட்டிடே விட்டிடே விட்டிடே**

**காதலை விட்டிடின் துன்பிலை நன்றுண்டு**

**காதலை விட்டிடின் எம்மிருவர் அன்புண்டு**

**காதலை விட்டிடின் இன்புண்டே எஞ்ஞான்றும்**

**காதலை விட்டிடின் யாவர்க்கும் இன்புண்டு**

**செய்யத் தொழிலில்லை கையிற் பணமில்லை**

**மெய்யில் வலுவுண்டா? உள்ளத் துரனுண்டா?**

**நம்பி வருபவளைத் துன்பின்றிக் காப்பாற்றும்**

**தெம்பும் உனக்குண்டா? தீர்க்கமாய்ச் சிந்திப்பாய்!**

**வம்பு வழக்கென்றால் வாரி இறைக்கத்தான்**

**செம்பொன் னகையுண்டா? சொத்து சுகமுண்டா?**

**மானமது கெட்டுவிட்டால் வாழுவதும் வாழ்வாமோ?**

**ஆனபெரு நேயத்தை இப்போதே விட்டொழிப்பாய்!”**

**இவ்வளவும் கேட்டபின்னும் காற்றடிக்கா நேரத்தில்**

**எவ்விலையும் ஆடாத நீண்டுயர்ந்த ஒர்மரம்போல்**

**இக்கவிஞன் நின்றிருப்பான்  தன்னுடைய உள்ளத்தே**

**முக்குளித்து மூச்சடக்கித் தேடிக்கொண் முத்ததனை**

**அக்கடலில் விட்டுவிட ஆணையைக் கேட்டவன்போல்**

**துக்கத்தில் மூழ்கித்,தீ  புக்குவிட்ட பான்மைபோல்**

**சுட்டமனந் தேய்வுறவே செவ்விழியில் நீரரும்ப**

**கொட்டியழ யாருமின்றிச் சத்தமின்றி நொந்திடுவான்**

**செவ்வானம் தீயாக அஃதிடைப் புக்கதிங்கள்**

**அவ்வானத் தீதணித்து ஆற்றுவிக்குந் தன்மைபோல்**

**கொண்ணேயம் நன்றேஎன் றுள்ள மறிந்ததால்**

**ஒண்ணேயம் என்றென்றும் விட்டிட ஒப்பிலர்**

## 7.வேற்றுமை மொழியேல்

**உள்ளம் உடைந்த , உயர்தமிழாற் பாப்புனைவோன்**

**உள்ளே உருக்கும் துயரொடு சாற்றிடுவான்**

**“எல்லை இகந்த அருளினைக் கொண்டவனை**

**சொல்லில் வடிக்க அடங்காத தூயவனை**

**கொள்கை எனும்பேர் கொண்டு சிறையிடல்**

**எள்ளத் தகுவதே! ஏதியான் சொல்லுவன்?**

**உள்ளதோ ஒரிறை பின்னேனோ பன்மதங்கள்?**

**உள்ளத் தகுவது முண்டோஒ இந்நெறி?**

**ஒன்றே குலமாம் ஒருவனே தேவனாம்**

**என்னும் நெறியை உலகோர் உளத்தமைத்**

**தெல்லா உயிரும் நம்முடை சொந்தமே**

**பொல்லா இகலினை ஒட்டுவ மென்றே**

**உறுதி எடுப்பி னுளதே மகிழ்வே!**

**இறுதி வரையில் பிரிவினை இல்லையே!**

**விண்ணுறை நாதனை வட்டத்துள் கட்டாமல்**

**தன்னுளே உள்ளன னென்றே உணர்ந்திடின்**

**வேற்றுமை போய்விடும்; பல்லோரைத் துன்புறுத்தும்**

**கூற்றமாந் தீநெறி மாந்தர்சொல் சாயுமே!**

**நம்முள்ளே நாம்பகைத்து நம்முதிரம் ஆறாக**

**செம்பினைத் தங்கமென் றேநித்த மெண்ணியே**

**எத்தனை சண்டைகள்? எத்தனை சண்டைகள்?**

**எத்தனை போர்களோ? எத்தனை போர்களோ?**

**புள்ளுக்குக் கோளுண்டோ? சாதியுண்டோ? தம்முளவை**

**கொள்கையால் கூறுபட்டு நின்றதுண்டோ? போர்செய்து**

**தங்குருதி மண்ணிலே சேரத்தான் விட்டதுண்டோ?**

**வெங்குருதி ஒட்டம் குளிர்ந்திட்டால் எல்லாரும்**

**எய்துவதும் ஒர்நிலைதான் ஏனதற்குள் பேதமெல்லாம்?**

**பொய்தவிர்த்த வேதமெல்லாம் ஒதுவ தன்பன்றோ?**

**ஒன்றுபட் டெல்லாரும் நல்லபடி வாழ்ந்திடத்தான்**

**நன்றுநவில் வேதங்கள்! நம்மிடையே வேற்றுமையைக்**

**கூட்டிடவோ? நன்னெறியைக் காட்டிடவே நன்மறைகள்**

**மூட்டிக்கொண் டோம்நாமே நம்மிடையே வேற்றுமைத்தீ!**

**சித்தரெலாம் செப்பினரே கேளாதோ நும்செவிகள்?**

**எத்துணைப்பேர் என்சொல்லித் தேற்றிடினும் வேற்றுமைகள்**

**நீங்காதோ? தாங்கில தென்னுள்ள மித்துயரை!**

**ஏங்குதே எல்லாரு மின்புற்றே ஒன்றாக!**

**நீள்விசும்பு போர்த்த நெடும்புவியி லெஞ்ஞான்றும்**

**தோளொடு தோள்சேர்த்து நல்லிணக்க மெய்திடவே!**

**நெஞ்சத்தே உண்மைகொள் நல்லன்பு சேர்வது**

**கொஞ்சத் திலுங்கொஞ்சம் பேர்களுள் நேர்வதுவாம்**

**அஞ்சித் தவித்தென்ற னாவிபோம் பேரஞர்**

**விஞ்சித் துடிக்கின்றேன் என்னிலை காணீரோ?**

**நெஞ்சைக் கிளந்தே என்னையீன் றோர்களின்**

**நெஞ்சக் குழப்பங்கள் நீங்கவே நானுமென்**

**செம்பொற் றமிழ்கொண்டு நானில மாந்தரே**

**தம்முள் பிணக்கின்றி வாழ்வழி கூறினன்**

**இன்னும் நுமர்நெஞ்சு சீருற வில்லையேல்**

**என்னை கிளக்குவன்? ஏழையேன் நானுமே?**

**மெய்கண்டு கொள்வதன்பேர் காதலன்று காமமாம்**

**செய்பிழை யாவினும் மாப்பிழை அஃதாம்!**

**முகங்கண்டு வந்ததன் றெங்காதல், நல்லீர்!**

**அகங்கண் டதுகொண்ட பேரன்பின் தோன்றியதாம்**

**காதற்குக் கண்ணில்லை என்னுஞ்சொல் மெய்தானே!**

**காதற்குக் கண்ணில்லை காமக்குக் கண்ணுண்டு**

**கண்ணில்லார் நல்லன்பால் கூடியதும் காணீரோ?**

**பண்ணான காதற்குக் கண்வேண்டாம்; அன்பொன்றே**

**உள்ளாகத் தோன்றுதலே  தேவை, நனிநேயம்**

**கொள்ளாமல் வாழ்வதுமோர் வாழ்வோ? பருவத்தால்**

**முட்டிவந்து மோதுகின்ற தூண்டலென் றெம்காதல்**

**கொட்டும் துயர்மழையில் தீச்சொட்டக் காத்திருந்து**

**நெஞ்சுள அன்பி னினைவிருத்தி எம்மனத்தில்**

**மிஞ்சும் தவிப்பெய்தி நேராமல் பேசாமல்**

**கற்பொ டிருவருங் கொண்டிட்ட மெய்க்காதல்**

**பொற்பு நிறைந்தது குற்றமெதும் இல்லையே!**

**கைப்பொரு ளில்லையென் கையிலே இப்போது**

**மெய்ப்பொருள் ஒன்றுண்டஃ தெங்காத லாதலால்**

**கைப்பொருள் சேர்ந்து மிடிமை ஒழிந்தபின்**

**கைப்பிடிப் போமிருவர், அன்றுவரை காத்திருப்போம்**

**செல்வத்தைச் சேர்க்காமல் சிந்தைகொள் காதலினால்**

**செல்வார்கள் சில்லோர் நெறிதவறி; யாமென்று**

**மவ்வாறு செல்லோம் நுமரிருவர் சொல்வேண்டி**

**எவ்ஆறு சென்றும் அறவழியில் செல்வங்கள்**

**சேர்த்திட்ட பின்னாலே சேர்ந்திடுவோம்; அஃதன்றி**

**ஒர்ந்திடலும் அல்லோம் உடன்போக் கெனுங்கிளவி**

**தேர்ந்திலம் அல்லேம் தேர்ந்தோம்; திரவியத்தின்**

**ஆர்புக ழெல்லாம்; அறநெறி விட்டிலோம்"**

**நல்வழியைத் தன்னில்லில் நல்லோன் உரைத்திருக்க**

**நல்லாளுந் தன்னில்லில் தன்னெஞ்சைச் சொல்லிடுவாள்**

**"உள்ளன்பின் முன்னாலே கொள்கைகள் செல்லாதே!**

**உள்ளன்பின் முன்னாலே எத்தடையும் நில்லாதே!**

**உள்ளன்பு மெய்யென்றால் சூழ்கின்ற துன்பெல்லாம்**

**வெள்ளத்தின் முன்னின்ற கூழாங்கல் ஒத்திடுமே!**

**கள்ளங்கொள் உள்ளத்தார் உள்ளத்தில் பேதமெனும்**

**முள்ளைத்தான் தைத்திட்டார் உள்ளொளியை நாமெல்லாம்**

**காணா திருக்கவே சூழ்ச்சி பலசெய்தார்**

**காணா இறைவனோ உள்ளத்தே உள்ளானே!**

**ஏனோ நமக்குள்ளே எண்ணிலாச் சண்டைகள்?**

**ஏனோ திருநாட்டில் இவ்வளவு வேற்றுமைகள்?**

**நாமோ நமையாய்தல் விட்டோம்; பிறர்சொல்ல**

**லாமோ அறிவுரைகள்? நல்லிறைவன் எம்மதத்தோன்?**

**உற்ற பதிலுண்டோ யாரிடத்தும்? தத்தமர்கள்**

**உற்ற மதத்திலே உண்டென்பார் ஆங்கொருசார்**

**ஒற்றை மதத்தவனாய்த் தானிருப்பின் அவ்விறைவன்**

**தற்கொள்கை சேராரை இன்னல்செய் வானதனை**

**ஏனீர் அறியாமல் உட்பகை கொண்டுள்ளீர்?**

**வானீரும் பெய்வதிலே வேற்றுமை பார்ப்பதுண்டோ?**

**வாழ நெறியாம்; நெறியொன்றே வாழ்வில்லை**

**வீழல்லேவீழ்த் தல்லே வெறியே! நெறியில்லை**

**கால முழுதும் கடுஞ்சண்டை செய்தேநாம்**

**ஞால முழுதும் குருதியன்றோ ஒடவிட்டோம்?**

**தேச முழுதும் மறைந்தார்கள் எத்துணைபேர்?**

**பாச உறவைப் பிரிந்தார்க லெத்துணைபேர்?**

**நீசப் பசியால் மறைந்தோர்கள் பல்லோரிந்**

**நீச வெறிக்குப் பலியானோர் எண்ணில்லார்!**

**தோன்றும் உயிரன்பே ஞாலத்தை வென்றிடும்**

**ஈன்று புறந்தந்தீர்! என்றன்சொற் கேளீர்**

**மதத்தின் பெயராலே எம்மன்பை நீரும்**

**சிதைக்க நினையாதீர்! செய்யலல் தீங்கை**

**உயர்ந்த பெருநேயம் கொண்டார்க்குச் செய்யேல்!**

**பெயர்ந்தக லாதேஎ எம்மன்பே என்றும்**

**நிறைபொருளார் தாமும் குறைபொருளார் தாமும்**

**இறைவனின்முன் ஒன்றே இதையறியார் பல்லோர்**

**கறைபடியா நேயம் கருத்தொருமை உண்டேல்**

**அறைபரிய இன்பம் மிகத்ததும்ப லாமே!**

**மனம்புரிந்தோன் தன்னை மனம்புரிவேன் அன்றி**

**மனப்பொருத்த மின்றேல் பிணம்போன்றாள் யானே**

**இனியுமும் நெஞ்சம் இளகாது போயின்**

**முனிவேனிவ் வாழ்வை மிகப்பேச வெய்யேள்யான்”[3]**

**தன்னுளங் கீண்டு நெருப்பூற்றும் போழ்தினும்**

**இன்னுயிர் பூண்ட இழுக்கிலாக் காதலை**

**விண்ணுக் குயிர்போக லானாலும் பேணுவமென்**

**றெண்ணத் துறுதிகொள் நல்லோர் முடிவெடுத்தார்**

**நாள்பல போயின நல்லாளை நல்லானும்**

**தாள்பதித்தான் நேர்கண்டி லன்.**

*******

**நினைத்துப் பார்க்கவே**

**நெஞ்சு நடுங்கிற்று**

**இவை மட்டுமன்று**

**இனையவும் நிகழலாம்**

**ஆதலால்**

**இல்லத்துத் தன் அன்பை வெளிப்படுத்த**

**இல்லை இது நேரமென்றுத்**

**தள்ளினான் தன் எண்ணத்தை**

**அப்போதைக்கு அவன்**

[3] ® – ″ † j š

## சாதாரியும் செவ்வழியும்

**பைந்தமிழ் மொழியில்**

**பாப்பல புனைவோன்**

**பாட்டுக்கொரு புலவன்**

**பாரதியைப் படித்திருந்தான்**

**கார்நீலக் கண்ணனை**

**வேரூன்றி உளத்தமைத்துக்**

**‘கண்ணன்பாட்’டெழுதிய**

**காலம்வென்ற கவிஞரைச்**

**சிந்தைசெய்தவன்**

**சிலிர்த்தனன் உள்ளம்**

**கண்ணனைப் பலஉறவாய்த்**

**தண்டமிழ் தனிலெழுதிப்**

**பண்ணிலே இசைத்திட்ட**

**பாவலனாம் பாரதிபோல்**

**வெண்மனம் கொண்டாளை**

**வண்டமிழால் நாமெழுதி**

**வெண்பாவாய் அகவலாய்**

**வாழ்தமிழில் வரைவமென**

**கோலினை விரல்பற்ற**

**தாளினை மடிசுமக்க**

**நான்குறவாய் நல்லாளை**

**நயந்தெழுதி அகமகிழ்ந்தான்**

***"என்னவள் பன்முகம்"***

***1.என்னவள் என்தோழி***

***i.செஞ்சொன் மொழியொடே என்சொல் செவியுறும்***

***தஞ்ச மடையினென் எல்லாத் துயர்களும்***

***எஞ்ச லெதுமிலா தன்றே அகற்றிடும்***

***பஞ்சின் நிறமனத் தாள்***

***ii.அன்பும் அருணிறை நண்பும் அதனுடன்***

***என்பு மெனக்கென ஈயும் பரிவுடன்***

***துன்பொன் றுறினதைத் தூசெனச் செய்குவள்***

***என்மேற் கிழமையு ளாள்***

***iii.தண்ணிய சொற்களுள் நுண்ணிய பல்பொருள்***

***எண்ணத் தினிலே புகும்படிச் செய்திடும்***

***வண்ண மறிந்தவள்; என்னைப் புரிந்தவள்;***

***உண்மை மிகக்கொண் டவள்***

## *2.என்னவள் என்மழலை*

*i.காணல் தவிர்ப்பீர்! பேசல் தவிர்ப்பீர்!*

*யாரும் என்னை; ஏனெனில்*

*யான்தனக் கென்றே இயம்பின ளவளே!*

*ii.மாயக் குழல்தோற்கும் மாயக் குரலால்*

*என்பேர் அவள்சொல்லி விளிக்க*

*அவ்வொரு நொடியிற் புவிமறந் திடுமே!*

*iii.வெண்வண் ணங்காள்! வெண்வண் ணங்காள்!*

*உண்மை யுடையவள் மனம்முன்*

*நிற்றலும் ஆகுமோ? அதனின்நீர் தூயரோ?*

*iv.ஆழியின் பிரிவெண்ணி அழுகிற கருமுகிலாய்ச்*

*சிறுபொழு தென்னைப் பிரியின்*

*அழுவா ளவள்துய ரென்மனம் பெறுமே!*

## *3.என்னவள் என்தாய்*

*i.தேன்புரை தமிழென என்மனன் யாவையும்*

*ஏற்பவ ளாயவள் திகழ்வதால்*

*போயின துயரே! வந்தன மகிழ்வே!*

*ii.தன்மன உச்சியில் என்னைஓர் ஆளாய்*

*வைத்தாள் அவளே! அவட்குச்*

*சேயா யிருப்ப தென்தவப் பயனே!*

*iii.அன்பொ டாறுதல் பற்பல கூறி*

*முன்செய் பிழைகள் மறந்தனள்*

*புண்ணிய மென்செய்தேன்? யானிவள் சேயே!*

*iv.வில்லோ சொல்லோ வீசி ஏசாள்*

*கல்லே யான என்னைச்*

*நல்லோ னாகச் செய்தாள், வாழி!*

### *4.என்னவள் என்கவிதை*

*i.மனத்துள யாவும் மறைக்கா துரைக்க*

*எனக்குள துணையிவ ளே!*

*ii.உண்மை தவிர்ந்தெதும் ஏற்காக் கவிதையாய்*

*யாண்டும் இவளுமு ளாள்?*

*iii.சிற்சில சொற்களில் பற்பல சொல்லுவள்*

*குற்றமி லாளென் கவி!*

*iv.உண்ணப் பசிமிகும் ஞானத்தின் தன்மைபோல்*

*எண்ணம் மிகுந்தா ளிவள்*

*v.மூப்பிலும் மூவா முழுதிவள் நேயமாய்*

*யாப்பிலே யாத்தேன் கவி!*

*****

**வேதத்தின் இயல்கற்றோன்**

**தன்னவளோ**

**வேதியியல் கற்கின்றாள்**

**என்று தெரிந்தனன்**

**முன்னொரு காலத்தில்**

**விருப்புடன் கற்ற**

**வேதியியல்**

**வேதனையோடு**

**வினைபுரிய**

**விளைந்ததொரு கவிதைப்பொருள்**

*“வினைபடு பொருளும்*

*வினைவிளை பொருளும்*

*இவையெனத் தெரியும்*

*ஆனால் இவ்வினை*

*நிகழ்வதி யாங்ஙனம்?*

*இதன்*

*வினையூக்கிகள் யாவை?*

*வினைநச்சுகள் யாவை?*

*இது நிகழ்வதற்கான*

*வெப்பம்,*

*அழுத்தம்,*

*ஆற்றல்*

*இவற்றின் அளவென்னை?*

*இந்த ஆய்வுக்கு*

*ஒரே ஒரு முறைதான்*

*ஆயுளில்*

*வாய்ப்பளிக்கப்பட்டுள்ளது*

*செய்முறை தெரியாமல்*

*யோசித்துக் கொண்டிருந்தால்*

*நேரம் போய்விடும்*

*காலம் கடந்த ஆய்வு முடிவுக்கு*

*'மதிப்பு' கிடையாது*

*ஆய்வுக்கு நெறிமுறையுண்டு*

*ஆய்வு செய்முறை?*

*இப்போது*

*ஆய்வுக்கூடத்தில் நிற்கிறேன்*

*செய்முறை தெரிந்தபின்*

*எழுதிவைக்கிறேன்*

*முடிந்தால் படித்துக்கொள்ளுங்கள்”*

*****

**கனித்தமிழ்த் தேர்வுகள்**

**காலப்புரவியில்**

**கடிது வந்துகொண்டிருந்தன**

**முல்லை உரி**

**நெய்தலுடையதாய் மாற**

**அகப்பொருள் பனுவலை**

**அப்புறம் ஒதுக்கி**

**‘அடியொடிபழந்தமிழ்க்கவி’ ஒன்று**

**அப்பொழு தியற்றினான்**

*"முறைவிட்டதால்*

*சிறைப்பட்டேன்;*

*செந்தமிழெழுதி*

*வெந்துயர் தணிக்கத் துணிந்தேன்*

*இப்பிரிவை முனிந்தேன்;*

*துனியுற, தூக்கம் தொலைந்தேன்;*

*கனிந்தேன்;*

*கசிந்துருகிக் கவிசெய்தேன்;*

*தணிந்தேனல்லன் தழல்;*

*அணிவித்தெழினோக்காநின்றேன்*

*என்கவிக்கணியெலாம்;*

*அவணவளணங்குற*

*இவணிவ னின்புற லெங்ஙனம்?*

*வணங்கினேன் இறையை நாளும்.*

*சுட்டேன் சொல்லால்,*

*ஒட்டியோர் உள்ளம்*

*வெட்டித்தனலெறிய எண்ணுவோஒரை;*

*பாட்டினால்*

*பாட்டெழுதும் ஏட்டினால்*

*ஒட்டினேன்;*

*காட்டினேன் மாட்சிகள்;*

*ஈட்டிய பைந்தமிழ்*

*மீட்டிநற் பாவிசைத்தேன்;*

*பூப்புனைந்தோய்! வாண்மனத்தோய்!*

*தீப்புகுந்து தீய்ப்பதுபோல்*

*நீநோவாய் ஆங்கே*

*ஈண்டிவனோ*

*யாப்பெழுதி எவ்விடரும்*

*இத்தாளி லிறக்கிடுவான்;*

*ஆண்டு நீ என்செய்வாய்?*

*நின்நெஞ்சு கொண்டதெல்லாம்*

*நீயெடுத்து மொழிதற்குத்*

*தக்கதுணை உண்டுகொலோ?*

*இக்கவிஞ னறிந்திலனே!*

*தாப்பினைப்போல்*

*தள்ளாடி ஊசலுற்றுத்*

*தத்தளிக்கும் இந்நெஞ்சு*

*கவிதையின்*

*கடல்புகுந்து கரையேறத்*

*தீர்ந்தனன் துயர்சிறிது;*

*தண்மொழி சொன்மொழி*

*வன்மனம் தன்னிலே*

*ஒண்ணிறைத்த தென்ன*

*ஒயாப் புகழ்பாடி*

*ஒண்மனளை வாழ்த்துவன்;*

*ஒண்மனளைப் பேறென்று*

*வண்மையுட னீந்த*

*வல்லோனையும் வணங்குவன்;*

*பருவரல் பாடுவோன்*

*பருவத்தேர்வுகள்*

*நெருங்கிவந்த ஞான்றும்*

*நெடுங்கவியெழுதி*

*நேரம்போக்காநின்றோன்*

*ஆங்கவள்*

*செய்தொழில் எண்ணி*

*சிந்தை முழுவதும்*

*செங்கவி புனைந்து நிரப்புவென்*

*ஈது*

*நெடும்பிரிவு*

*இராப்பகலாய் இடரீவதால்*

*இது நெடும்பிரிவு*

*இருவருக்கும் முப்பொருள் சிறக்க*

*இனிது துணைசெய்*

*கல்விபயில் காலமாதலாலும்*

*தித்திக்கத் தேர்வெழுதித்*

*திகழ்புகழ் பெறும் காலமாதலாலும்*

*இது நற்பிரிவு*

*நற்பேறே!*

*நீ வருந்தேல்!*

*மகிழுதி!*

*மனத்துயர் மழையீயல்*

*சிறகொடிந்து சிறுபுழுவாகும்*

*சிந்தை மகிழ்வுறு*

*சிற்றீயல்*

*பெருநெருப்பவிக்காது...”*

****

**பிரிவெனும் பெருஞ்சிறையில்**

**அவனுக்கு ஆறுதலளித்தன**

**வெள்ளைத்தாளும்**

**கறுப்பு மையுமே!**

**அவளிடம் சொல்ல**

**அனந்தகோடி அனந்தங்கள்**

**அடிமனத்துள் புதைந்திருந்தன**

**அவை**

**கவியெழுத**

**மனச்சுரங்கம் அகழ்கையில்**

**வெளிப்பட்டு**

**எழுத்து வைரங்களாய்க்**

**காகிதங்களில் சேகரிக்கப்பட்டன**

*“நெடிய துயரங்களின்*

*நீளமான பாதையில்*

*நெடுந்தூரம் வந்துவிட்டோம்*

*இனி*

*இனிமையின் மரத்தின்கீழ்ச்*

*சற்று இளைப்பாறுவோம்*

*வழியிலும் வாழ்விலும்*

*வருதுணை நீ*

*நீ*
*என்னுள்ளம் கண்டதாலும்*

*நான்*

*உன்னுள்ளம் கண்டதாலும்*

*நான் குழந்தையாக மாறுகிறேன்*

*மாசு மருவற்று வாழ*

*மீண்டும் சிசுவாகிறேன்*

*ஒளியின் வெள்ளத்தில்*

*உன்றன் மனஅுறையில் நான்*

*நம்மைச் சேர்த்துவைக்க*

*இவ்வாழ்க்கை ஏன்*

*இவ்வளவு துன்பப்படுகிறது?*

*நம்மை யாரும்*

*பிரிக்கவியலாதெனினும்*

*அஃது ஏதோ*

*அரைகுறையான எண்ணத்துடன்*

*அலைக்கழிகிறது*

*நம்மிடை*

*உருவான காதல்*

*உருவக்காதலன்று*

*உள்ளக்காதல்*

*நேயப்பெருமழையால்*

*பிரிவுச்சிறுதீ அவிக்கும்*

*கலையைக்*

*கற்றுத்தேர்ந்த நாம்*

*கவலை என்னும்*

*கற்பனை வலையை*

*அறுத்தெறிந்துத்தான் ஆகவேண்டும்*

*ஆழ்மனதைவிட*

*ஆழமான*

*ஓரிடம் உண்டெனில்*

*அங்கேதான்*

*நம் காதல் உள்ளது*

*அன்பைத் தேடி அலைந்தலைந்தே*

*என் ஆயுள் தேய்ந்துடுவிடுமோ என்று*

*அஞ்சியிருந்தேன்*

*புரிதல் இல்லா உலகில்*

*புழுவாகித்*

*தனலெறியப்படுவேனோ என்று*

*அஞ்சியிருந்தேன்*

*நண்பிலா வெற்றுறவில்*

*நலங்கெட்டழிவேனோ என்று*

*அஞ்சியிருந்தேன்*

*பற்றற்றார் பற்றைப் பற்றிப்*

*புண்ணியத்தில் போகலாமா எனக்கூட*

*எண்ணியிருந்தேன்*

*தழும்புற்ற தருவாகத்தான் இருந்தேன்*

*நம்மிருவர் உள்ளமும் ஒன்றாகும்வரை*

*அதன்பின்*

*கொஞ்சம் கொஞ்சமாக*

*அஞ்சல் ஒழிந்தேன்*

*நானுனைப் பார்த்ததென் பேறெனக் காண்கிறேன்*

*எத்தனைமுறை வேண்டுமானாலும் சொல்வேன்*

*என் நெஞ்சத்தொளி நீ!*

*இயலாமைகளின் புலம்பல்களில்*

*இன்னல்படுத்திவிட்டேனோ நின்மனத்தை?*

*எதிர்பார்ப்புகளும்*

*எதிர்காலமும்*

*எரிதழலில் சுள்ளிகளை எறிந்து*

*இளித்துக்கொண்டிருக்கின்றன*

*உன் துன்பங்களை*

*எனக்களிக்கக் கேட்கும் நானே*

*நீ துயருறக்*

*காரணமாகின்றேனோ?*

*பிரிவுதரு வலியால்*

*பிதற்றிக்கொண்டு திரிகிறேன்*

*பித்தும் சித்தும்*

*என்னைப் பாடாய்ப் படுத்துகின்றன*

*நம் நேயம்*

*யாருடைய அன்பு பெரிதென்று*

*ஆராயவில்லை*

*யாருடைய துன்பு பெரிதென்று*

*அல்லலுறுகின்றது*

*மௌனங்களை*

*எழுத்துமூட்டையில் கட்டிவைக்கிறேன்*

*நீ திறந்து பார்க்கையில்*

*என்னிலையை*

*யானறியேன்...*

*ஏராளமானவர்கள் உண்டிவ் வுலகில்*

*எத்தனையோ கண்டங்கள், நாடுகள்*

*பற்பல பற்பல பற்பலர்*

*அப்படியிருக்க*

*நம் நெஞ்சத்தும் உயிருள்ளும்*

*நாம் புகுந்த வியப்பென்னை?*

*பல்லாயிரம் ... அன்றுஅன்று*

*பலகோடி ஆண்டுகள்*

*தவம்செய்த நினைவு*

*எனக்கில்லை*

*பின் எப்படி*

*நின் அன்பு*

*என்னைச் சேர்ந்தது*

*எத்தனைமுறையானாலும்*

*என் எழுத்துக்கள் வியக்கின்றன*

*இதை நினைத்து நினைத்து*

*நீ*

*என்மீது கொண்ட நம்பிக்கை*

*என்*

*தன்னம்பிக்கையையும் கூட்டியதறிவாயா?*

*நம் நேயத்தை எண்ணிப் பெருமிதமாக*

*எனக்கு மூச்சுமுட்டும்போது*

*கண்ணீர் கண்குளத்தில் தேங்கும்போது*

*அது முத்தாக உருளும்போது*

*என் மூக்குக்கண்ணாடி முகம்விட்டகல*

*என்கைகள் நிறமில்லாத உவர்நீரைத் துடைக்கும்போது*

*அதனை இக்காகிதத்தில் இப்போது பதிக்கும்போது...*

*எனக்கு வியப்பேற்படுகிறது*

*எனக்கு... எனக்கு...*

*ஆனந்தக்கண்ணீரின் பொருள் புலப்படுகிறது*

*இஃது*

*இனக்கவர்ச்சியன்று*

*மனக்கவர்ச்சியென்று*

*மாநிலம் அறியக்கூடுமோ?*

*மதவெறியர்களறியக்கூடுமோ?*

*உன்னை எண்ணியெண்ணி*

*மூச்சுத்திணறி*

*மூர்ச்சையாகும் அளவுக்குச் சென்றிருக்கிறேன்*

*நின் குறித்துப்*

*பிறரிடம் பேசுங்கால்*

*வாயடைத்துச்*

*சொற்கள் மிடறுசிக்கி*

*அகப்பட்டுக்கொள்ள*

*அவதியுற்றிருக்கிறேன்*

*நின்னை*

*என் தோழியர்*

*'அவள்' என்றும் சொன்னாலும்*

*பெயர்சொல்லி அழையுங்கள் என்று*

*பரிதவித்திருக்கிறேன்*

*ஆனாலும்*

*உன்றன் துயர்களுக்கு*

*நானும் காரணமாயிருக்கிறேன்*

*நின்னை எத்தனைநாள்*

*காக்கவைத்துள்ளேன்*

*என்னினும் நீயன்றோ*

*அதிகம் துன்புற்றிருப்பாய்!*

*நான் இக்காகிதத்தில்*

*இறக்கிவைக்கிறேன்*

*நீயோ*

*நெஞ்சத்தில் இருத்திவைத்து*

*எத்தனை இரவுகள்*

*என்னைப்போல்*

*வாய்விட்டழவியலாமல்*

*வேதனைப்பட்டாயோ?*

*செத்துச் செத்து விளையாடும் விளையாட்டு*

*இதுதானா?*

*சிலநேரம்*

*என் நெஞ்சத்தை*

*மழுவினால்*

*இரண்டாகப் பிளப்பதுபோல் தோன்றும்*

*உன் பொறுமைக்கும்*

*மனவுறுதிக்கும் முன்னால்*

*என்னால்*

*நிற்கக்கூட முடியாது*

*நீ எனக்குச் செய்பவை*

*அன்புகாட்டுவதும்*

*நம்பிக்கைகொள்வதும்*

*வேறென்னவேண்டும்?*

*நின்னைக் காணாத பொழுதுகளை*

*வஞ்சித்துப்புகழ்வதுதான்*

*ஒரே வழி*

*முன்பொருமுறை*

*இதுபோலத்தான்*

*நின்னைப்பற்றி எழுதுகையில்*

*ஏட்டின்*

*கடைப்பக்கம்*

*இப்போதும்*

*இவ் ஏட்டின் கடைப்பக்கத்திலிருக்கிறேன்*

*என் மனப்புத்தகம்*

*திறந்துவைத்தேன்*

*படிக்க ஆளின்றி இருந்தது*

*நீயோ படித்துப் புரிந்தாய்*

*இறைவா!*

*ஈகைகொண்டு*

*தீரா அருளினால்*

*எந்நாளும்*

*எவ் அல்லும்*

*எவ் அந்தியும்*

*எவ் வைகறையும்*

*என்னவளுக்கு*

*இன்னலில்லா வாழ்வுதா*

*நின் வரத்தை வியந்து*

*அகத்தில்*

*சொல்லிலடங்கா மகிழ்வுற்றிருக்கிறான் இவன்"*

*****

**காலைப் பொழுதுகள் யாவும்**

**வேலைகளால் நிறைகின்றன**

**மாலைப் பொழுதுகள் யாவும்**

**மனம் அவளையே நினைக்கிறது**

**இரவினிலோ**

**அஃது இன்னும் கூடுகிறது**

**ஆதலால்**

**அக்கங்குலோ**

**அவனுக்கு 'நெடுங்கங்குல்'**

***"வானம்***

***குயிலின் நிறமுடுத்திக்கொண்டது***

***காற்று***

***தமிழின் தண்மையாய் வீசுகிறது***

***நாய்கள்***

***சினந்தார் சொல்லாய்க் குரைக்க***

***ஊரார்***

***கனவுத்திரைப்படம் பார்க்க***

***அமைதிக்கும் கொஞ்சம் குறைவாய்ச்***

***சத்தமாயிருக்கிறது இவ்வூர்***

*பகலிலே கண்வளர்த்துக்*

*கங்குலில் கவிவளர்க்கக்*

*காகித ஏடேந்தி*

*கவிஞனும் மனமுரைப்பான்*

*இக்கங்குல்,*

*மாலையின் மறுவடிவமா?*

*கருமையின் கொடையாளியா?*

*தூக்கத்தின் தூரத்து உறவினனா?*

*ஓரிரவு,*

*தன்னுள்*

*பலப்பரிமாணங்களைக் கொண்டது.*

*தூக்கங்களையும்*

*தூயநற் காதலர்களின்*

*பிரிவு ஏக்கங்களையும்*

*மிகுவிக்கும் இவ்இரவு*

*எத்துணை ஆழமானது?*

*ஈண்டிவன் எழுத முனைவது*

*இவ் இரவு மிகுக்கும் துயரை;*

*காதற் பிரிவின் துயரை*

*வாரங்கள் பல கடந்தன*

*வயங்கு மொழியைக் கண்டு*

*வருந்தாதோ உள்ளம்?*

*முப்பொழுதுகளிலும்*

*இப்பொழுதே*

*என்னவளை*

*இடையூறின்றி நினைக்க*

*ஏற்றது*

*அவள் நினைவு வருகையில்*

*என் மன ஊற்று சுரக்கும்*

*கவியமிழ்தம்*

*காதற்கு உரித்தாகுக*

*வால்டர்மாட்டின்[4] உயிர்போல*

*என்றன் மகிழ்வையும்*

*காதல், நண்பு, தமிழ்*

*என மூன்றிலும் ஒளித்துவைக்கிறேன்*

*(வரிசை மாறினாலும் பிழையில்லை)*

*என் கவிதைச்சாவி கொண்டு*

*என் மனக்கதவு திறமின்*

---

[4] Harry Potter என்னும் ஆங்கிலத் திரைப்படத்தில் வரும் கதாபாத்திரம்

*இன்னும் எத்தனையோ உண்டு*

*சொல்லாத செய்திகள்*

*ஒரோவழி*

*இப்பிரிவின் பாதிப்பை*

*என்னெஞ்சம் அவ்வளவாய்*

*உணர்வதில்லை*

*ஏனென்றால்*

*அவளைக் காணப்போகும் காலம் நோக்கித்*

*தவநிலையில் அஃதிருக்கும்*

*ஒரோவழி*

*இப்பிரிவு என்னைப்*

*பொழிந்துவிட்ட கார்முகில் போல்*

*ஒன்றுமில்லாமல் செய்துவிடுகிறது*

*அவளைக் கண்ட பொழுதுகள்*

*அவளைக் காணவும் பேசவும்*

*நனிமிகும் உயிர்த்தூண்டல்*

*கட்டளையிடும் மூளையைக்*

*கட்டிப்போட்டுவிட்டு*

*தானாக வாய்மொழியும்*

*தண்டமிழ்ச் சொற்சேர்க்கைகளைக்*

*காற்று கேட்டுப்போகிறது*

*யானொரு*

*வானொலி நிலையமாய் இருந்திருந்தால்*

*என் பாட்டையெல்லாம்*

*அவள் காதறியச் செய்திருப்பேன்*

*கவிதைகளும் கடிதங்களும்*

*கற்றதமிழ்ச் சொற்குவைகளல்ல*

*காதற்றமிழ்ச் சொற்குவைகள்*

*இவ் இரவு*

*காற்றைத் தள்ளிய அமைதி*

*கூச்சல் ஒழிந்த தனிமை*

*களங்கம் மறந்த நெஞ்சம்*

*காகிதம் நிறையும் கவிதை*

*காதலின் நினைவில் யான்*

*இதே இரவில்*

*அவள் தன் இல்லில்*

*என் செய்துகொண்டிருப்பாள்?*

*மின்விசிறியின் தாலாட்டில்*

*தூங்குவாளோ?*

*தன்னுயிரினைக் காணாது*

*ஏங்குவாளோ?*

*தன் துயிலினைச் சில்நேரம்*

*நீங்குவாளோ?*

*முன்பயிலிய நினைவுகளைத்*

*தாங்குவாளோ?*

*எண்ணித் துடிப்பாளோ?*

*கண்ணீருகுப்பாளோ?*

*என்னைப்போல் தானும்*

*முன்னின்று உரையாடும்*

*நன்னேரம் எதிர்நோக்கிக்*

*காத்திருப்பாளன்றோ!*

*முற்றும் மறைந்த வெண்மதியை*

*உடைய நாள் இன்று*

*ஓ!*

*நாளன்று அல்*

*எத்தனை எத்தனை இரவுகள்*

*உறங்காமல் விழித்திருப்போம்?*

*உறங்குவது விதியா?*

*எம்மனோர் உயிர் வதைத்து*

*உறங்குவதும் விதியா?*

*இரவை நான் வரவேற்கிறேன்*

*என் வானம் வருக அது*

*என்னவளின் நினைவிலெனை வாட்டும்*

*மாலையின் பின்னோடி*

*வருகும் இரவை வரவேற்கிறேன்*

*குறுந்தொகைத் தலைவனொருவன்*

*பாங்கனிடம் சொன்னானாம்*

*காதல் துன்பம்;*

*காணாத்துன்பம் தீர வழிசொல்*

*அறிவுரை சொல்லி- இவன் மனதை*

*அனற்காடாக்காதே என்று*

*ஆனால் இவ் இரவு*

*புனலைத் தழுவிய*

*தண்ணிய காற்றினை வீசுகிறது.*

*என் நெஞ்சம் வேக, நோக*

*அறிவுரையும் சொல்வதில்லை.*

*ஆதலால் இவ் இரவு*

*என் விருந்தினர்*

*அவளைப் போலவே*

*இதனை எதிர்நோக்கலாமா?*

*இல்லை*

*அவள் நினைவுக்காக*

*இதை எதிர்நோக்குவேன்*

*ஈராண்டுகளுக்கு முன்*

*’நீ காதலை எழுதுவாயா?’ எனில்*

*’எழுதேன்!’ என்றே சொல்லியிருப்பேன்*

*ஆனால் இப்போது*

*காதல் தவிர்ந்தெதும் எழுதமாட்டாயா என்று*

*என் எழுதுகோலும் கோபிக்கிறது*

*என் எண்ணம், ஆசை,*

*இலட்சியம், கனவு, ஆவல்*

*எனப் பலவிருப்பினும்*

*அவற்றுள் மிக அழகான ஒன்று*

*எஞ்ஞான்றும்*

*என்னவளின் அகநக*

*அதனை வழிமொழிந்து முகநக*

*அதனில் மிகமகிழ்ந்து இவன்நக*

*இவையெல்லாம் நிகழல்வேண்டுமென்பது*

*நான்*

*அவளுடைய*

*மௌனமுகங்களைக் கண்டதே அதிகம்*

*அவள் புன்னகை*

*உள்ளத்திலிருந்து*

*என்றென்றும் ஊற்றாக வரவேண்டும்*

*என் உள்ளம் சொன்னேன்*

*இதையடுத்து எம்வாழ்வில்*

*இனி அவ் இறைவன்தான்*

*விடியல் தரவேண்டும்*

*பிரிவின் துயர்மிகுக்கும்*

*இந்நெடுங்கங்குல்*

*உண்மையின் ஒளிப்பரிதி எழ*

*விடியலாகத் தேவை!*

*பற்பல ஏடுகள் பதங்கள் நிறைத்து*

*எழுதுகிறே னென்ற நெஞ்சுள யாவும்*

*நீயோ!*

*என் நெஞ்சத்துறைந்தனை*

*காலமோ நத்தையாகிறது*

*அதன் மீதேறி சவாரி செய்கிறேன்*

*நின்னைக்காண...*

*நீயோ!*

*என்னிடம் எதுவும் கேட்கவில்லை*

*என் தொலைபேசி எண் தவிர,*

*அதையும் கொடுக்க வழியின்றி*

*அல்லலுறும் என்னிலை*

*ஏடெழுதித்தீராது*

*நீயில்லாத இவன்*

*நீரில்லாத மண்*

*என்றோ பெய்த மழையில்*

*கள்ளிகளைச் சுமக்கும்*

*காய்ந்த மண்*

*நீ எழுதிய எழுத்துக்களில்*

*இக்காகிதம்*

*உயிர் பெற்றது*

*நம்மைக்*

*காத்திருப்பில் வீழ்த்துவது*

*அவ் இறைவனின்*

*எப்போதுமான விளையாட்டு*

*பொறுமைகாத்துப்*

*பொறுமைகாத்துப்*

*பொசுங்கவிருக்கும் நெஞ்சைத்*

*தக்க பொழுதில்*

*தணிவிப்பான் அவன்*

*ஆனாலும்*

*காத்திருத்தல் என்பது*

*கவிஞனின் கண்ணீரைக்*

*கவிதையாய் உருமாற்றிவிடும்*

*என்றன் இயலாமை எண்ணிக்*

*கண்ணீர் வடிப்பதை விட*

*இப்போழ்தி யான்*

*எதுவும் செய்திடும் நிலையிலில்லை*

*உனதின்பம் எனதானபின்*

*உன்துன்பம் நமதானபின்*

*இருவரும் பங்கிடுகிறோம்*

*காலத்தின் கோலமான*

*காத்திருப்பை*

*உன்னைக் காணாதபோது உடையும் நெஞ்சம்*

*உன்னைக் காணப் போவதெண்ணி இணையும்*

*உடைவதும் இணைவதுமாய்*

*நம் நெஞ்சம்*

*உடைப்பதும் இணைப்பதுமாய்*

*அவ் இறைவனும்*

*நீளும் பிரிவினை விடவும்*

*வாழும் காலம் நீளும்*

*நம்பு!*

*ஏனெனில்*

*வருந்துவதை விட*

*நம்பிக்கையுடன்*

*காத்திருப்பது மேல்*

*நலமே விளையும்!*

***

**அன்றொருநாள்**

**அவன் அவளைக் கண்டு**

**அக்காகிதப்புறாவைக்**

**கைகளில் வாங்கிக்கொண்டான்**

**ஆனாலோ**

**அவள் கண்ணில்**

**வருத்தம் படிந்திருந்தது**

என்னென்று கேட்பதற்குள்

எஃகெருமை வந்துவிட்டது

அவ் ஏடு வாங்கிப்போய்

அவன் பிரித்துப் படித்தான்

அவளது முகக்குழப்பமோ

அவள் எழுத்தில் வெளிப்பட்டிருந்தது

ஒர் பெண்ணின் மனம்

பிறரால் புரிந்துகொள்ளப்படாமல்

புண்படுத்தப்படுவது பற்றிப்

பொறிந்து தள்ளியிருந்தாள்

ஒருசில

வினாக்களுக்கும்

விடை தருகெனக் கேட்டிருந்தாள்

வாழ்க்கை பற்றியும்

வாழ்க்கைத் துணை பற்றியும்

அவளெழுதியிருந்த எழுத்துக்களுக்குள்

ஏதோ புதைந்திருந்தது

**அவள் கேள்விகளுக்கு விடையிறுத்து**

**அவன் உள்ளமும் எழுத்தமைத்துப்**

**பன்னாட்குப் பின்னர்த்**

**தன்னவளிடம் தந்தான்**

*******

**பருவத்தேர்வுகள்**

**விடுமுறைகளுக்குள் ஒளிந்துகொண்டன**

**அவளைக் காண்பதற்கான நிகழ்தகவு**

**குறைந்து கொண்டேயிருந்தது**

**அவளின் பிறந்ததினம் என்று**

**அழைக்கப்பட்ட தினம் அன்று**

**அவளும் தன் இல்லில் இருப்பாள்**

**காணாதபோதும்**

**நல்லாளின்**

**குரலேனும் கேட்கவியலுமன்றோ?**

**பொதுத்தொலைபேசி தான்**

**ஒற்றை வழி**

**தன்னிடத்து மிச்சமிருந்த**

**சில நாணயங்களைச்**

**சேகரித்துக்கொண்டு**

**அவ்இடம் ஏகினான்**

**மிகத்துடிக்கும் நெஞ்சுடன்**

**ஒலிவாங்கியும் ஒலிப்பெருக்கியும்**

**ஒன்றுகூடிய ஒரமைப்பினைத்**

**தன் வாயருகும் காதருகும் பொருத்தி**

**ஒற்றை ரூபாய் நாணயத்தில்**

**ஒன்றை எடுத்து**

**குறுந்துளையில் செலுத்தினான்**

**பத்து எண்ணையும்**

**பார்த்துப் பார்த்து உள்ளிட்டபின்**

**சென்றது அழைப்பு**

***"முன்பே வா!***

***என் அன்பே வா!***

***ஊனே வா!***

***உயிரே வா!"***

**அவன் நெஞ்சம்**

**எரிமலைக் குழம்பில்**

**விழுந்து தவித்தது**

**அழைப்பு ஏற்கப்பட்டது**

**ஆறுமுறை**

**’ஹலோ’ என்றான்**

**அதன்பின்**

**இணைப்பு துண்டிக்கப்பட்டது**

**மீண்டும் முயற்சித்தான்**

**இம்முறையும்**

**அதே அழைக்குநர் கேளொலி**

**இம்முறையும் அழைப்பு ஏற்கப்பட்டது**

**இணைப்பில் ஏதோ கோளாறு போலும்**

**ஒருவரின் குரல் மற்றொருவர்க்குக் கேட்கவில்லை**

**அவன் நொறுங்கிவிட்டான்**

**ஆனாலும்**

**இருந்த நம்பிக்கையைத் திரட்டிக்கொண்டு**

**மூன்றாம் முறை முயற்சித்தான்**

இம்முறை அழைப்பு ஏற்கப்பட்டது

மறுமுனையிலிருந்து வந்த அவளுடைய குரலில்

அத்துணைத் தளர்ச்சி தெரிந்தது

பொதுவெளியென்பதால்

பொங்கிவரும் கண்ணீரை அடக்கிப்

பே…சி…னா…ன்…

”நானே பேசுகிறேன்

நினக்கு என்றன் பிறந்தநாள் வாழ்த்துக்கள்”

”நன்றி”

”நின் குரலில் ஏன்

இத்துணைத் தளர்வு?

என்னவாயிற்று?”

”ஒன்றுமில்லை…

சற்று உடல்நலம் சரியில்லை…”

நடுவில் வந்த இருமல்கள்

அவளைப் பேசவிடாமல் செய்தன

**”அப்பபடியா?**

**உடலை நன்றாக கவனித்துக்கொள்**

**உனக்குப் பிறந்தநாள் வாழ்த்துச் சொல்லவே**

**அழைத்தேன்**

**நீ ஒய்வெடு”**

**”ஒரு நிமிடம்,**

**இஃது உன் எண்ணா?”**

**ஆற்றாமை அவன் கழுத்தை இறுக்கியது**

**”இல்லை,**

**பொதுத் தொலைபேசியிலிருந்தே பேசுகிறேன்”**

**”அப்படியா…? சரி…”**

**”உடலை நன்றாகப் பார்த்துக்கொள்**

**ஒய்வெடு…”**

**அழைப்பைத் துண்டித்தான்**

**அதற்கு மேல் காசும் இல்லை**

**கண்களில் நீர் ததும்பியது**

**கால்களில் நடை நடுங்கியது**

**காகிதத்தில் எழுதும் கவிதையோ**

**கதறித்துடிக்கிறது**

***"இறைவா! என் இறைவா!***

***என் இறைவா! என் இறைவா!***

***கண்ணீரைக் காகிதத்தில்***

***மையாய்ப் பதிக்க***

***முற்படுறேன் என் இறைவா!***

***என் இறைவா!***

***வருந்துயர்களும் வருத்துந்துயர்களும்***

***கொடுந்துயர்களும் பிறதுயர்களும்***

***தந்திடு எனக்கேயென***

***வேண்டினனன்றோ!***

***என் இறைவா!***

***உளத்துனை நினைந்து கேட்பதெல்லாம் என்ன?***

***என்னவளும் நண்பர்களும்***

***உடல், உயிர், உள்ள நலத்துடன் வாழவேண்டும் என்பதுதானே!***

***இன்றோ என்னவள் குரலில்***

***எத்துணை ஏக்கமும் சோர்வும்!***

*என்றன் நெஞ்சத்தைத் துண்டாக்கிவிட்டது*

*அவள் குரலில் தெரிந்த வலிவின்மை*

*அவள்படு துயர் யாவும்*

*எனக்கெனக் கேட்கிறேன்*

*ஈயாயோ நீ?*

*என்னவளின் அகத்திலும் முகத்திலும்*

*புன்னகையே பொருந்த வேண்டும்*

*பேரருளாளா!*

*ஒவ்வொரு முறையும்*

*அவள் ஏக்கத்தோடு கேட்கும்*

*என் கைப்பேசி எண்*

*இது தான் எனத் தருதற்கில்லை*

*பிரிவுத்துயராலே பெருந்துன்பிலிருக்கிறேன்*

*அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்?*

*அவளுக்குச் சுரமோ?*

*எனக்கும் இப்பிரிவு கொடுஞ்சுரம்*

*என்துன்பு தாங்குவ னெஞ்ஞான்று மென்னவள்*

*துன்புறற் றாங்க லிலன்*

*என்னவள் துன்பு மெனக்கீவாய்; என்னவள்*

*இன்பினை ஏந்தி வளர்*

*உண்மையாய்க் கொண்ட பெருங்காத லெஞ்ஞான்றுங்*

*கண்ணுகும் தன்னினை துன்பில்*

*உயிர்துடிக்கக் கேட்கின்றேன்!*

*உளம் கலுழக்கேட்கின்றேன்!*

*உடல்விதிர்க்கக் கேட்கின்றேன்!*

*என்றன் இறைவா!*

*என்னவற்கு நலமே அருள்வாய்!*

*என் மலரை என்றும் வாடாது பாதுகாப்பாய்!*

*என் மலரை என்றும் வாடாது பாதுகாப்பாய்!*

*என் மலரை என்றும் வாடாது பாதுகாப்பாய்!*

*

*என்னவளே!*

*என்றும் உணர்வாயாக!*

*உனக்காய் வருந்த*

*ஒருயிர் இம்மண்ணில் உண்டு*

*எஞ்ஞான்றும்...*

*நான் என்ன எழுதுவது?*

*என் உயிரே ஊசலாடும்போது*

*என் பேனா மட்டும்*

*இன்பத்தையா பிறப்பிக்கும்?*

*இஃதுன் எண்ணா?" என நீ கேட்கும்*

*ஒவ்வொரு முறையும்*

*என்னுயிர் தன்னையே வெட்குகிறது*

*நம்மிருவரின் துயரை*

*இன்னும் அவன்*

*வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கிறான்*

*என் நெஞ்சம் நொடிந்தது கூறிய வண்ணமிருக்கிறேன்*

*நின் நெஞ்சத் துயரும்*

*இதனின் மிக்குப் பொங்கியிருக்குமன்றோ?*

*நல்லதாய் எண்ணப்படுமொரு நாளில்*

*நானுனக்குத் தொல்லையளித்துவிட்டேனா?*

*என் மனக்குமுறல் கேட்டு*

*எரிமலைகளும் இரங்கும்*

*என்னிறைவா!*

*நீ இரங்காயோ!*

*இரங்குவை!*

*மீண்டும் மீண்டும் கேட்கிறேன்...*

*இறைஞ்சுகிறேன்...*

*என்னவட்கு நலம்தா!*

*என்னவட்கு நலம்தா!*

***

**சுட்ட சூரியன்**

**மலைகளுக்கப்பால்**

**சுருண்டு விழுந்து**

**மாலை வந்தது**

**ஆற்றாமையால் கவியெழுதும் கோல்**

**அவளைத்**

**தேற்றுவதற்காய்க் கவியெழுதித்**

**தவித்து வேண்டியது**

**அவ் இறைவனிடம்**

*”என்றனிறைவா!*

*என்றனிறைவா!*

*என்றன்மலரின்*

*துன்பமறுப்பாய்!*

*என்றனிறைவா!*

*என்றனிறைவா!*

*என்றன்மலர்க்கே*

*இன்பமளிப்பாய்!*

*அன்றில்களிங்கே*

*அல்லலுறுங்கால்*

*துன்பினைத்தந்தே*

*எம்மைவதைத்தாய்!*

*கண்ணின்மணியாள்*

*நெஞ்சத்தொளியாள்*

*என்றனுயிராள்*

*துன்பமுறவோ?*

*வெண்ணெயுணங்கல்*

*கண்டுதவித்தும்*

*காக்கக்கரம்நா*

*இன்றித்தவித்தேன்!*

*இன்னல்தருங்கால்*

*என்னைநினையே!*

*என்னவளுக்கேன்*

*இன்னலளித்தாய்?*

*உள்ளத்தொளியாள்*

*கள்ளந்தவிர்த்தாள்*

*இன்பினைக்கண்டே*

*இன்பமுறுவேன்!*

*துன்புகேட்கினும்*

*நெஞ்சதுதுண்டாய்*

*சென்றிடுமன்றோ*

*என்றனிறைவா!*

*என்றன்மலரின்*

*இன்னலெரிப்பாய்!*

*என்றன்மலர்க்கே*

*இன்பம்நிறைப்பாய்!*

*உள்ளத்துளதைக்*

*தெள்ளியறியும்*

*நல்லிறைவனே!*

*நன்மைபுரிவாய்!"*

**உயிருருக இதைப்பாடி இறைஞ்சினான்**

**முடிவினில்**

**அவன் நெஞ்சம்**

**அவன் எண்ணாத வரியை உணர்ந்தது**

***"எவ்வந்தவிரே!***

***எவ்வந்தவிரே!***

***உன்றன்மலரின்***

***இன்னல் மிகுக்கேன்!"***

**பருவத்தேர்வுகள்**

**பறந்துபோயின**

**வகுப்புகள் திறந்தன**

**வண்டமிழ் பயின்றனன்**

**அஞ்ஞான்று**

**உள்ள துயரோ**

**உள்ள மெரிக்க;**

**ஒரிடம் ஒதுங்கி**

**ஒண்டமிழால்**

**நேகொண்ட நெஞ்சில்**

**நோமிக**

**யாப்படங்கா நற்றமிழியற்றினான்**

***”நோமென் நெஞ்சே!***

***நெடுங்காலம் நல்லாளைக் காணாக் கடுந்துயரான்***

***நோமென் நெஞ்சே!***

***குரலீனக் குரல்கேட்டுப் பின்னோர் மொழியுங் கேளாமையான்***

***நோமென் நெஞ்சே!***

***நெஞ்சுகு உதிரம் நிறைந்துமனம் நிரம்பற்கண்டு***

***நோமென் நெஞ்சே!***

***ஒளிதந்த ஒர்மலரைக் கண்காணா தவள்குரலைச் செவிகேளா வெந்துயர் மிக்கு மிக்கு மனம் வருந்தி நாளல் யாவும் நரகுவீழ் துன்பு நிறைந்து நிறைந்து நல்லாயுள் வறிதுகழிய வருந்தி உள்ளம் உயர்ந்தோளை உள்ளி உள்ளி ஆற்றாமைப் புலம்பி லாழ்ந்து அழுகணீரும் வெளிவராமையான் அகந்தொறுஉம் அல்லன் மிக்கு மிக்கு நனிமிகுந்து யாதுஞ்செய இயலேனாய்க் கையறு நிலையெய்திக் கலங்காநின்று நேயம் மிகுந்து உயிர்மருக மன்னு தமிழால் மனனிறைந்தாளின் நினைவு மாசற எழுதி இன் தமிழ் எழுத்தெல்லாந் தீர்ந்து சொற்கள் வறளினும் மனத்தொடுயிர்படு வெந்துயர் யாவும் தீரவும் வழி யாதோ? நோகேல்! என்றென் மனத்தேற்றத் தக்க மொழிகள் யாவுள? உயிருருக்கும் பெருந்துன்பைக் கடப்பதியாங்ஙனம்? தமிழ்கற்கும் நன்னேரம் மனம் நெகிழும்; அவள் நினைவு வரினஃதெவ்வம் படரும்; உணர்வுரைக்க உறுதுணையாகிய உன்னதத் தமிழே! நோமென் நெஞ்சுதேற்ற நல்லாளின் குரலோ காட்சியோ கேட்கின்றேன்! காணாதி யாமுறும் கலுழ்வெல்லாங் காணாமலிருக்கின்றனையோ? இறைவ! நலம் விளையும்! யாமிணைவோ மென்பது நல்லுறுதியாயிற்றெனினும் என்னவளின் நிலையறியா இக் கொடுஞ்சூழலில் நஞ்சுநிறை காலச்சுழலில் நேரக்கழிவில் நோகுமெம் நெஞ்சு கொஞ்சம்***

***மகிழ்வெய்த ஆறுசெய்யாயோ? அகிலம் படைத்தோனே! அல்லலுற்றெரிநெஞ்சுத்தீத் தணிக்கத் தக்க ஆறுரையாயோ? நிகழ்வன நெஞ்சறியா தழிகிறது! நரகுநிறை தீத்துன்பினின் றெம்மை மீள்! அன்றேல் என்னைக் கொன்றென்னாவி கொள்! அவளில் வாழ்வை அணுவளவும் வேண்டேன்!"***

****

**கலுழ்ந்திருந்த கவிஞனின் நாட்களில்**

**அவள் துன்புக்குக்**

**காரணம் என்னென்று**

**எண்ணி இடர்ப்படுங்கால்**

**அவளுக்குக்**

**கண்பட்டிருக்குமோ என்று**

**கவிஞன் நினைத்தான்**

**அப்படியென்றால்**

**அவன் கண்தான் பட்டிருக்கவேண்டும்**

**அன்புடைய நெஞ்சம்**

**அஞ்ஞானத்துக்கும் அஞ்சியது**

**பேச்சுமொழியினும்**

**பேரிறைவனை வேண்டினன்**

*”கண்ணுப்பட்டுச்சோ! - என்*

*கண்ணுப்பட்டுச்சோ!*

*கண்ணியமானவளே! - ஒனக்குக்*

*கண்ணுப்பட்டுச்சோ!*

*கொரலுல சக்தியில்ல - ஒன்*

*ஒடம்புக்கு என்னபுள்ள?*

*பாவிஎன் கண்ணுப்பட்டு - ஒன்*

*தேகமது நொந்திடிச்சோ?*

*ஒன்னநான் பாக்காம*

*என்உசுரு நோகுதம்மா!*

*என்னநீ பாக்காம*

*ஒன்ஒடம்பு நொந்திடிச்சோ?*

*பக்கத்துல நானிருந்து*

*பாத்துக்கிட தோதுமில்ல*

*அக்கரைக்குப் போறதுக்கு*

*ஆத்தினிலே தோணிஇல்ல*

*சாமிகிட்ட வேண்டிக்கிறேன்*

*சங்கடம் திரும்புள்ள*

*தாயி - என் ரெண்டாந்தாயி*

*தவிப்பத் தீருமய்யா!*

*சொகத்தத் தாருமய்யா!*

*சோகத்தத் தீருமய்யா!*

***

**நீடுதுயில் நீக்கப் பாடிவந்த நிலாவின்**

**நற்றமிழ்ப் பாக்களை**

**நெஞ்சழிந்தோன் படித்திருந்தான்**

**"கண்ணம்மா என் காதலி" எனும் பாடலின்**

**ஓசை நயமோ**

**உயிரைத் திருடவே**

**ஒரு கவி புனைந்தனன்**

*" களையிழந்த தென்முகமே! கவினிழந்த தென்மனமே!*

*ஒளியிழந்த தென்மதியே! நகையிழந்த தென்கவியே!*

*புகழிழந்த மன்னவன்போல் அழியுமென்றன் ஆவியெல்லாம்*

*நிகழுமிந்தக் காலமெல்லாம் நெருப்பென்றிங் காகிடுமே!*

*கவிதைகளில் சோகங்களே எழுதிமிகத் தேய்ந்திருக்கேன்*

*புவியிலுனைக் கண்ணிரண்டால் பார்த்திடின்மிக்*
*கின்புறுவேன்*

*நவையிலாநங் காதலிலே இனையபல சோதனைகள்*

*குவைகுவையாய்ச் சேர்ந்ததிலே சிந்தைதனில் பேரழுகை*

*எழினிறைத்த தேன்தமிழில் எனதுயிரின் வாட்டமெல்லாம்*

*கழிநிறைத்தேன்; காய்மதியும் இருவிழியை வாட்டுதடி*

*மொழிபரிய பல்துயர்கள் அழிக்குதடி என்னகையை*

*கழியுமென்றன் வாழ்வினிலே படருகின்றன் எவ்வமெல்லாம்*

*காயங்களு மௌதடமும் காதலிலே உண்டறிவேன்*

*நேயங்களின் திண்மையினை நல்லிறைவன் சோதிப்பனே!*

*தூயமனங் கொண்டவளே! நின்னையுமீங் கென்னையுமே*

*மாயமன்ன வெந்துனியில் சேர்த்தியின்னும் மீட்டிலனே!*

*வேதம்படித் தார்பலரே; நீதமுணர்ந்தார் சிலரே!*

*காதல்புரிவார் பலரே; கற்பையடைவார் சிலரே!*

*ஏதமில்லை என்றிடினும் நாதனவன் ஏன்நமக்கு*

*வேதனைகள் ஈந்திருக்கான்? வெளியில்வரும் நாளறியேன்*

*எம்மதத்தி லேதமில்லை; எம்மதத்தி லேற்றமில்லை?*

*சம்மதிக்க மானுடர்க்குச் சத்துமில்லை, திராணியில்லை!*

*நீபெரிதா? நான்பெரிதா? என்றுதினம் போரிடுவார்*

*தீபெரிதா யானபின்னே கண்களின்றிப் போய்விழுவார்*

*சீழ்பிடித்த நெஞ்சங்களில் சிந்தனைகள் சீர்மையில்லை*

*கீழ்மைகளும் மேன்மைகளும் சொல்லுவதில் பேதமில்லை*

*ஆழ்ந்திருக்கும் பேரிருளில் அன்றிலென்ன ஆந்தையென்ன?*

*சூழ்ந்திருக்கும் யாவையுமே செம்மையில்லை யேஇவர்க்கே!*

*நல்லிறைவன் ஏகனென்றால் நானிலத்துக் கேபொதுவாம்*

*சொல்லிப்பல ரோய்ந்தபின்னும் உள்ளத்தினி லேற்றிலரே!*

*அல்லனிறை வாழ்வில்பிறர்க் கல்லலளிப்பார் தமரின்*

*அல்லவைகள் நீக்கலில்லா தடுத்தவரை நோகடிப்பார்*

*எத்துணையென் ஏட்டினிலே எழுதிக்குவிப் பேனிறையே?*

*செத்துச்செத்து நான்பிழைத்தேன் சீர்மையினைக் காணவில்லை*

*முத்துமுதற் பல்பொருளா முன்னவநினைக் கேட்டேன்?*

*கத்திக்கத்திக் கேட்டனனென் நல்லொளியைக் கண்காட்டே!*

*சித்தனெனப் போனஎன்னைப் பித்தனைப்போல் ஆனஎன்னை*

*இத்தமிழேய் காதலிலே புக்கவைத்தோன் நீயலவா?*

*நித்தமுனைப் போற்றிடினும் நெஞ்சமுருகா தெமக்கே*

*மெத்தமெத்தச் சோதனைகள் மிக்களித்த தேனிறையே!*

*அக்கரைக்குத் தூதுவிட அன்னங்களு மேதுமில்லை*

*எக்கரையில் நானிருக்கேன் என்றுமின்னுந் தோன்றவில்லை*

*மிக்கதுய ரில்துனியில் புக்குளஎம் வாழ்வினைநீ*

*தக்கவழியில் கரைசேர் நல்லிறைவனே! முதல்வா!"*

***

## கையெழுத்துப்பிரதியும் தொலைந்த கவிதை

**காணாது பலகிழமை கடந்தோடிற்று**

**கைப்பேசியும் வந்ததவன் கைக்கு**

**தன்னவளின்**

**தொலைபேசி எண்பதித்து**

**ஏக்குறு மகிழ்வுடன்**

**செவிவைத்தான்**

**அழைப்போ செல்லவில்லை**

**பன்முறை அழைத்தான்**

**அஞ்ஞான்றும்**

**மறுமுனையில் குரலில்லை**

**முன்பு கேட்கும்**

**அழைக்குநர் கேளொலியும்**

**இப்போது கேட்கவில்லை**

***

**அடுத்தநாள்**

**காலைக் கல்லூரிப் பொழுதொன்றில்**

**அவ் எண்ணுக்கு அழைத்தனன்**

**ஆனால்**

**ஓர் கணினிக்குரல்**

**"நீங்கள் தொடர்புகொண்டுள்ள வாடிக்கையாளர்**

**தொடர்பு எல்லைக்கு அப்பாலிருக்கிறார்" என்று**

**மும்மொழியில் மொழிந்து**

**முடிந்துபோயிற்று**

**"குரல்கேளாக் கடுந்துயர்நீக்கக்**

**கைப்பேசி கிடைத்ததெனக் கொண்டால்**

**என்னை இது?**

**இன்னும் இன்னல்படுத்துகிறதே!**

**என்னவாயிருக்கும்?"**

**என்று பல எண்ணினான்**

**முன்னொருநாள்**

**தன்னவளைக்காணத்**

**தக்க வழி சொன்னவனுக்கு**

**அழைப்புவிடுத்தான்**

**அழைப்பை ஏற்ற அவன்**

**நலமில்லாதிருந்தவனிடம்**

**நலம் விசாரித்தான்**

**”என்னவளைப் பற்றித்**

**தகவலேதுந் தெரியுமோ?**

**அவளை அழைத்துப்பேச**

**அழைப்புச் செல்லவில்லை”**

**என்று**

**பதறும் நெஞ்சுடன் கேட்டான்**

**எதிர்முனையில் இருந்தவன்**

**இது சொன்னான்:**

**”அவளுக்குத் திருமணமாகிவிட்டது”**

**கேட்டவன் குலைந்தான்**

**”ஏய்!**

**பொய் சொல்லாதே!**

**விளையாட்டு விடயமன்று இது!**

**உண்மையைச் சொல்”**

**”நான் ஏன் பொய்சொல்லப்போகிறேன்?**

**நின் மீது ஆணை!”**

**”வேண்டாமடா!**

**உண்மையை மட்டும் சொல்!”**

**"எத்தனைமுறை சொல்வது?**

**அவளுக்குத் திருமணமாகிவிட்டது!"**

**அழைப்பு துண்டிக்கப்பட்டது**

**மெய்யும் உயிரும்**

**மிதந்தன தீமிசை**

**சொல்லும் குளறின**

**செய்கையும் குலைந்தனன்**

**கண்ணீர் மட்டும்**

**கண்விட்டு வரவில்லை**

**அவன் சொன்னது**

**பொய்யாகவும் இருக்கலாம்**

**மதியம் ஒருமுறை பேசுவோமென்று**

**மனது நினைத்தது**

**நெஞ்சின் அணுவெலாம்**

**கவலை கொண்டது**

**முகமெல்லாம்**

**இறுகிப்போனது**

**முழு உடலும் விதிர்விதிர்த்தது**

**கண்ணெல்லாம் சோகம்**

**உயிரோ**

**ஓடிவிட ஆயத்தமாயிருந்தது**

**தடுமாறி வந்து**

**வகுப்பறைக்குள் அமர்ந்தான்**

**“எவ்வம் அடர்ந்தது நின்முகம்**

**யாது ஏதோ?”**

**எனக்கேட்ட ஆசாற்கு இறை**

**என்னென மொழிகுவன்?**

**இவன் நிலைகண்ட தோழர் தோழியர்**

**என்னென்று கேட்டனர்**

**சொற்களெல்லாம்**

**தொண்டையில் அகப்பட்டன**

**கண்ணீரோ**

**கண்களில் அடைபட்டது**

**கவிதை கூடக் காணாமல்போயிற்று**

**”என்ன நிகழ்ந்தது?**

**ஏன் இடிந்துபோயிருக்கிறாய்?**

**கேட்கிறோமன்றோ!**

**கூறு நிகழ்ந்ததை”**

**”எஃது எண்ணி பயந்தேனோ**

**அதுவே நடந்துவிட்டது”**

**அழுதிடாக் குறையாக**

**அவர்களிடம் பகிர்ந்தான்**

**”அவளுக்குத்… தி…ருமணமாகிவிட்டதாம்!”**

**கேட்டவர் உளமெலாம்**

**உடைந்தது ஒர்கணம்**

**அவன் வாழ்வினில்**

**மிகத் துன்பமான நாட்களுள்**

**அது முதன்மையானது**

**பன்னாட் கனவுகள் போயின பொடியென**

**பின்னால் வருமெதிர் காலமும் இருண்டது**

**என்னென மொழிகுவன் இவனுறு துயரெலாம்**

**என்னை மொழியினும் முழுமையா காதே!**

**ஆறுதல் கூறினர் பல்லோர்**

**தேறுதல் இல்லையே நெஞ்சில்…**

**மதியமும் வந்தது**

**மறுபடி சென்றது அவனுக்கு அழைப்பு**

**இம்முறையும் பதில் மாறவில்லை**

**"நீ எத்தனை முறை கேட்பினும்**

**இஃதே உண்மை"**

**அழைப்பு முடிவுற்றது**

**குரலெல்லாம் கண்ணீரின் ஈரம்**

**பார்வையில் சோகப் பேச்சு**

**அன்று**

**அவன் அவனாகவே இல்லை**

**"பிறன் மணந்தாளை எண்ணல்**

**அறனன்று" என்று**

**தோழியொருத்தி**

**கூறாநின்றனள்**

**வெந்துகொண்டிருக்கும் நெஞ்சின்கண்**

**வேல்பாய்ச்சிற்று அச்சொல்**

**அவன்**

**தவிப்பின் உச்சத்தில்**

**உரைக்கலானான்**

**“அவளின்மேல்**

**யான்**

**யாரிடமும் வைக்காத அளவுக்கு**

**அன்பு வைத்தேன்**

**அவள்**

**என் வாழ்வெல்லாம்**

**வர வேண்டுமென்று நினைத்தேன்**

**ஆனால்**

**அவள் வந்த நாட்களை மட்டும்**

**என் வாழ்நாளாக்கிவிட்டாள்**

**இவை**

**என்றன் விருப்பம் மட்டுமல்ல**

**அவளின் விருப்பமும் தான்**

**அவள் மீது நான் கொண்ட அன்பு**

**உயிரின் ஆழத்தினின்று**

**உதித்து வந்தது**

**நீ கூறியதுபோல்**

**அவள் இன்று**

**பிறன் மனைவிதான்**

**இல்லையெனவில்லை**

**ஆனால் நான் பேரணங்குறுவது**

**அவள்**

**மணக்கோலமடைந்ததற்கு மட்டுமன்று**

**அவளைப் பிடித்த கரம்**

**மென்கரமா…**

**அன்றி…**

**வன்…கர …மா…?**

**என்று**

**அவள் இன்பம்**

**என்றன் இன்பம்**

**அவள் துன்பம்**

**என்றன் துன்பம்**

**அந்த மன்றலோ**

**அவள் விருப்பின்றி நிகழ்ந்தது**

**எந்தச் சூழ்நிலையில்**

**அவள் கழுத்தில்**

**மங்கல நாண் ஏறியதோ?**

**அவள் விருப்பிற்கு எதிராய்**

**யாது நிகழினும்**

**என் நெஞ்சம் கேட்கும்**

**அவள் உள்ளம்**

**எப்படியெல்லாம் துன்புற்றிருக்கும்?**

**அவளை உள்ளத்து அமைக்காதவனை**

**அவள் உள்ளத்து அமைத்துக்கொள்ளாதவனை**

**உறவென்று கூறற் றகுமோ?**

**இவ்வுலகோ**

**காதலை**

**ஆண்- பெண் ஒன்றிணைவுக்கான**

**கருவியாகப் பார்க்கிறது**

**காதல் என்பது**

**உயர்ந்த அன்புக்குக் கொடுக்கப்பட்டுள்ள**

**ஒரு பெயர்க்குறியீடு மட்டுமே**

**அன்பினை இதுவென்று**

**வரையறுக்க இயலாது**

**நான் அவளைக் காதலித்ததால் மட்டுமன்று**

**அவள்**

**'என்னையும்'**

**காதலித்ததால்தான்**

**இச்செய்தி எனக்குக் கொடுத்துன்பமளிக்கிறது**

**அவள் தந்த நேயத்தை**

**மறந்துவிட்டேனென்றால்**

**நான்**

**மரித்துவிட்டேனென்று பொருள்**

**அவளை**

**மரித்தாலும் மறக்கக்கூடாதென்றுகூட**

**இறைவனிடம் கேட்டிருக்கிறேன்**

***"சொல்லுதல் யார்க்கு மெளிய அரியவாஞ்***

***சொல்லிய வண்ணஞ் செயல்"***

**நான்**

**இன்வைகல் வேண்டினேன்**

**அவனோ**

**இன்னாவிலேயே நீ வைகென விதித்தனன்**

**என்துன்பு பெரிதன்று காண்!**

**என்னவளோ...**

**இங்ஙனம் கூறுவதால் நீ**

**கோபங் கொளினுஞ் சரி!**

**என்னவளோ**

**எத்துணைத் துன்புற்றிருப்பாள்?**

**என்னை அவள்**

**தன் உள்ளத்தில் வைத்த இடத்தை**

**யான் மறவேன்**

**யாம்**

**உள்ளம் பிரிந்தோம் அல்லேம்**

**உள்ளப் பிரிந்தோம்.**

**மணப்புரிவு**

**மனப்புரிவுக்குப் பின்**

**நிகழாமையால்தான்**

**பெருகுகின்றன**

**எத்தனையோ இழிவுகள்**

**அவள் உள்ளம்**

**புன்னகைகளால் நிறையவேண்டுமென்று**

**நினைத்திருந்தேன்**

**இன்னல்களால் அன்று...**

**இறுதியாக ஒன்று சொல்கிறேன்**

***அவள்***

***என்னுடனில்லை***

***அவள்***

***என்னுள்ளிருக்கிறாள்"***

***

**கவிதை எழுதும் நிலைக்கு வரவே**

**ஆயின நாள் சில**

**மனத்தின் அடியிலிருந்து**

**கைவிரலுக்கு வந்து**

**காகிதம் பதிந்தது கவிதை**

***"உள்ளம் எலக்ட்ரான் எலக்ட்ரானாகச் சிதறிவிட்ட பிறகு***

***இனியும் உரைக்க ஒன்றுமில்லை என்றாகிவிட்ட பிறகு***

***கவிதை இயற்றக் கருப்பொருள் இல்லை***

***இத்தனை நாளைய தனிமை, சுழியமாயிற்று***

*கருவறை விட்டு வெளிவந்த பச்சிளங் குழந்தை*

*பூமியின் காற்றைச் சுவாசிக்கத் திணருவது போல்*

*நானும் இப்போது திணருகிறேன்*

*அக்குழந்தையேனும் உயிர்வளிக்காக ஒலமிட்டழும்*

*நானோ*

*அதையுஞ் செய்யவியலாதவனாக இருக்கிறேன்*

*மலையின் செங்குத்துச் சரிவுக் குகையில்*

*நான் தங்கியிருந்தேன்*

*அஃது இப்போது இடிந்துவிட்டது*

*வாழ்விடம் போனபின்னும்*

*வாழ்க்கை இருக்கிறதே!*

*ஓ!*

*வாழ்க்கையும் இல்லை...*

*இனியொரு இருப்பிடம் தேட மனமில்லை*

*வெட்ட வெளியே வாழ்விடமாகுக!*

*வெறுமையே ஆடையாகுக!*

*உண்ணத் தமிழுண்டு - ஆதலால்*

*உயிர் தரித்திருக்க நியாயமுண்டு*

*இதுவரை - விவரம் தெரிந்ததிலிருந்து*

*வெட்டவெளியில் வெயில் தகிக்கக் காய்ந்ததில்லை*

*குகைக்குள் சில புதையல்களிருந்தன*

*அவையாவும் இப்போது மண்ணாகிவிட்டன*

*அக்காலக் கவிதைகளை என்ன செய்வதென*

*எனக்குத் தெரியவில்லை*

*ஒருவருக்காகவே எழுதப்பட்ட கவிதைகளை*

*இனியும் சுமப்பது (கொடுக்க முடியாதெனத் தெரிந்தும்)*

*பேதைமையா? உள்ளன்பின் உயர்தவிப்பா?*

*ஒரொளிவிளக்கிலிருந்து வெளிச்சம் தந்துகொண்டிருந்த சுடர்*

*இன்னும் அவியவில்லை.*

*பொருளல்லவரைப் பொருளாகச் செய்வது பெருக்க வழிதேடவா?*

*அன்றி*

*இருளிலிருந்து எனை மீட்கும் வழி போகவா?*

*கையெழுத்துப்பிரதியும் தொலைந்த கவிதை நான்*

*இனி யாரும் என்னைக் கண்டுபிடிக்கச் சொல்லப்போவதில்லை*

*கண்டுபிடித்தும் பயனில்லை*

*இன்னும் அழ வார்த்தையில்லை, ஆயினும் வாழ்வுண்டு - இல்லை - வாழ்வைப் போல ஏதோ - என்னவென்று தெரியாத ஏதோ...*

*இருக்கிறது எனக்கும்*

*வெட்டவெளியில்...*

*கட்டாந்தரையில்...*

*

*எனக்கோ அளவற்ற அன்பிருந்ததென்று சொல்வது பிழையாகாது*

*எனக்கு நம்பிக்கையும் அதிகமாக நிறைந்திருந்தது*

*இந்த அறிவு*

*இடியை ஒலியென்று உணர்ந்தது*

*ஆனால் மனமோ*

*முன்னமே மின்னலில் மாய்ந்தது*

*அன்பையும் நம்பிக்கையையும் மட்டும் சுமந்துப்பின்*

*இறைவனால் ஏமாற்றப்பட்டு நிற்கும் அந்த ஒன்றுமறியா மனத்துக்கு உரைக்க என்னிடம் ஆறுதலில்லை*

*என் வாழ்வால் மற்றவர்கட்குப் பயனிருக்கலாம் - ஆனால்*

*என் வாழ்வில் எனக்கென இருப்பதென்ன?*

*செத்துவிடுவோம் என்றாலும் மிரளாத மனம்*

*அன்புக்கு ஓர் அல்லலெனும்போது அலறித் தவிக்கிறதே!*

*கற்கும் நற்றமிழும் கற்கும் நல்லனவும்*

*உற்ற பெருந்துயரை உருக்கும் நண்பர்களும்*

*சிற்றாயுளில் செம்மை கூட்டட்டும்*

*

*இறந்தேன்; ஓர் வெற்றுக்கூடு*

*ஈட்டுதுமற்றெல்லாப் பொருளும்*

*உயிர்மட்டும் கூட்டில் இல்லை*

*என்னிருந்து என்பயனோ?*

*நான் கல்லாகிவிட்டேன்*

*நீ சொல்லாகிவிட்டாய்*

*உலகம் படிக்கக் காப்பியம் செய்வேன்*

*உன்னையும் என்னையும்*

*வாழ்வில் இணைத்து வைக்காத*

*இறைவனின் இரக்கமற்ற*

*எழுதுகோலின் எழுத்தாயன்று*

*நம் நேயத்தின் உயரத்தை*

*உச்சத்தில் உண்மையாய் உரைத்து*

*சுட்டிப் பெயர் கொளாத்*

*தலைவர் தலைவியருடன்*

*இன்பியல் முடிவெய்தும்*

*ஓர் காப்பியம்*

****

## பெருநேயக்காலம் 3

### இறைவணக்கம்

துடித்துக் கவன்ற துயரைக் குறைப்பிக்கப்

படிக்கத் தமிழீந்தாய் நீயே! – வடிப்பேன்

துயராலே நீஇறுத்த எங்கதையை மாற்றி

மகிழ்வில் முடியு மாறு

### தமிழ் வாழ்த்து

என்சொலினும் என்செயினு மென்னகத்தே நின்றுலவும்

என்துயரும் என்மகிழ்வும் கூறவே – என்னுடனே

என்று மிணைந்துள்ள ஒண்டமிழே! யாழநீ

என்றும் செழித்து வளர்

### என்குறள்(ரல்)

1.இடராழி வீழ்ந்தும் தொடர்வேனே ஈங்கே

அடருதே கண்ணீர்மை யாய்

2.மாய்ந்த மனத்திருந் தோயா தெழுதினேன்

தோய்ந்து தமிழி லிதை

**3.சொன்மொழியாற் கூறவொண்ணா தென்துயர மாகிடினும்**

**இன்தமிழீங் குண்டோர் மருந்து**

**4.பட்ட மரத்திற் றளிர்த்த கனவினைக்**

**கொட்டி யுரைத்தே னிதில்**

**5.என்னுயிரைத் தீய்த்திட்ட கோலில்லை; இஃதோஒ**

**என்கோ லெழுதிடு மின்பு**

## 1. இசைந்த ஈன்றோர்

**தாள்பதித்து நேர்காணா நெஞ்சின் துயரமோ**

**நாள்பல ஆகிட மிக்கு வருத்திடும்**

**ஈன்றோர் மொழிகளும் காணாத எவ்வமும்**

**ஆன்றஇக் காதலர் வாழ்வினை முள்செய்யும்**

**கொள்கையான் மாறினோர் காதலில் சேர்ந்திடின்**

**கொள்ளிவைப் பார்நெஞ்சில் சொல்லெனுந் தீயினால்;**

**கொன்றோர் இடுகுழி சேர்த்தினும்; நீயுடல்**

**தின்னெனத் தீக்களித்துச் சாம்பர் பெறினும்**

**கொள்கை இனிதென்பார் கூற்றம் துணையென்பார்**

**பள்ளம் முகடென்பார் கள்ளை அமுதென்பார்**

**மெய்க ளிறப்பதுவே சாவோ? அதுவன்று**

**மெய்யாகச் சாவென்ப துள்ளம் இறப்பதுவே**

**சாதலை நோக்காத மேதகு கண்கடாம்**

**வேதனை காண்மென நம்பலும் குற்றம்மோ?**

**பார்த்துப்பார்த் துச்செய்தேன் என்பார்; மகனு(ளு)ள்ளம்**

**பார்த்தாசெய் தாரென்றா வில்லையே, என்னிதோ?**

**சொல்லெனச் சொல்வார்எச் சொல்லையும் ஏற்றிடார்**

**’சொல்’லெனுஞ் சொல்லது சும்மா மொழிவதோ?**

**தம்முடை வாழ்நெறி தம்கையி வில்லையேல்**

**என்னஇவ் வாழ்வென எண்ணவும் தோன்றுமே!**

**அல்லன சொல்லிலன்; உள்ள துரைத்தனன்**

**இல்லை எனச்சொல்வோர் உண்டுகொல்? உண்டுகொல்?**

**உண்மைசேர் காதலை ஒர்நொடி நோக்கிடின்**

**தண்மைநெஞ் சில்தான் வரூஉம் உறுதியே!**

**சூழ்நிலை என்பரே சில்லோர்; அமைந்தநேர்**

**வாழ்நிலை என்பரே சில்லோர்; அகம்புக்க**

**காதல் மறந்திடு கென்பரே ஆயினும்**

**மோதல் மறந்திடார், என்இது நீதமோ?**

**கொண்ட மிடிமையும் கூடும் பணங்களும்**

**கொள்கைவெவ் வேறெனக் கொண்ட குழுக்களும்**

**பேய்த்தனச் செய்கைகள் நேயப் பெயரினால்**

**ஒய்ந்திடா திந்நாட்டில் பல்கிப் பெருகலும்**

**அச்சம் கொளச்செயு மீன்றோரை; ஆதலால்**

**அச்சம் கூட்டுவர் சேய்களின் நெஞ்சிலும்;**

**பொற்பு நிறைந்ததாம் காதலோ மாசிலது**

**கற்பனை தீதாக நீளப் பிரிப்பரே!**

**ஆகிடு மெண்ணம் அடுக்கி யுரைத்திடின்**

**நோகுமென் னெஞ்சமே மிக்குத் துயர்கொள்ளும்**

**பேறென எண்ணுமிம் மானுடப் பிறவிதான்**

**ஆறறி வானிதம் ஆக்குது தொல்லைகள்**

**சொன்மொழி யாவையும் வேலெனப் பாயினும்**

**பின்னதை ஆற்றும் மருந்ததும் சொல்லன்றோ?**

**வன்பொடுந் துன்பொடும் பன்மொழி கூறியோர்**

**அன்பொடு சின்மொழி சொன்னா ரவனிடம்**

**"என்னயாம் செய்குவோம்? நின்னுடை நேயமோ**

**நன்றென ஒர்ந்தனம்; எம்மிடம் அல்லது**

**பின்னிதை யாரிடம் கூறுவை? நாங்களே**

**அன்புடை நும்மையே சேர்க்கும் கடன்கொண்டோம்**

**வாடிய நின்முகம் கண்டுமே எம்விழி**

**மூடுமோ நிம்மதி யாகவே? சொல்லிடே!**

**நிற்கென வாழ்கிறோம் நாங்களே நீயோஒ**

**கற்கச் செலுமிடத்துக் காதல் வளர்த்தனை;**

**நின்கேள்வி யாவுமே நீதமே ஆகினும்**

**என்செய்வாய்? பொன்னின்றிக் கையேந்தி நிற்பையோ?**

**அன்பொன்று கொள்ள லரிதன்று; காதலர்**

**சின்னொடியும் வாடாது காத்த லரிதுகாண்!**

**காத்திருப்பீர் பன்னெடுநாள் கையிருப் பில்லாக்கால்**

**காத்திருப்பால் கொள்பயனோ? கானலென ஆகிடுமே!**

**மெய்க்காதல் நும்முடைத்தேல் காசினை ஈட்டுப்பின்**

**கைப்பிடி நல்லாளை ஈதேஎம் நல்லுரை.**

**அன்பினைக் கொள்கையாய்க் கொண்டனை ஆதலால்**

**இன்பொ டிசைவுநுங் காதற் களிக்கிறோம்**

**சின்னாள் துயரைஎம் சொல்லே சிதைத்தது**

**பன்னாள் மகிழ்வுநின் செய்கையால் எய்திடே!**

**பொல்லாத நெஞ்சினர் அல்லர்யாம்; நல்லநின்**

**எல்லாச் செயலிலும் எம்துணை உண்டுகாண்!**

**ஒப்பிடோம் என்றியாம் முன்னர் மொழியினும்**

**தப்பிலா அன்பினைக் கண்டனம் நின்கணில்”**

**என்னுமிச் சொற்களைக் கேட்டனன் ஆங்கவன்**

**அன்பிலே மிக்கவன் இங்ஙனம் சாற்றுவன்**

**”நுங்கள்சொல் யாவுமே சிந்தையி லேற்றினேன்**

**எங்களின் காதலை ஏற்றதே நும்முளம்**

**புக்கநும் நற்சொலா னெஞ்சி லுவகையே**

**மிக்கது மிக்கது மிக்கது; தக்கன**

**எக்கணந் தன்னிலும் செம்மையாய் ஆற்றுவன்**

**இக்கணம் நும்முடை வாழ்த்தினைக் கேட்கிறேன்**

**”வாழிய! நீநின்றன் நெஞ்சுள அன்பொடு**

**வாழிய! நும்முளம் சேர்ந்துபல் லாண்டுகள்**

**வாழிய! இன்பங்கள் கூடிட யாண்டுமே**

**வாழிய! பல்லோஒர்க் கீந்திடும் வாழ்வையே!”**

**ஈங்கே இவர்கள் இசைவளித் தாலுமே**

**ஆங்கவள் வீட்டிலே சொன்னன கேண்மினே!**

**”பன்னா ளமுதிடின் பாங்குடை மெய்நலம்**

**என்னதான் ஆவதோ? ஏனிதை ஒர்கில்லாய்?**

**பொன்னே போலுனைப் போற்றி வளர்த்தயாம்**

**நின்சொல் தனைமட்டும் கேட்டு நடப்பதோ?**

**நீரோ வளர்த்தனர் காதலை ஆயினும்**

**ஊரோ உறவுடை யோரோஎன் எண்ணுவர்?**

**சிந்தும் விழியின்நீர் சொல்லொடு சேர்ந்திட**

**நொந்தே உயிர்மெலி நல்லாள் வினவுவாள்**

**”ஊரோ டுறவுகள் சொல்வன கூறினீர்**

**பாரோர் மொழிக்குப் பலியாவோள் யான்கொலோ?”**

**”அங்ஙனம் சொல்லிலள் பெண்ணேயான்; ஊரோஒ**

**டெங்ஙனும் ஒட்டியே வாழ்வதே நல்லதாம்!”**

**”ஊரோடும் ஒட்டி உளமொட்டா ஒர்வாழ்வை**

**பேருக்கு வாழ்வதே பெண்ணின் பெருமையோ?”**

**”நின்றன் வினாக்கணை நெஞ்சைத் துளைக்கினும்**

**என்னநான் செய்வதிவ் வாழ்வே வறிதுகாண்!”**

**நல்லானே ஆகிடினும் நங்கொள்கை சேரானைப்**

**பொல்லாதான் என்றேஇவ் ஊர்தூற்றும்; நின்னன்பைக்**

**கொல்லவும் என்மனம் ஒப்புமோ? ஊர்ச்சொற்காய்**

**அல்லல்கள் யாவையும் தாங்கலே பெண்விதி!**

**கண்ணீ ருகுத்தேநீ உண்ணா திருந்தாலென்**

**பெண்ணே! உடல்நோமே! அன்னை மனம்நோமே!**

**”அம்மையே! அம்மையே! ஊரெலாம் ஒர்நொடி**

**நம்மொடு நின்றிடும் சென்றிடும்; ஆயின்யான்**

**வாழ்கிற வாழ்வெலாம் இன்பமும் துன்பமும்**

**வீழ்வும் உயர்வும் எனதன்றோ? நானோ**

**நுமரின் இசைவினை வேண்டினள் அன்றிப்**

**பிறரின் இசைவென்ப தென்தேவை அன்றே!**

**உளத்துள்ளான் தன்னை உறவெனக் கொள்ள**

**உளத்தினின்று நும்இசைவு நான்வேண்டி நிற்கின்றேன்**

**அன்னை இதுகேட்டார் ஆழ்ந்தார்ஒர் எண்ணத்தில்**

**பின்னர் மொழிந்தார் அவளிடம், "செல்லமே!**

**நின்றனிச் சொல்லெமக்குப் போதுமே! சில்லோர்போல்**

**அன்னையும் தந்தையும் தள்ளியோ சென்றனை?**

**நின்முகம் பூக்கினே எம்அகம் பூக்குமாம்**

**நின்னைத் துயர்க்குழி தள்ளிட ஒப்பிடோம்**

**என்னதான் ஆகுமோ ஆகட்டும் நீயூஉம்**

**நின்னவன் தன்னையே கைப்பிடி; நுந்தையும்**

**நான்சொல்லக் கேட்பார்நின் எவ்வங்கள் நீக்குதி!"**

**தேன்சொல்லைக் கேட்டவள் திக்குக்முக் காடினாள்**

**வான்பறக்கும் புள்போலே எண்ணங்கள் கூடினாள்**

**ஈன்றோரே ஏற்றபின் எத்தடை உள்ளதோ?**

**இன்பம்பல் கோடியுள் நின்றாட்கவ் அன்னையோ**

**சின்மொழிகள் நல்லதைச் சொல்வார் நலமோங்க,**

**"பூத்ததோ நின்னெஞ்சம்? பூரிப்புக் கண்டனள்யான்**

**காத்திரு நின்னன்பன் கைப்பொருள் சேர்த்தபின்**

**முன்னுள தெத்தடை யாகினும் நீங்கிடும்**

**இன்னுயிர் போன்றதாம் காதலில் நம்பிக்கை**

**சற்றும் குறைவுற லாகாதென் றேநானும்**

**கற்பித்தல் வேண்டாம் அறிவாய்நீ பெண்ணே!"**

### 2.உள்ளத்து மகிழ்ச்சியும் ஒருரையாடலும்

**உயிரிரண் டொட்டியோர் உள்ளம் வருத்தும்**

**துயரெலாம் தீர்ந்தன; துள்ளிய நெஞ்சினில்**

**ஊக்கமும் கூடிட ஊறுகள் ஓடிட**

**ஆக்கமும் ஆங்கதன் ஆறும் தெளிந்தனர்**

**நீணாள் கனவோ நனவாமென் றானபின்**

**வாணாள் இனித்தது வாழ்வு செழித்தது**

**துன்பிலும் அல்லலாம் தீயிலும் வெந்தவர்**

**இன்பிலே நீந்தினர் ஏக்கமோ நீங்கினர்**

**காத்திருப்பில் துன்பமில்லை காத்திருப்பின் இன்புகண்டார்**

**நீத்திருந்த இன்புக ணெஞ்சூறக் கண்டாஅர்**

**கண்டாரே தன்னவரைக் கண்ணிலே மீண்டுமவர்**

**கொண்டாரே மீமகிழ்ச்சி சொல்லாடும் போழ்தேஎ**

**"நெஞ்சின் பெருமகிழ்வோ சொல்லி லடங்காதே!**

**அஞ்ச லொழிந்தோம் அழகுப் பொழுதுற்றோம்**

**அன்பின் வலிமையை யாவர்தான் மாற்றுவார்?**

**துன்பம் கடந்தனம் இன்பமே என்றுமே!”**

**”என்றன் மனத்துள யாவும் மொழிந்தனை**

**தென்றல் பிறக்க நெடுவாடை போனதே**

**இன்றிப் பொழுதிலே பின்நம் எழினிறைவாழ்**

**வென்னும் நனவினுக் காகநாம் சிந்திப்போம்”**

**”நின்றன்சொல் நல்லது நீங்காத அன்பொடு**

**நன்றாக வாழ்வழி யாஅது பேசுவோம்”**

**”நல்லன ஆற்றனம் கொள்கையாம்: அல்லன**

**இல்லையென் றேநாம் எழில்வாழ்வு வாழுவோம்”**

**நம்மனம் நாம்புரிந்து போற்றலும்; மிக்கதாம்**

**நம்பிக்கை நன்மனத் தேற்றலும்; இன்சொற்கள்**

**தன்னிலே சொல்லிசை மீட்டலும்;வன்சொற்கள்**

**நன்றல என்றோர்ந்து நீக்கலும்; உண்டான**

**அன்பினில் நீரூற்றிக் காத்தலும்; துன்பினைத்**

**தென்றலாம் சொற்களில் தேற்றலும்; இன்பினைப்**

**பன்மடங் காக்கியே போற்றலும்; ஒண்ணுண்மைக்**

**கென்றும் எதிராம் ஒளிவும் மறைவும்**

**இலநம் மிடையென ஆக்கலும்; அன்பே!**

**பலதான இன்னல்கள் தோன்றினும் ஆங்கே**

**இணைந்துநாம் வென்றிட எண்ணலும்; வென்றே**

**இணையிவர் போலெவர் என்றுகாண் போரெல்லாம்**

**எண்ணி வியந்திட வாழுவோம்; வாழ்வீற்றி**

**லெண்ணி மகிழ்ந்திடு மோர்வாழ்வை வாழ்வோமே!**

**விட்டுக் கொடுப்போம் இருவரும் நம்முள்;வாய்**

**விட்டுச் சிரிப்போம்நாம் வாழ்ந்திடும் போழ்திலே!**

**வற்றுங் குளத்தினின்றும் நீங்காத மீன்போல**

**உற்றே னுனையே! நீயேஎன் வாழ்வுகாண்”**

**மீனீயென் றாலிவன் வற்றாநன் னீர்க்கடலாய்த்**

**தானாவே னேநின்றன் உள்ளத்துள் அன்புணர்ந்தேன்**

**கற்கும் தமிழ்நீயே! உள்ளத் தொளியும்நீ!**

**முற்றும் உயிரார்ந்த அன்பின் உருவும்நீ”**

**”நீயேநான் நானேநீ நீநானெனென் பேதமில்லை!**

**ஓயாநஞ் சொல்லாடல் நீள்கிறதே! ஆயினென்?”**

**”நீகற்கும் கல்விக்கு நான்பொறுப்பே; உன்னறி**

**வென்றும் வளர்த்துத லென்றன் கடனே!”**

**”இதனைநீ சொல்லவும் வேண்டுமோ? நின்னெஞ்**

**சதனையான் கண்டனள் கல்விநம் கண்ணே!”**

## 3. மன்றலும் ஒன்றலும்

**கவிதை இயற்றுவோன் காதல் மனத்தான்**

**புவியில் அறத்தொடு நற்பொருள் சேர்த்தனன்**

**மன்றல் நிகழுமந் நன்னா ளதனிலே**

**என்றும் நிலைபெறு மின்புடன் நின்றனர்**

**மன்றல் நிகழ்ந்தது மாநில வாழ்த்தொடே**

**வென்றி யடைந்ததிம் மெய்யான காதலே**

**ஒன்றினர் வாழ்விலே உள்ளமொத் தின்பொடு**

**நன்றாக வாழ்ந்தார் மகிழ்ந்து.**

***

**எழுதிமுடித்துவிட்டான்**

**இக்காப்பியம்**

**கண்ணீரின் புன்னகை**

**கவிதையாய்ப் பூத்தது**

**இன்பினன்போல்**

**கண்ணீரை மறைப்பதன்றோ**

**கலைஞனின் இலக்கணம்?**

***

## முற்றுப்புள்ளியில்லாக் காப்பியம்

**நரைத்துக்கிடந்தது தலை**

**நலிந்துகிடந்தது உடல்**

**அவன்தான்**

**மருத்துவமனைப் படுக்கையில்**

**மடியக்கிடந்தவன்**

**ஊடகச் செய்திகளோ**

**ஊரெலாம் ஒலித்தன**

**”பிரபல தமிழ் எழுத்தாளர்**

**உடல்நலக்குறைவு காரணமாக**

**மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளார்**

**உடல்நிலை மிக மோசமாக இருப்பதாக**

**மருத்துவர்கள் தெரிவித்துள்ளனர்”**

**அவனருகில்**

**அவனுடைய உதவியாளர் தவிர**

**வேறு யாருமில்லை**

**ஆம்!**

**வேறு யாருமில்லை…**

**ஊடகத்தாரைச் சந்திக்க**

**உதவியாளர் வெளிச்செல்கிறார்**

**உள்ளே**

**அவன் மட்டும் தனியே**

**ஊடகத்தாரைச் சந்தித்த அவ் உதவியாளரை**

**ஒரு பெண்மணி சந்திக்கிறார்**

**"தாங்கள் யாரம்மா?**

**என்ன வேண்டும்?"**

**"எனக்கு**

**இந்தக் காகித உறையை**

**உங்கள் எழுத்தாளரிடம்**

**கொண்டு சேர்ப்பிக்க வேண்டும்**

**செய்வீர்களா?"**

**"நீங்கள் யார்?**

**இஃது என்ன?"**

**"அஃது அவருக்குத் தெரியும்**

**இதனை அவரிடம் சேருங்கள்"**

உதவியாளருக்கோ

ஒன்றும் புரியவில்லை

நேராக அறை சென்றவர்

முற்றோய்வுக்கு

முன்னோட்டம் பார்த்திருந்தவனை

மெல்ல எழுப்பினான்

”என்ன?”

”இந்தக் கடிதத்தைத்

தங்களிடம் கொடுக்கச் சொன்னார்

ஒரு பெண்மணி”

”யாரெனக் கேட்டீரா?”

”தங்களுக்குத் தெரியுமென்றார்”

காகித உறையைக்

கைகளில் வாங்கி

பிரித்துப் பார்த்தான்

உள்ளே ஒர்

எழுதுகோலிருந்தது

**கருநிறத்தது**

**’கரு’மை நிறைந்தது**

**உள்ளிருந்து விழுந்தது**

**ஒரு தாள்**

**”இந்தக் கவிதையைப்**

**புரிந்துகொண்ட வாசகி”**

**அவனுடைய மகிழ்ச்சியோ**

**மலைமுகடுகளிலேறி**

**மேகங்களுக்கப்பால்**

**விண்ணைநோக்கிப் பயணித்தது**

**”இ... இ... இதைக் கொடுத்தவரை**

**உடனே அழைத்துவாருங்கள்”**

**”உடனே விரைந்தார் உதவியாளர்**

**அந்தப் பெண்மணி அங்கிருந்தார்**

**”தாங்களைக்**

**கவிஞர் காணவேண்டுமென்கிறார்**

**தயைகூர்ந்து வரவேண்டும்”**

**அன்னையின் ஆணையோ**

**அருஞ்சிறை வீடோ**

**அவள் கால்கள்**

**கவிஞனைக் காணச்செல்வதைத்**

**தடுக்கவியலாது**

**மூப்பெல்லாம்**

**மார்க்கண்டேய அகவையாக**

**அவள் ’தன்னவனைக்’**

**காண விரைகிறாள்**

**அன்புடன் வந்த கண்ணீர்**

**கன்னங்களில் ஒடுவதுபோல்**

**அவனைக்காண விரைகிறாள்**

**அவர்களைப் பிரித்துவைத்த இறைவனின்**

**இடர்களையெல்லாம் மன்னித்துவிட்டு**

**அவள் விரைகிறாள்**

**இறைவன் இத்துணை நாளாய்**

**மன்னிப்பு வேண்டிச்**

**சொர்க்க வாயிலிலேயே நின்றிருந்தான்**

**அவன் சொர்க்கத்தினுள் நுழையும்போது**

**அவளும்**

**தன்னவனிக்கும் அறையில் நுழைகிறாள்**

**எதையோ**

**அறிந்துகொண்ட உதவியாளர்**

**அவ் அறையைவிட்டு வெளியேறுகிறார்**

**அவனருகு சென்றாள்**

**அருந்தலைவி**

**அவர்கள் கண்ட அந்நொடியை**

**ஆயிரம் காகிதங்களாலும்**

**விவரித்திருக்கவியலாது**

**"என்னை இயற்றிய கவிதையே!**

**உன் உணர்ச்சிக்குறியாக**

**இருந்திருக்கவேண்டிய நான்**

**கேள்விக்குறியாகி**

**உன்னைத் தவிக்கவிட்டுவிட்டேன்"**

**"ஆனால் நானுனை எண்ணிக்**

**காற்புள்ளியாகவே காத்திருந்தேன்"**

**"என்னைச் சுற்றியிருந்த**

**அடைப்புக்குறிகளால்**

**பொருளில்லாச் சொற்கட்டுள்**

**திணிக்கப்பட்டேன்”**

**”நான் அறிந்தேன் அதனை**

**அன்று உள்ளம் மரித்தேன்**

**அத்துணைப் புள்ளிகளிருக்கும்**

**அவ் இரவுத்தாளில்**

**ஏதாவதொரு புள்ளி**

**என் முற்றுப்புள்ளியாகும் முன்**

**அடைப்புக்குறிகளைத் தகர்த்து**

**நாம் முழுச் சொற்றொடரானோம்**

**உனக்குக்**

**கதை எழுத ஆசையென்றாயல்லவா?**

**நீ கதையாகு**

**நான் கவிதையாகிறேன்**

**நாம் இயற்றுவோம்**

**முற்றுப்புள்ளியில்லாக்**

**காப்பியத்தை**



அன்புடை நெஞ்சம் கலந்த அகப்பாடலாதலால் புதுமையோடு மரபும் காப்பியத்துள் ஊடாடியுள்ளது. பெரும் கவிஞர்கள் பாடி மகிழும் மரபுக்கவிதை எம் மாணாக்கனின் தணியாத தமிழார்வத்தால் காதலோடு கைவசப்பட்டுள்ளது. திரையிசைப் பாடலும் கவிதையாய் ஆங்காங்கே ஒலிக்கிறது. உரைநடையும் ஒய்யாரமாய் நடையிட்டிருக்கிறது. கவிஞனின் குரலாய்க் காதல் குறள் பிறந்திருக்கிறது.

பேராசிரியர் முனைவர் இரா.கலைச்செல்வி





காதலைப் பாடாத கவிஞன் இல்லை. பள்ளிப்பருவத்தில் அரும்பும் காதல், காவியத்தின் பாடுபொருளாக இருக்கிறது. இக்காப்பியத்தினை வெண்பா, குறள் வெண்பா, ஆசிரியம், விருத்தம், புதுக்கவிதை, உரைநடை எனப் பல வடிவங்களையும் பயன்படுத்தி எழுதியிருக்கிறார். இளங்கலை பயிலும் காலத்திலேயே யாப்பைச் சிறப்பாகக் கற்றுத்தேர்ந்து காவியமொன்று இயற்றியமைக்காக இவரது முயற்சியைப் பாராட்டலாம்.

பேராசிரியர் முனைவர் மு.நடராஜன்

